உ

கணபதிதுணை.

# திருக்குற்றாலத்தலபுராணம்.

பாண்டிநாட்டுள்ள
மேலகரம்
திரிகூடராசப்பக்கவிராயமூர்த்திகள்
அருளிச்செய்தது.

இஃது
திருநெல்வேலி
சைவப்பிரகாசவித்தியாசாலைக்கதிபர்
கல்லடைக்குறிச்சி
சிதம்பரநாதகவிராயரவர்களால்
பலபிரதிகளைக்கொண்டு
பரிசோதிக்கப்பட்டு
தச்சநல்லூர்
கணபதியப்பபிள்ளையவர்கள்
குமாரர்
முத்தழகப்பபிள்ளையவர்களால்
திருநெல்வேலி
அம்பலவாணன்கவிராயரவர்கள்
கு. சிவராமமுதலியாரவர்கள்
புதூர். வள்ளிநாயகம்பிள்ளையவர்கள்
இவர்களது
முத்தமிழாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

௲௮௱௭௬ பங்குனிமீ



உ

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தசுவாமிகளருளிச்செய்த

## திருக்குற்றாலப்பதிகம்.

பண்—குறிஞ்சி.

வம்பார்குன்றநீடுயர்சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோல வண்டியாழ்செய்குற்றால
மம்பானெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள்.

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலங்
கடிகள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்
யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள். உ

செல்வமல்குசெண்பகம்வேங்கைசென்றேறிக்
கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குற்றாலம்
வில்லினொல்கமும்மதிளெய்துவினைபோக
நல்குநம்பானன்னகர்போலுநமரங்காள். ௩

பக்கம்வாழைப்பாய்கனியோடுபலவின்றேன்
கொக்கின்கோட்டுப்பைங்கனிதூங்குங்குற்றால
மக்கும்பாம்புமாமையும்பூண்டோரனலேந்தி
நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள். ௪

மலையார்சாரன்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றால
மிலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
சிலையான்மேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். ௫

மைம்மாநீலக்கண்ணியர்சாரன்மணிவாரிக்
கொய்ம்மாவேனலுண்கிளியோப்புங்குற்றாலங்
கைம்மாவேழத்தீருரிபோர்த்தகடவுளெம்
பெம்மான்மேயநன்னகர்போலும்பெரியீர்காள். ௬

நீலநெய்தல்தண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையோடாடுங்குற்றாலங்
காலன்றன்னைக்காலாற்காய்ந்தகடவுளெஞ்
சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள். எ

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழத்
தாதனமாரிருஞ்சுனைதூர்க்குற்றால
முதிலங்கைமுடியுடையக்கோனைமுறைசெய்த
நாதன்மேயநகர்போலுநமரங்காள். அ

அரவின்வாயின்முள்ளெயிறேய்ப்பவரும்பீன்று
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றால
பிரமனொடுமாலறியாதபெருமையெம்
பரமன்மேயநன்னகர்போலும்பணிவீர்காள். கூ

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தமேறிச்செவ்வழிபாடுங்குற்றால
மிருந்துண்டேருநின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
வருந்தண்மேயநன்னகர்போலுமடியீர்காள். ய

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன்
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே. கக

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தசுவாமிகளருளிச்செய்த

## திருக்குறும்பலாப்பதிகம்.

பண்—சாந்தாரம்.

திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்துதேவிபாகம்
பொருந்திப்பொருந்ாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ
ரிருந்தவிடம்வினவிலேலங்கமழ்சோலையினவண்டியாழ்செய்
குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. க

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பானம்மை
யாட்பலவுந்தானுடையவம்மானிடம்போலுமந்தண்சாரற்
கீட்பலவுங்கீண்டுகிளையினமந்திபாய்ந்துண்டுவிண்ட
கோட்பலவின்றீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே. உ

வாடற்றலைமாலைசூடிப்புலித்தோல்வலித்துவீக்கி
யாடலரவசைத்தவம்மானிடம்போலுமந்தண்சாரற்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத்தாதவிழ்ந்துபசும்பொனுந்திக்
கோடன்மணங்கமழுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. ங

பால்வெண்மதிசூடிப்பாகத்தோர்பெண்கலந்துபாடியாடிக்
காலனுடல்கிழியக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீலமலர்க்குவளைகண்டிறக்கவண்டரற்றுநெடுந்தண்சாரற்
கோலமடமஞ்ஞைப்பெடையோடாட்டயருங்குறும்பலாவே. ௪

தலைவாண்மதியங்கதிர்விரியத்தண்புனலைத்தாங்கித்தேவி
முலைபாகங்காதலித்தமூர்த்தியிடம்போலுமுதுவேய்சூழ்ந்த
மலைவாயசும்புபசும்பொன்கொழித்திழியுமல்குசாரற்
குலைவாழைத்தீங்கனியுமாங்கனியுந்தேன்பிலிற்றுங்குறும்பலாவே. ௫

நீற்றேதுதைந்திலங்குவெண்ணூலர்தண்மதியர்நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக்கடிந்தாரிடம்போலுங்குளிர்சூழ்வெற்பி
லேற்றேனமேனமிவையோடவைவிரவியிழிபூஞ்சாரற்
கோற்றேனிசைமுரலக்கேளாக்குயில்பயிலுங்குறும்பலாவே ௬

பொன்றொத்தகொன்றையும்பிள்ளைமதியும்புனலுஞ்சூடிப்
பின்றொத்தவார்சடையெம்பெருமானிடம்போலும்பிலையந்தாங்கி
மன்றத்துமண்முழவமோங்கிமணிகொழித்துவயிரமுந்திக்
குன்றத்தருவியயலேபுனறதும்புங்குறும்பலாவே. ௭

ஏந்துதிணிதிண்டோளிராவணனைமால்வரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்தசைவரிடம்போலுஞ்சாரற்சாரற்
பூந்தணறுவேங்கைக்கொத்திறுத்துமத்தகத்திற்பொலியவேந்திக்
கூந்தற்பிடியுங்களிறுமுடன்வணங்குங்குறும்பலாவே. ௮

அரவினணையானுநான்முகனுங்காண்பரியவண்ணல்சென்னி
விரவிமதியணிந்தவிகிர்தர்க்கிடம்போலும்விரிபூஞ்சாரன்
மரவமிருகரையுமல்லிகையுஞ்சண்பகமுமலர்ந்துமாந்தக்
குரவமுறுவல்செய்யுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. ௯

மூடியசீவரத்தர்முன்கூறுண்டேறுதலும்பின்கூறுண்டு
காடிதொடுசமணைக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீடுயர்வேய்குனியப்பாய்கடுவனீள்கழைமேனிருத்தஞ்செய்யக்
கூடியவேடுவர்கள்குயவிழியாக்கைமறிக்குங்குறும்பலாவே. ௰

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ணை
னம்பானடிபரவுநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவைபத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
தம்பாலதீவினைகள்போயகலுநல்வினைகடளராவன்றே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருநெல்வேலியிலிருக்கும்

தச்சநல்லூர்

மகராஜராஜஸ்ரீ

வன்னியப்பபிள்ளையவர்கள்

குமாரர்

# அழகியசொக்கநாதபிள்ளையவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

நீராருஞ்சடைமுடியுநிலவியவெண்ணீற்றொளியுங்
காராருங்கறைமிடறுங்காட்டியெனதுளநெகிழ்க்கு
மேராரும்விடைப்பாகனிணையில்விழுப்புகழ்தோற்றிச்
சீராருந்தமிழ்தழைக்குந்திருப்பாண்டிநன்னாட்டில். க

மலைவளமுமலர்ப்பழனமணக்கமழுமருதநிலத்
தலைவளமுந்தடமுல்லைத்தனிவளமுந்தரையுடுக்கு
மலைவளமுமகத்தடக்கியளகையிறுமிதுபோல
விலைவளமதெனயாருமெடுத்தறைவின்றிடப்பொலிந்தே. உ

வரிகூடமதுபமுரன்மலர்ப்பொழில்கள்புடைநெருங்கும்
விரிகூடமணிமாடமேலகரமெனுநகரி
லரிகூடப்புகலரிதாமரனருளாலவதரித்தோன்
திரிகூடராசப்பனெனுநாமச்சிறப்புடையோன். ௩

பொற்றாலமலர்த்தொடையான்புகழ்த்தொழற்கொருதோழ
னெற்றாலமினிதருந்தியிமையவரைப்புரந்தருளுங்
குற்றாலநாதர்விடைக்குழகனார்குரைகழற்கே
நற்றாலமிசையோர்க்குவிழுமுவலன்புடையோன். ௪

துன்னியவானவவிருளைத்துரந்தடியார்க்கினிதருள
மன்னியவாவடுதுறைவாழ்வரசுப்ரமண்யனெனுந்
தன்னியவானந்தகுருத்தான்றேன்றத்தன்மரபை
முன்னியவானவனருளான்முழுதுநனிதழைவித்தோன். ரு

கொக்கலையும்படியெறியுஞ்சூரியவேற்குமரனைத்தன்
ஞெக்கலையுள்வைத்தூட்டுமொளிர்குழல்வாய்மொழிபாகத்
தக்கலையுந்திருவனையானருட்செல்வப்பெருமையினு
லெக்கலையுமகிழ்ந்தேத்துமினித்ததமிழ்க்கலைக்குரிசில். சு

ஏரானவிறைபுகழாமினமலர்களவையாய்ந்து
நாரானநார்தொடுத்துநலம்பெருகப்பாமாலைச்
சீரானசிவஞானச்செழுமணமேபரிமளிக்கக்
காரானகறைமிடற்றுன்கழற்சாத்தும்பெருமையினன். எ

வேறு.

இன்னமாதவத்தோன்சூதர்சொலும்பதினெண்புராணத்
துன்னமாண்புதவுகாந்தத்துறைத்திடுந்திருக்குற்றலப்
பொன்னமார்சடையினூர்தம்புராணத்தைத்தமிழாற்பாடி
முன்னமாவுலகுக்கின்பமுதிரமுதெனத்தந்தானல். அ

தந்திடுபுராணந்தன்னைத்தாலபத்திரத்திற்றீட்டி
வந்திடுமுறைமையாலேமற்றதுபெறுவான்வேண்டி
ஞுந்திடுநிதியிலாருக்குறுவதிங்கருமையானு
முந்திடுமறிவினுலேமூத்தவர்தமக்கேயன்றி. கூ

சூரியபுந்தியில்லாக்கொடியனேன்போல்வார்க்கெல்லாந்
தேரியபடிக்குங்காலைச்சிரமங்கள்விளைதலானும்
பாரியவினையவேறுபான்மைகள்பயத்தலானு
மாரியவிவற்றையெல்லாமகற்றிடவகத்துட்டேரு. ய

வேறு.

அனம்பதிதடந்தண்பணைசெழிப்புறவானகடுகேண்டுயரியவணிவேய்
வனம்பதிதிருநெல்வேலிமாபதிக்குவடகுணபாரிசமாகுங்
கனம்பதிமதில்சூழ்தபதியம்பதிவாழ்கணபதியப்பவேள்புதல்வன்
றனம்பதியளகையாளியின்மிக்கசம்பனன்றருமசிந்தையினன். கக

சுரர்புகழ்வேளாண்டலைமையிற்சிறந்தோன்றேன்னிலமகிழ்படைத்துவச
னரனடிக்கன்புசெய்பவன்றமிழினருமைநன்கறியும்விற்பனவான்
பிரமரமுரல்பைங்குவளையந்தொடையான்பிறங்குநல்லொழுக்கமுமுடையான்
வரநதிகுலத்திற்கணிதிலகம்போன்மன்னுமுத்தழகப்பமகிபன். கஉ

இதம்பரவியவப்புராணத்தையெழுதாவெழுத்தினிலமைத்திடல்வேண்டி
நிதம்பரமானந்தக்கடற்றிளைக்குநெறியினனடாவிநிமலர்
பதம்பரசுரவோன்கல்லடைக்குறிச்சிப்பதியில்வாழ்பலகலையாய்ந்த
சிதம்பரநாதகவிசிரோமணியாற்செவ்விதினூலுண்மைதெளிய. ௧௬

பற்பலபிரதிவருத்தபுநன்றாய்ப்பார்வையிட்டாயதன்பின்னர்
கற்பகத்திருநெல்வேலிமுத்தமிழாகரவச்சிற்பதிப்பித்தாக்கதிர்கான்
நற்பகல்விளக்குமிருசுடருளமட்டங்கண்மாஞாலமெங்கணுந்தன்
பொற்பகலாதபுகழெனும்பயிரைப்பொலிவுறவளர்த்தனன்மாதோ. ௧௭

பெருமைசேரனந்தனாதியோர்தமக்கும்பேசுதற்கரியவிப்புராண
மருமைசேரச்சிலியற்றுவித்திட்டவழகியமுத்தழகப்பன்
கருமைசேரளகக்கன்னிபாகத்தக்கனந்தருகுறும்பலாநாத
விருமைசேரருளாஞ்செல்வமுமழியாவின்பமுமெய்திவாழியவே. ௧௫

---

குருவேதுணை.



கணபதி துணை

சிவமயம்

# திருக்குற்றாலத்தலபுராணம்.

## முதலாவது-தானவைபவகாண்டம்.

### காப்பு

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புயல்காட்டும்பனிவரையின்பிடிதழுவுஞ்சிவவேழம்பொருப்பில்வானி
வியல்காட்டுமிருபிடிசேர்முந்நாலுதுதிக்கையன்முன்னின்றஞானச்
செயல்காட்டுமொருகோட்டினிருகோட்டுவெண்பிறைவாழ்செக்கர்வானை
மயல்காட்டுந்திருமேனிமழைமதச்செண்பகக்களிற்றைமனத்துள்வைப்பாம்.

### பாயிரம்.

### கடவுள்வணக்கம்.

திருக்குறும்பலாவீசர்.

பூமேவுசதுர்முகத்துப்புத்தேளுமவனையுந்திபூத்ததேவுந்
தேமேவிகிலமேவிவான்மேவித்தினந்தேடத்திரிகூடத்துக்
கோமேவுபழம்பொருளைக்குற்றாலப்பராஞ்சுடரைக்குறும்பலாவின்
மாமேவுமறைக்கொழுந்தைப்பிறைக்கொழுந்தைவனைந்தானைவணக்கஞ்செய்வாம்

குழல்வாய்மொழியம்மை.

இமையவரைக்குலக்கொழுந்துகயிலைவரைமேருவரைக்கிறைவிவேதச்
சிமையவரைத்திரிகூடச்சிவக்கொழுந்துமணக்குமொருசெழும்பூங்கொம்பு
சமையவரைப்புரக்கவருட்கடல்சுரந்துமடைதிறந்தகண்ணுளென்னுஞ்
சமையவரைத்தலைவிகுழல்வாய்மொழியம்பிகைதிருத்தாடலைமேற்கொள்வாம். (௨)

சித்திரசபைநடராசர்.

வானாகிவளியாகிக்கனலாகிப்புனலாகிவளர்பாராகி
ஊனாகியுயிராகியொன்றாகிப்பலவாகியுலகம்யாவுந்
தானாகிப்புறமாகியறமாகியறம்வளர்த்தாடாளமேந்தக்
கோனாகிநடம்புரியுஞ்சித்திரப்பொற்பொதுவுடையான்கோலம்போற்றி. ௩,

செண்பகப்பூங்கோதையம்மை.

அம்பரத்தினிடைத்தோன்றுமாருதம்போலம்பரத்திலருளாய்த்தோன்றி
யம்பரத்தினம்புரவானொருசனுப்போலிருதனுவுமமைந்தொன்றாகி
யம்பரத்தின்விசிகரம்போலத்துவிதமாகியண்டமனைத்துமீன்று
ளம்பரத்தினமர்கடந்தவருள்விழிச்செண்பகக்கோதையடிசார்ந்துய்வாம். ௪)

திரிகூடநாதர்.

பொன்பூத்தாரையிதழிப்பூமாலைபொன்னரியமாலையாகக்
கொன்பூத்தபுயங்கவெள்ளிக்கொடிவேய்ந்தசடைபவளக்கொடியாம்வீடு
மன்பூத்தமணவறையாமதிவிளக்காமலர்கண்மதத்தாரைவார்ப்பத்
தேனபூத்தாந்மாதைச்சேர்வேட்குந்திரிகூடச்சிவன்சீர்வேட்பாம். (௫)

ஞானபராசத்தி.

வேறு.

பூதபலபேதவுயிர்தேககரணாதிமுறைபோகபுவனாதிகளெலா
மாதியுலகமவாண்டிருவாயகிலலோகநிறைவாக்கவருள்கூருமொருதாய்
நாதர்கயிலாசகிரிவாசர்திரிகூடநடராசருடனாதவடிவாய்
வேதமொழியோதிவிளையாடுகுழல்வாய்மொழிமெய்ஞ்ஞானபராபாதநினைவாம்.

தெக்கணாமூர்த்தி.

வேறு.

ஆல்வருக்கர்தனிலுயர்ந்தவடகிழற்கேதென்முகங்கொண்டறவோராய
நால்வருக்குத்தனிருவருக்குமொருவருக்குநவின்றருளிநவிலொணாத
நூல்வருக்கமொருவருக்குநவலாமனுவன்றனைநுதற்கண்ணனைப்
பால்வருக்கைக்கனியையருட்பசுந்தேனைப்பரவாமற்பரவல்செய்வாம். ௭)

விநாயகக்கடவுள்.

கங்கையாராம்பலைப்பூங்கவரிநுதற்சிந்தூரத்தைக்கயிலையாளி
செங்கையார்மாதங்கத்திருமுனியைமுனிவர்கள்தேவவேந்தர்
பங்கயாசனன்முதலோர்முடிமலர்த்தும்பியைவலவைபருவப்பாரக்
கொங்கையார்களபத்தைச்செண்பகக்குஞ்சரத்தைமனக்கூடஞ்சேர்ப்பாம். (௮)

சண்முகக்கடவுள்.

வேறுமுகந்தோறுந்தோறும்பிறந்துழலுஞ்செனனவிடாய்விடுப்பமூலச்
சேறுமுகமாயைமலங்கழியவிருவினைப்பழையபழிதீட்டுந்திரக்
கூறுமுகந்தோறுமகரக்குழைதாவிவள்ளிதெய்வக்கொடிகட்சேல்பா
யாறுமுகம்பெற்றகொற்றத்தானந்தக்கடற்பரவியாடல்செய்வாம். (௯)

### சரசுவதி.

எண்கமலக்கரஞ்சலிப்பவொருகமலத்தயன்பிறப்பிலெழுதாவண்ணந்
தண்கமலப்பதஞ்சிரமேல்வைத்தருள்வார்குற்றுலத்தமிழ்நூல்வாய்ப்பக்
கண்களெனுங்கருங்கமலங்கரங்களெனும்பசுங்கமலங்கவினப்பூத்து
வெண்கமலத்திருந்தாளைச்செங்கமலத்திருந்தாளைவேண்டல்செய்வாம். (௰)

### திருநந்திதேவர்.

நேத்திரங்களொருமூன்றும்புயநான்கும்விழிமணியுநிணாநூன்மார்புஞ்
சாத்துபுலித்தோலுடையும்வெண்ணீறும்விரிசடையுஞ்சடைமேற்பாம்புங்
காத்திரள்கைம்மான்மழுவுங்கண்ணுதலாமெனத்தோற்றிக்களங்கார்மற்றி
வேத்திரத்திண்படைதரித்தவிடைமுகத்தெம்பெருமானைவேண்டல்செய்வாம். ௰௧

### சண்டேசுரர்.

தான்பிறந்ததந்தையையுமினிப்பிறக்குநிந்தையையுந்தடிந்துசேயென்
றுன்பிறங்குமழுவிடைமேலொருவரழைத்திடவிருவரயிர்ப்பவேகிக்
கான்பொலிதாரரிபிரமாதியர்க்குமெய்தாவிருக்கையெய்திக்கடவுட்சேடம்
வான்புலவர்பெறுப்பேறுபெற்றவனைநற்றவனைவழுத்தல்செய்வாம். (௰௨)

### திருஞானசம்பந்தசுவாமிகள்.

மதுரோசர்திருநாட்டுவந்தசமண்கழுவேறமாறுச்சைவஞ்
சதுரோறமனுநீதிதழைத்தேறத்திருவேடுதமிழ்சேர்வைகை
யெதிரேறத்தொண்டர்குழாமீடேறப்பரசமயவிருள்விட்டோடக்
கதிரேறுமணிச்சிவிகையேறிஞன்சரணமந்தக்கரணஞ்சேர்ப்பாம். (௰௩)

### திருநாவுக்கரசுசுவாமிகள்.

திருநீற்றைமெய்யழுத்தியஞ்செழுத்தைநெஞ்சழுத்திச்சிலைக்கைமார
னுருநீற்றும்பெருமானையுறவழுத்திச்சமணரெனுமொன்னார்மூட்டும்
பொருநீற்றுக்குடவரையுங்கடகரியும்விடவரவும்புறங்கண்டாழிக்
கருநீத்தங்கடப்பவொருகற்றுணியுகைத்தானைக்கருத்துள்வைப்பாம். (௰௪)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்.

புவியாசைக்கழைசுழிந்துதலைவராவணக்கூடம்புகுந்துபொற்பூண்
டவிராத ○ கொம்பிரண்டுமேவி ‡ யொருவல்லிதொடர்தளையைநீவிக்
குவியாரம்புனைபரவைகொங்கையானையின்பொருட்டுக்குழைதோய்சங்கச்
செவியானைத்தூதுவிட்டகவியானைதனைத்தினமுஞ்சிந்தைசெய்வாம். (௰௫)

---

○ கொம்பிரண்டு, பரவையார். சங்கிலியாரிருவர்.

‡ ஒருவல்லிதொடர்தளை, சங்கிலியாரதுபற்று.

மாணிக்கவாசகசுவாமிகள்.

சொன்னவனைத்துளக்கலையும்பயிலாமாத்தியர்குலத்துத்தோன்றியாங்கோர்
தென்னவனையாசரிமைத்திறல்செயுமந்திரியாகித்தென்னூர்க்கெல்லா
முன்னவனைப்பிறைசடைமுடியின்மேற்பொன்னின்முடிசூட்டியாண்ட
மன்னவனைமறைவாயிலேகுருவாகச்சொன்னவனைவணக்கஞ்செய்வாம். (௧௬)

அகஸ்தியமாமுனிவர்.

விளையேந்தமணிசிலவுவிரிகூடத்திரிகூடக்கிரிக்கேயாவும்
விளையேந்துபுனற்காகத்தண்டேந்திப் ✠ படைத்தபிரான்விடுத்தநேமி
வளையேந்துங்கரத்தமருமானேந்திப்பசந்தளவமவுலிக்காடு
முளையேந்தமதியேந்தத்தந்தியேந்தாதமிழ்முனிதாண்முடிமேற்கொள்வாம். (௧௭)

அறுபத்துமூவர் முதலியநாயன்மார்

தில்லைவாழந்தணர்பொய்யடிமையில்லாப்புலவர்சிவபத்தராதி
வல்லவரெம்பெருமாக்களெழுவரடிபரவியயன்மாலுங்காணு
நல்லசீர்மலர்ப்பாதங்கண்டதிருத்தொண்டரெனுநாயன்மார்க
ளெல்லைதீர்பெரும்புகழாரறுபத்துமூவர்பதமிறைஞ்சல்செய்வாம். (௧௮)

திருக்கோயிற்பணிவிடைக்காரர்

காவார்நற்றிரிகூடத்தானுக்கும்வேணுமொழிக்கவுரியார்க்குந்
தேவாரப்பணிபுரிவாருழைவாரப்பணிபுரிவார்சேவைசெய்வார்
பூவாசத்தொடைதொடுப்பார் ᴼபுகழ்வாசத்தொடைதொடுப்பார்பூசைசெய்வா
ராவார்கண்முதலாயவடியார்கட்கடியார்கட்கடிமைசெய்வாம். (௧௯)

திரிகூடச்சிவநாமகீர்த்தனர்

நடந்தாலுமிருந்தாலுநின்றாலும்வளர்ந்தாலுநலிவுற்றாலுங்
கிடந்தாலுமயின்றாலும்பயின்றாலுந்துயின்றாலுங்கிரிகடாவிப்
படர்ந்தாலும்விழுந்தாலுமெழுந்தாலுந்திரிகூடப்பரமனாம
மிடர்தாவுறவழுத்துந்தொண்டரடிப்பாதுகைகள்சென்னிசேர்ப்பாம். (௨௰)

வாழ்த்து

தேமழைமுகில்பொழிகதேசமெல்லாம்பயிர்விளைகசெல்வமோங்க
மாதர்குழாமக்கள்குழாமனையறங்களுடன்பொலிந்துமலிந்துவாழ்க
மேதகுசீர்ச்சைவநெறிவேதநெறிதழைத்தோங்கமேலுமேலும்
பூதலமேற்சிவபெருமானாலயங்கள்பூசனைகள்பொலிகமாதோ. (௨௧)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

---

✠ படைத்தபிரான்விடுத்தல்.பூர்வகற்பத்தில்அயனுமிருந்தசிவன்அவ்வுருவிட்டெரியாயிருத்தல். ᴼபுகழ்வாசத்தொடை,தோத்திரக்கவிமாலை.

காரணமுங்காரியமுங்கற்பனையுங்கடந்துதனிப்
பூரணமாய்நின்றபிரான்புவனமெல்லாம்படைத்தருளி
யாரணமுமாகமமுமருங்கலையும்விரித்தருளி
நாரணற்குநான்முகற்குநவிலுவனநவின்றருளி. (க)

செப்பரியகயிலையின்மேற்றிருநந்திதேவனுக்கு
வைப்பரியபொருளைவிரித்துபதேசம்வைத்தருள
வொப்பரியசனற்குமாரற்குண்மையாவவனுரைப்ப
மெய்ப்பொருளையுணர்ந்தவனும்வியாதமாமுனிக்குணர்த்த. (உ)

சூதனுக்குவியாதமுனிசொன்னதொகைமூவாறின்
மாதவற்குக்காருடநாரதம்விண்டுபாகவத
மாதவனுக்குயர்பிரமகைவருத்தமழலோற்கு
மேதகுசீராக்னேயம்விதிக்குயர்பற்பம்பிரமம். (ங)

இச்சைபெறுநால்வருக்குமிருநான்குவளைகைபோக
மச்சம்வாமனங்கூர்மம்வராகமாற்கண்டேய
மெச்சுபவிடியங்காந்தம்வியனிலிங்கம்பிரமாண்ட
மச்சைவமெனச்சிவபுராணங்களையிரண்டில். (ச)

காந்தமெனுமகவிடத்திற்கடலேழிலுவர்கழித்துச்
சார்ந்தகடலாறனையசனற்குமாரஞ்சூதங்
கூர்ந்தசிவமால்பிரமங்குமரமெனப்பெயர்குலவு
மார்ந்தபெருஞ்சங்கிதைகளாறுகுமாங்கவையில். (ரு)

கிளர்ந்தபெருஞ்சங்கரசங்கிதையென்னும்பாற்கடலும்
வளம்பெருகுஞ்சனற்குமாரசங்கிதையாமதுக்கடலு
முளந்தனிலொன்றுப்பெருக்கியுயர்மதிமந்தரமாகக்
குளந்தருகட்புனிதர்திரிகூடமான்மியவமிர்தம். (சு)

முனிசூதன்கடைந்தெடுத்துமுதுநாவாற் ० தருவிகொடு
நனிமேவுமாதவத்துநைமிசாரணியத்தோ
ரினிதாகச்செவிவாயாலிசைத்தருந்தப்பரிமாறிப்
புனிதமாக்கதிநிறைக்கும்புண்ணியமாக்கதையிதனை. (எ)

வடமொழியைத்தென்மொழியாவகுத்துநீயுணர்த்துகெனத்
திடமொழியாலத்தலத்துச்சிவமறையோர்பணித்தருள
வுடனுறைவைதிகமறையோருறுபொருளைவிரித்துணர்த்தக்
குடமுனிபோற்றியபெருமான்றிருவருளாற்குறிக்கொண்டு. (அ)

வேறு.

சித்துநதிநாடுநகர்புராணமூலஞ்சிகரிதலமருவிமதுகங்கைமூர்த்தி
சத்திகுறும்பலவுமந்தாநிலத்தின்பான்மைதக்கன்மகமகமழிதல்வானோர்பாவம்

---

० தருவி. சட்டுவம்.

புத்தேளிர்பவர்நீர்தல்சம்புவேடன்புரியும்வலங்கடகளிறுபுரியும்பூசை
வைத்தபெருஞ்சங்கரசங்கிதைசேர்தானவைபவகாண்டஞ்சருக்கம்பதினெட்டாக

தேவிதிருவவதாரம்பரமன்வேட்டல்செங்கண்மால்சிவனுதல்பூசைப்பான்மை
பாவிவனசான்பேறுவானோர்கும்பன்பணிவிடைவாசுகிதவஞ்சிற்பரமனுடல்
தாவில்பொருட்கண்டகசேதனன்கவுற்சன்சமையமிகழ்புட்பகந்தன்றருமசாமி
மேவுகதிநற்பயனற்சனற்குமாரம்விளங்குசிவரகசியத்தின்விரிவீரேழா. (௰)

ஒருமைபெறுசிவநெறியேவடிவமாகவுளபயகாண்டமுங்கருணைப்பார்வையாக ன்
வருமைதெரிதருசருக்கமுறைமையெல்லாமவையவங்களாகம்தியணிந்த பெம்மா
கருதகீர்த்தனங்களணிகலன்களாகக்கற்பவர்கேட்பவர்க்கிருமைக்கதியும்வீடுந்
திருவருள்செய்குற்றாலச்சிவபுராணச்செல்விகல்வியுருமகிமைதெரிக்கின்றேனால்-

வேறு.

தோட்டகத்தளிகள்பாயுந்துணர்த்தபூங்கடுக்கைவேய்ந்தா
ரோட்டகத்தெழுதாவேதமேத்தரும்வரம்பில்சீர்த்தி
நாட்டகத்தறிஞோர்முன்னர்நானெடுத்தியம்பும்பான்மை
கோட்டகக்கமலநாப்பண்கொட்டிபூத்தலர்வதாமால். (௰௨)

புகழ்தருமறைக்குமேலோன் ० புடார்ச்சனபுரத்தின்சீர்மை
நிகழ்தரகழ்த்தவல்லேனீகொலென்றெனதுநெஞ்சே
யிகழ்தாவெழுந்தானுமிச்சையுந்தினம்போராடி
யகழ்தரானணர்தோற்றதாசையேவென்றதம்மா. (௰௩)

தேக்கியகடுவைமுக்கட்டேவனுக்கமுதமாக்கும்
பாக்கியச்செல்விஞானப்பாவைசெண்பகப்பூங்கோதை
யாக்கியகருணைபோற்றியமலனைப்பரவலாலென்
வாக்கினில்வருச்சொல்லெல்லாமங்கலச்சொற்களாமால். (௰௪)

செறிந்திலன்சிந்தையேனுந்தெளிந்திலன்கல்விகேள்வி
யறிந்திலன்புகலாநின்றேனுதியார்திரிகூடத்து
மறிந்தவான்கங்கைதிங்கள்வளர்ந்தபூமுடிமேல்வேழ
மெறிந்தநீர்தளிருங்கொண்டாரென்பதுதெளிந்துமாதோ. (௰௫)

கவையடிவிலங்கின்வல்லூன்கண்ணப்பன்கனிவாயேற்றி
யவிகளினமிழ்தின்மிக்காவமலனுக்கானாற்போலக்
குவிதருநெறியொன்றில்லேன்குறைமொழிநிறைசான்மேலோர்
செவிபுகிற்றிரிகூடத்துச்செல்வனுக்கினியதாமால். (௰௬)

வேலையில்வீழ்ந்தகல்லுமென்குடம்புகுந்தவென்புஞ்
சாலையிற்கொளுவுந்தியுந்தாங்கிர்வைகையாறுஞ்
சோலைபாண்பனையும்வேதக்கதவமுந்தொழும்புகொண்ட
வாலையாந்தமிழ்ப்பூஞ்செல்விவளர்தமிழ்ப்பாண்டிநாட்டுள். (௰௭)

---

० புடார்ச்சனபுரம் என்பது திருக்குற்றாலத்தின்இருபத்தொருநாமத்துள்ஒன்று-

வேரியஞ்சுரும்பூடாடாவெயில்புகாக்காவிற்கோடி
சூரியர்திரண்டாலென்னச்சுடர்கள்விட்டெறிப்பமன்றி
லாரியனுடுசேர்த்தென்னுரியநாடுசொல்வாம்
வாரிநீரருவித்தெய்வவரநதிமுதலாமன்றே. (யஅ)

புராணவியல்பும் அவையடக்கமுமுற்றிற்று.

ஆகப்பாயிரம் திருவிருத்தம்—ஙசு.

---

## க வது திருநதிச்சருக்கம்

தேர்கொண்டவசந்தவீதிச்சிவபிரான்றிருவெண்ணீற்றி
னேர்கொண்டவடியார்சங்கமெனப்பரந்தேகிவேலை
நீர்கொண்டுதன்பால்வெண்பானிறங்கொண்டுதரங்கமேகக்
கார்கொண்டகடலின்மேனிகைக்கொண்டுமீண்டமேசம். (க)

பைந்தரக்குரிவைபூண்டபரமர்சித்திரப்பூமன்றி
னந்தரப்பேரிபோலவதிர்தாமுழங்கிநீண்ட
சுந்தரச்சடைபோன்மின்னிச்சுந்தரவரைமேலங்கை
மந்திரத்தபையங்காட்டிவரதம்போற்பொழிந்தமாரி. (உ)

கிரிமிசைமழைநீர்த்தாரைகிரீசனெம்பெருமான்றன்னை
யரியவானவர்களாட்டுமமுததாரைகளாமன்றிச்
சொரிமதத்தும்பியாட்டுர்திக்கைநீர்த்தாரைபோலுஞ்
சரிதருமின்னுத்தோற்றந்தளிரருச்சனைபோலாமால். (ங)

துளிதருதுளியாவானந்தூவுநீர்திரிகூடத்துத்
தெளிபுனற்றிரள்காலாறுய்த்திசைதோறும்பரந்ததம்மா
வொளிர்விடைப்பெருமானெம்மையுடையவனடியார்க்கீயுங்
குளிர்பொருளொன்றுநூறுகோடியாயனந்தமாம்போல. (ச)

முத்திரச்சிகரம்வானைமுயங்கிநுண்டுளிச்சூற்கொண்டு
பைத்திரள்கொடிகளென்னும்பசுநரம்போடிநீடி
யத்திரளகடுவிம்மியாகமுமவிளர்த்துவால
சித்திரகங்கையென்னுஞ்செல்வியைப்பயந்ததன்றே. (ரு)

வேறு.

கோடனைத்தும்பலகோடிநதிவருதல்பதினொருமுக்கோடிதேவுந்
தேடரியதிரிகூடப்பரன்பணிக்குவானிழிந்துசேரல்காட்டு
நீடருவிதிசைதோறுங்குதிபாய்தலெண்டிசைக்குநிருபராவா
ராடல்பெறுசேனையொடுமண்ணலார்விழாக்காணவண்ணலாமால். (சு)

மொய்யலைத்தெண்டிரைக்கடன்மேல்வானீட்டிமுதுதரைமேற்படிவங்காட்டிச்
சையமுடிதொடுத்தனந்தமணிமுடிகள்கவித்ததலையருவிமேனாள்
வையந்தாங்கியசேடன்வானகந்தாங்குறநிமிர்ந்தவகையாமன்றி
வெய்யமருத்துடனிகலிமேருவின்மேன்முடிகவித்தவிசையமாமால். (எ)

போராளிவனத்தெருளிபுனலாமைவாமனஞ்சேற்பொலிவுகாட்டி
✠ யாராமமபிராமமிசைந்தசங்கிராமம்விளைத்தாயர்பாடிப்
○ பேராவிலினந்தடர்ந்தவாங்குதிரையெனத்தாவும்பெருமையாலே
சீரார்பத்தவதாரச்செங்கணெடுமால்போலுந்தெய்வவாரி. (௮)

பொருந்துபெரும்புண்டரிகப்பொகுட்டினிடமருவியரும்புவனமீன்று
பருந்திகிரித்தண்டுகமண்டலமுகந்துமூலமறைபலவுமோதி
யரும்பெறலுந்தியந்தடத்தவந்ததிசைமுகமாகியன்னமூர்ந்து
விரும்புபாரதிமேவிப்பூவிலயன்போலாகும்விமலதீர்த்தம். [௯)

மாமலையின்மிசைப்பிறந்ததிரிகூடச்சிவபெருமான்வலப்பான்மன்னித்
தேமருவுமஞ்சனக்கண்களிகூரத்திருமேனிதிளைத்துமேவித்
தாமமிடுமணக்கோலமுகந்தருளியறம்வளர்க்குந்தகைமையாலே
பூவலர்செண்பகவனத்துநமையாளுமுமையாளைப்பொருவும்வாரி. ௰]

பொங்குமாகடலிடத்துத்தெள்ளமுதிற்பிறந்துசெழும்பூமேலாகிச்
சங்கமாநிதியினொடுமணியினொடுந்தருவினொடுந்தகவாய்த்தோன்றி
யெங்குமேயடுத்தவர்க்குவாழ்வருளியாக்கமதாமியற்கையாலே
செங்கண்மாலுரத்துறையுந்திருமானினுருமானுந்தெய்வவாரி. (௰௧)

வெண்கமலமேவியுயர்வெண்படிகமணிந்துவெள்ளைமேனிவாய்ந்து
தண்குமுதவாய்ச்சிவப்புந்தடங்குவளைக்கண்கறுப்புந்தழைப்பத்தோன்றி
வண்கலைபோதம்பயின்றுமாருத ‡ சொல்வளர்த்துமலரோடேந்திப்
பண்குலவத்தாலமிசைநடித்துநாமகட்பொருவும்பரமதீர்த்தம். (௰௨)

வேறு

ஆணிப்பொன்வயிரமுத்தமைவனந்தோளாயென்ன
மாணிக்கநறுந்தேனுதிவாத்திரவியங்களெல்லாம்
பாணிக்கேதிரளாவேந்திப்பணிதலாற்குமரவேட்குக்
காணிக்கைகுறிஞ்சிமாக்களெடுத்ததுகடுக்கும்வாரி. (௰௩)

குயிற்றியகுரவஞ்சாத்திக்குமரிதாள்பணிந்துவேடர்
பயிற்றியகணைவாள்கொண்டுபறிபொருட்குறையாடி
யெயிற்றியர்குழம்புசாயவெழுந்ததுசெழுந்தண்கங்கை
நயித்தியர்குழம்புசாய்க்குஞ்சதமகன்சேனைமான. (௰௪)

---

✠ ஆராமம்-சோலை-அபிராமம்-அழகு-சங்கிராமம்-பொருதல்- எனப்பிரவாகத்தி னின்மேற்செல்லுகையிலும்- அவைபரசுராமாவதாரமும்- தசரதராமாவதாரமும்- பலபத்திராமாவதாரமும்ஆகியமூன்றும் எனத்திருமான்மேற்செல்லுகையிலும் பொருள்கொள்க

○ பேராவிலினந்தடர்ந்த-என்றது- பிற்குயருடன்ஆநிரைகாத்தகிருஷ்ணவதார மெய்த்து என்னும்பொருள்படநின்றது.

‡ சொல்-என்பது-பிரவாகத்திற்குச்செல்லுங்கால் நெற்பயிர்.

சொன்றையங்குழல்வாய்க்கொண்டுகோவினந்தடாவேதிக்
கன்றிஞல்விளவெறிநதுபாலைமுன்கவர்ந்தவாற்றுன்
முன்றில்வாய்க்குரவையாடிமுல்லைமாதரைமயக்கி
மன்றன்மாமருதத்தூடுமாலெனத்தவழ்ந்ததாறு. (௧௫)

மையுலாங்குவளைக்காடர்யிடையிடைவனசம்பூத்து
மெய்யெல்லாம்விழியாநோக்கிவெள்ளைவாரணநடாத்திச்
செய்யவாடாம்பைமேவிச்செழுந்தருநீழன்மன்னிச்
சையமார்சிறைகளீர்ந்தசதமகனிகர்க்குமவாரி. (௧௬)

பரத்தியருணக்குமீனுமளத்தியர்படுத்தவுப்புந்
திரைக்கடல்கொழித்தமுத்தும்பவளமுந்திரள்சேர்சங்கு
நரைத்திரைக்கரத்தால்வாரிநானிலப்பொருளுமீய்ந்து
நுரைக்கடற்பொருள்கொள்வார்போனுழைந்ததுநுளையர்சேரி. (௧௭)

கொல்லையங்குறிஞ்சித்தேனுங்குடத்தியர்மிடவுப்பாலு
முல்லையார்தரியுநெய்யுமுதுபணைக்கரும்பின்சாறுந்
தொல்லுவர்க்கேணிநீருந்தொடுத்தெழுநீத்தமெம்மா
னெல்லைமாமதுரையீட்டுமெழுகடல்பொருவுமாதோ. (௧௮)

நால்வகைமலர்சோம்பானதியெனும்பருவக்கன்னி
கால்வழிக்கலிங்கமார்ப்பக்கனதனம்பணைப்பப்பாங்கின்
பால்வளைத்திரைக்கைவீசிப்பன்மலர்த்தொடைகள்சூடிச்
சேல்விழிகளிப்பவேலைச்செல்வனைமணந்ததன்றே. (௧௯)

தம்பமீனுப்புத்துப்புச்சங்குதண்டரளந்தன்பாற்
பைம்பொருளனைத்துங்கொண்டார்பான்மைவானேறிநோக்கி
யிம்பர்மேற்றுவியைம்பாலிடத்தபல்பொருளுங்கொண்டு
கம்பமார்கடல்போந்தென்னப்போந்ததுகடவுணீத்தம். (௨௰)

கோளிபமிடங்கராசக்குரைதிரைத்துரகந்தூண்டி
வாளைவாளாகவீசிக்கமடமாம்பரிசைவாங்கிக்
காளமாநாரையார்ப்பக்கனவரைவிடுத்தசேனை
நீளமார்கடன்மேற்சென்றுபொருவதுநிகர்க்குநீத்தம். (௨௧)

அரிசனந்தகரமாஞ்சியகிற்றுணிகோட்டஞ்சாந்தந்
திரிபலைகரிக்கோடாரமயிற்பீலிதேவதார
மரகதம்பவளநீலம்வயிரநித்திலங்கண்மற்று
நிரைநிரைகூலமேற்றிவணிகரைநிகர்க்கும்வாரி. (௨௨)

வேறு.

திங்கள்சூடியதேவனொருவனே
பொங்குபல்சமையப்பொருளாதல்போ

லங்கங்கேபெருந்தாமிரமாமுகக்
கங்கைபோன்றதுசித்திரகங்கையே. (உ௩)

பள்ளத்தாழ்வோடுமேடுறப்பாய்புன
லள்ளற்பாரெங்குமார்த்தவார்கடல்
வெள்ளத்துசினண்மேகலையார்ப்பதாம்
புள்ளினார்ப்பவள்போர்வையினார்ப்பரோ. (உ௪)

நீடுகோபுரநீண்மதிற்கோயில்பூங்
காடுமூருங்கயல்வெடிதாவுவ
நாடுபல்வளம்பார்க்குநதிமகள்
கோடிகோடிவிழிபெறுங்கொள்கையாம். (உ௫)

சோறுசைத்திணைகூடியொழுகியுங்
காலவாரிகலக்கமறாமையான்
மேலுமேலும்விளைபொருள்வாஞ்சைசேர்
சேலுண்கண்ணியர்க்குள்ளந்தெளியுமோ. (உ௬)

என்றுமேவிறுமீசனெம்மானரு
ளங்கமாமடியாரிடத்தாதல்போற்
சங்கநீர்நதியைநதிணைதாவிறும்
பொங்குசீர்மருதம்பொலிந்தோங்குமே. (உ௭)

௧ வது திருநதிச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௰௬.

---

## ௨ வது திருநாட்டுச்சருக்கம்.

ஆறுதுறைதோறுவிளையாயணைவகுப்பார்
சேறடையுடணைசெய்தேரவிகர்ப்பா
ரேறுபுனல்வாவிகுளம்யாவையுநிறைப்பார்
வீறுகடல்வேறுசெய்வியன்சகரரொப்பார். (௧)

கொம்புமிணைகோடுமுறக்குழுமிமள்ள
ரம்புநதிவாவிதடமாரகழியாகத்
தம்படைசெயுந்தொழில்கள்வென்றிநிலைசாரப்
பைம்பயிராண்புரிபடைத்தலைவரொத்தார். (௨)

சைவவிசையம்புரிசயம்புதிரிகூடத்
தெய்வநெறியிந்திரன்முதற்பரவல்செய்து
கைவருபடைத்தொழிலுடன்களமர்சென்று
றுய்வருபுனற்குமுனிபேர்வளமையொன்றே. (௩)

தேமடைமலர்க்கழனிதேன்வடியமள்ளர்
மாமடைசெறித்தவயல்வாய்மடைதிறந்து

தாமடைவளைக்குலைசரித்துமளைதாவி
யாமடைமிதித்துழுபடைக்கணிவகுப்பார். (௪)

உழவர்திரளார்ப்பொலியுமோங்குபுனலார்ப்பு
முழவுகிணையார்ப்பொலியுமுத்தமிழ்செய்நாடர்
விழவுமணமார்ப்பொலியுமேம்படலினன்று
பழையகடலார்ப்பொலிபயப்படுவதம்மா. (௫)

வேறு

வேலையிற்செல்லும்போதும்வேலைபுண்டெழீஇயபோது
மாலையொப்புடையசேவுமயிடமுந்திரளாய்வைகற்
காலையிற்பகலோடெல்லிகலந்தெனத்தளைமான்பூண்ட
நிலவித்திலத்தின்கோவைநிரைவடம்புனையப்பூட்டி. (௬)

கார்நிறக்களமரீட்டங்கவின்பெறுபடைவாள்சேர்த்தி
யேர்பலநிரைத்துநாளிட்டிசைத்துழுசால்கடோறுங்
கூர்வலம்புரிசூன்முற்றிக்கொழிக்கின்றதரளராசி
பார்தனையுழுதபண்டைப்பன்றியைநகைத்தன்மானும். (௭)

பாலிகைபாத்தியாகவுழுதெருப்பரப்பியெங்குஞ்
சாலியாழ்கெனவேமள்ளர்தண்முளைதெளிப்பவாரி
போலெழுகுரவையீட்டம்புதுப்புனற்கொழுநன்வேட்ட
வேலிசூழ்பழனக்கன்னிவிதிமணச்சடங்குபோலும். (௮)

முத்தெனமுளைத்துப்பொன்னின்முகிழ்தம்விளைத்துக்கால்கள்
வித்துருமம்பொனீட்டிமரகதம்விரித்துநீல
மொய்த்தசீர்நாறுநாறுமுறைக்கண்டுசேறுநாறச்
செய்த்தலையுழுதுசேர்ப்பத்தெளிசெய்துதெய்வம்போற்றி. (௯)

அரித்துடன்பெயர்த்துவெவ்வேறமைத்தலுமமைத்தநாறு
பரித்தலுங்கழனிதோறும்பதித்தலும்புரியுமள்ளர்
பிரித்தலும்பிரிந்தார்தம்மைப்பேணலும்பேணிப்பின்னர்ப்
பொருத்தலுஞ்செயுமமைச்சர்போல்வர்மன்பொருவும்பண்ணை. (௰)

குவவுநீறணிந்ததென்னன்கூனெனநிமிர்ந்துமானி
தவமெனவளர்ந்துமூவர்தமிழெனத்தழைத்துவஞ்சர்
பவமெனக்கருவாய்நல்லோர்பலமெனவீன்றியாவுஞ்
சிவமெனத்தெளிந்தோர்முத்தித்திருவெனவிளைந்தசெந்நெல். (௰௧

நற்பொதிகருவாம்போதுநாடகக்கணிகைமாரின்
முற்படமறைந்துதோன்றிமுகமெடுத்தாடிப்பின்னர்
விற்பொலிபுருவங்கோட்டிவிளைந்துநெட்டிலைமுக்காட்டின்
கற்புடைமடவார்நாணங்காட்டுவகதிர்ச்செஞ்சாலி. ௰௨)

தோரையறுமாளுர்சிவதிரிகூடம்போற்றிக்
காதல்சேர்களமர்நன்ளுட்கதிர்செய்தகளித்தண்டாடல்
பூதாபெறிந்தசெவ்வேள்புரந்தான்மகளைவேட்கு
மாதர்மாமணத்துத்தெய்வமகளிருண்டாட்டுமாறும், ௰௩)

கூறகள்பருத்தச்சாலிகொய்யுநாட்செய்யிற்செல்க
ளுறநீர்க்கேணிதாவுமுடனிரிந்தணங்குக்காவி
பேறகண்டுவெப்பர்வாழ்வுபிரியுநாட்பிரிவர்கீழோர்
சீறாட்கூடிவாழ்ந்தபெயியுநாண்மேலிவர்மேலோர். [௰௪

வேறு.

வாள்வகுத்தபடையிரும்புவேர்சாயக்கிளைத்தழுதவளர்க்குஞ்சாலி
யாள்வகுத்தகூவிரும்புதான்பணிதல்போலடியூடரிந்தவார்குற்
கேள்படைந்தமனத்துயோர்பகைமைபாராட்டுகிறுங்கேண்மைநீக்கார்
தாளபிடித்தமுடிவணங்கித்தளதபாராட்டுகிறூர்தழுவார்தெவ்வா. ௰௫)

வீறகொண்டகதிர்த்தொகைகள்வரைத்தொகைபொற்களத்தினிடைவேய்ந்தமே
யேறகொண்டுபோர்சரித்தச்சிறைபோலுவைகளையிந்திரன்போலீர்ந்தும் [தி
கூறகுன்றமெனபபொலிகள்கயமுகனைத்தொழுதளந்தகுவிக்குந்தோறு
மாறகுன்றசிறையரிந்தமன்னனெதிர்ப்பாசறைபோல்வகுப்பர்மாதோ. [௰௬)

முறைவகுத்தபொற்பொருப்போபதுமராகக்கிரியோமுத்தார்வெற்போ
துறைகொழித்தசெழும்பவளக்குன்றமோநீலவரைத்தொகையோவென்ன
க்குறைகளந்தநெற்பொலிகள்வகையுரைத்தலரிதுதொகைநிகழ்த்துங்காலை
புறையிடர்குமாற்ருவார்திகிரிவரைமுதலாயவோங்கல்யாவும். (௰௭)

பேறகண்டுகளிகூர்க்களமர்முதலோர்க்குதவிப்பெருமையோதற்
காறிலொன்றகடமைகொடுத்தைந்திலொன்றுதேவாலயங்கட்கீய்ந்து
கூறகொண்டுநெல்லொருபாற்கொழித்தமணிமுத்தொருபாற் குவைகள்செய்வார்
வீறகொண்டதிருமகளுமருமகளுமரசிருக்கும்விபுலம்போல. ௰௮

திருவிருக்கவிடுகடைதிறந்தெனநெற்கொட்டாரந்திறந்ததிங்க
ளுருவிருக்கசடைப்பெருமானடியவர்நாவலர்மறையோர்க்குதவிமேன்மேல்
வருவிருந்தவழிபார்த்துச்செல்விருந்துமுறையோம்பிவரையாதியார்க்குந்
தருவிருக்கதெனவளித்துத்தங்கள்கிளைதழைப்பவளர்ந்தழைப்பர்யாரும். ௰௯)

வேறு.

ருல்குதிக்கும்வலம்புரிகள் புழக்குதோறுநுறைதாவிக்
காலகுதிக்குநகருமேதிமடைதிறக்குக்கடலவாவிப்
பால்குதிக்குஞ்சினமரவேள்படக்குதிக்கும்படிசோடி
சேலகுதக்குமலர்ச்சோலைதேன்குதிக்குநான்குதிக்கும். [௨௰]

வரம்புவயற்சென்னெலுக்குவாழ்வேலிவான்கரும்பு
கரும்பினுக்குநறுங்கதலிகதலிகட்குக்கமுகவன
மருங்கமுகுக்குயர்தாழையணிவேலியதன்புறத்துக்
குரம்பையுடைநீர்க்கரும்புங்கொங்குவளைசெங்குவளை. (உ௧)

தாவிவளைத்திடைப்பகற்பூந்தாதாடிவருவதனைக்
காவிமலர்கண்காட்டக்கடிக்குமுதம்வாய்விள்ளப்
பூவனசங்கதவடைப்பப்பேட்டளிக்குப்புன்மாலை
வாவியிடைத்துனிதீர்ப்பான்வண்டிசைக்குமெண்டிசைக்கும். (உஉ)

வானுறுதலைமடுக்குமாளிகையுஞ்சூளிகையுங்
கானுறுகுன்றம்போற்கார்மறுகுந்தேர்மறுகு
பானுறுகரும்பிசைக்கும்பணைநாறுகரும்பிசைக்குந்
தேனுறுகரும்பிசைக்குந்தேங்காவிபூங்காவி. (உ௩)

காமாரிதிரிகூடவரைச்சாரற்கடுங்குளிரா
னுமாரிங்கிருக்கவெனுநடுங்கோடுங்கொடுங்கோடை
தேமாரிபுயல்பொழியுந்திங்கடோறுமும்மாரி
பூமாரிதருமருவிப்பொன்மாரிதருமருவி. (உ௪)

முருந்துநகையார்கூந்தன்முகிற்புகையுமகிற்புகையும்
விருந்துபுறந்தருவார்கள்விரும்புகையில்வரும்புகையுங்
கரும்புபாலடும்புகையுங்கடும்புரவிமகப்புகையும்
வரம்பிலாத்திசைதோறுமயிலாடமயிலாடும். (உ௫)

தேன்குளிக்குந்தேன்வாவிதிரைகுளிக்குந்தூவியனங்
கான்குளிக்கும்பசுந்தென்றல்கரைகுளிக்குமெறிதரங்க
மீன்குளிக்கும்புனல்யாறுமிசைகுளிக்குங்கருமேதி
வான்குளிக்கும்விரிபரவைமடல்குளிக்கும்வரிவாளை. (உ௬)

வண்டாடுமலர்க்கூந்தல்வாராடுங்களபமுலை
கண்டாடுமாதரிதழ்க்கனியாடுமதுரமொழி
விண்டாடுங்கிளிப்பிள்ளைவியந்தாடுமடப்பூவை
கொண்டாடுங்குயிற்பேடைகூத்தாடும்பசுந்தோகை. (உ௭)

வள்ளைப்பாடலினமடவார்வளரிசையைமலர்க்குழன்மேற்
கள்ளைப்பானஞ்செயும்போறகரமளியளியிசையைப்
பிள்ளைக்கோகிலம்பயிலுங்குயிலிசையைப்பெருஞ்சோலைக்
கிள்ளைப்பேடைகள்பயின்றுபூவையுடன்கிளக்குமால். (உ௮)

பண்ணுறுமொழியாளாப்பசர்நாணஞ்செயவேண்டிக்
கண்ணுறனொழுநர்புணர்கலவிமொழிகுளறியதில்
விண்ணுணமமையாதான்மிகநாணுட்பசுங்கிள்ளை
பெண்ணார்தஞ்சின்னநடைக்கன்னநடைபேதுறுமால். (உ௯)

பிறங்காமித்திருமலரும்பிரிந்தார்வாய்த்திருமலரு
மிறங்காதபாசடையிட்டிருந்தாலும்பாலனங்க
ளறங்காவல்பூண்டிருப்பாரகந்தோறுமகந்தோறு
முறங்காதமும்முரசமொருகாமனெழுமுரசின். (௩௰)

தேம்பழுக்குழுப்புடைக்காய்தேமாவின்மிசைதூக்கு
மாம்பழத்தின்குலைகனத்தவருக்கைநறுஞ்சுளைபிதிர்க்குஞ்
சாம்பழுத்தமுக்கனியாற்க்முகமடற்கமுத்தொசியும்
பூம்பழுக்காய்க்குலைசாய்ப்பத்தலைசாய்க்கும்பொற்கதலி. (௩௧]

அருந்தளவமுரலிடவம்புயம்பாசடைவிரிப்பக்
கரும்புநிம்பால்வார்ப்பக்கதலிநறுநெய்வார்ப்பச்
சுரும்பினங்கள்விருந்தூட்டுஞ்சோலவரிதாமங்காட்டில்
விருந்துபுறந்தருவாரோவியப்பாரைந்தருவாரோ. (௩௨)

மெய்வளர்க்குந்திரிகூடமிசைவளர்க்குமதுகங்கை
சைவமதுகங்கைபலதடம்வளர்க்குந்தடவாவி
செய்வளர்க்குஞ்செங்கழனிபொழில்வளர்க்குந்தேன்பொழில்கண்
மைவளர்க்குமைமேகமாரிதனைவளர்க்குமால். [௩௩]

கொல்லைவாய்யேனலுக்குப்பொன்கொழிப்பர்குறமகளிர்
நெல்லிலாரக்கொழிப்பர்நிலவிழிக்கடைசியர்கண்
மெல்லியார்பாலளப்பமீனளப்பர்துளைமாதர்
முல்லையார்மோரளப்பமுத்தளப்பரளத்தியரோ. (௩௪)

பந்தரிடும்போதுவியர்பூமுல்லைபசும்புனக்கொல்லைச்
சந்தனமேற்படருமதுதாவிமலர்கொயுந்தோறு
மொந்தவிடைக்கொடிச்சியர்தூமணியொடுவாறுமைந்தேறி
யந்தரமேலிந்தருவுக்காறுதருவெனவளரும். (௩௫)

வேறு.

கோடைதொறுமாவிலொருகோடிகுயில்கூவு
மேடைதொறும்வானமுகின்மேவமயிலாலு
மோடைதொறும்வால்வளையுலாவிமணியீனும்
வாடைதொறுமாடுகொடிமாகநதிமாறும். (௩௬)

கோபுரமுயர்ந்தநிலைகோபுரமிசைப்போய்
நூபுரமலம்பவிடைநோவவரமாதர்
மாபுரவலன்சபையில்வந்தநனியாட
நீபுரமிசைந்தநடசாலையின்விளங்கும். [௩௭

ஆறுபுனல்பாய்வனகன்றுறுபணைதோறு
நாறுமலர்தேனெழுநாறுநிறைசாலி
நூறடைவாளைநெறலுறப்பபாளை
சாறுசொரியும்வீதிப்பசாறுகெழுமாதோ. ௩௮

வேறு.

முடிபுனைந்தசீர்மன்னவர்நெறியினான்முன்னவர்தவத்தாறபைந்
தொடிமடந்தையர்கற்பினான்மதிதொறுஞ்சொரிதருமும்மாரி
வடிபெருந்துளிமாரியாற்பலபயிர்வளந்தரும்பயிர்தம்மாற்
குடிவளந்தருங்குடியினான்மன்னர்செங்கோன்முறைதழைத்தோங்கும். (௩௯)

முன்னிவானெலாமசுரர்கோனழிக்குநாண்முழுதினுமழியாத
கன்னிநாடுசெந்தமிழ்வளநாடெனக்கருதிவானவர்கோமான்
சென்னிவான்றொடுமுயர்திரிகூடத்துச்சேர்ந்தநாள்வளமேய
பொன்னினாடுதென்னாரியநாடெனப்போந்தநாடிந்நாடு. (௪௰)

ஆடலாயிரம்விழியினானருஞ்சிறையரிந்திடப்புகுநாளி
லோடவேறிடமின்மையாலெம்பிரானுறைதருமிந்நாட்டின்
மாடமாளிகைமண்டபமும்பரிகைமன்றநாடகசாலை
கூடகோபுரமெனக்குடிபுகுந்தனகுலவரைக்குலமெல்லாம். (௪௧)

சென்னலாரமேசிற்றிலாச்செழுஞ்சினைக்கமடங்களடுப்பாகக்
கன்னன்மாமணியரிசிதூய்வலம்புரிக்கடங்கள்பெய்துலையேற்றிச்
சொன்னமாமணலுமித்திள்சொரிந்துசெந்துவர்கனலெனமூட்டி
யன்னமார்வயற்பாவையர்பாவைகட்கருத்துவர்சிறுசோறு. (௪௨)

வேறு.

சொல்லையங்குறிஞ்சியேனல்வரகின்மேற்குரால்கணீட்டு
முல்லையின்முதிணாசாலிவேலிமேற்குலைகண்மொய்க்கு
மெல்லையங்கழனிவாழைபந்தரிட்டிலைகளேந்தத்
தொல்லைநீர்நெய்தற்கைதைசோறுகள்சொரியுமாதோ. (௪௩)

குறிஞ்சியந்தினையுந்தேனுமெயினர்பாற்கூட்டிவேட
றெறிந்தவெஞ்சிலையைக்கோலாயிடையர்கட்குதவியாயர்
கறந்தபான்மள்ளர்க்கீய்ந்துமள்ளர்கட்குடத்தினோடு
மறிந்தநெற்குவையைவாரிவலையர்கட்குதவும்வாரி. (௪௪)

ஆறெலாங்குதிக்கும்வாளையலையெலாங்கொழிக்குஞ்செம்பொன்
சேறெலாமுழக்குமேதிசெய்யெலாமுகிழ்க்குநீல
நாறெலாம்வளர்க்கும்பூந்தேனாடெலாம்வளர்க்குஞ்செங்கோல்
சாறெலாம்வளர்க்கும்வீதிதமிழெலாம்வளர்க்குமன்றம். (௪௫)

மைந்தர்தம்புயமுந்தாருமாதர்பூங்கொங்கையார்க்குங்
கொந்துலாங்குழலுமின்னார்கோலமுமெழிலினீட்டங்
கந்தமார்கழுநீர்வண்டுங்கமலமுமிரவினோடும்
விந்தைசேர்முலையுங்கண்ணும்விளைதருகுழைகடாவும். (௪௬)

அன்னவரிசமும்யாறமம்பொருடாக்கக்காட்டும்
பொன்னணிமறுகும்வாணர்புலமையுஞ்சங்கமேயு
மன்றுசேர்விழாவுமாதர்வதனமுந்திங்களார்க்கு
மின்னுறூர்தனமுஞ்சோலைவெளியுநாந்தகாறும். (௪௭)

காவிகள்கிளைக்குமாலைகமழ்குழற்கிளைக்குமாலை
யேவுசீர்ப்பழனதோட்டமிடந்தொறும்பழனத்தோட்ட
மாவிவாய்க்கமடமேயுமறங்கள்வாய்க்கமடமேயுந
தூவியமடப்பாலன்னநறைதொறுமடப்பாலனனம். [௪௮]

புயல்கள்கோடரக்குலாவும்பொழில்கள்கோடரங்குலாவுங்
கயல்கண்மாதரங்கமேவுங்கனகமாதரங்கமேவு
மியலிசைகொழிக்குஞ்சங்கமினமணிகொழிக்குஞ்சங்கம்
வயலெலாம்பொருங்காலாறுமலரெலாம்பொருங் ✠ காலாறு. (௪௯)

அலைபடுங்கொடியும்யாறுமவிபடுமுனைவுந்தெவ்வு
முலைபடுங்கனியும்பொன்றுமுடைபடுத்தியுந்துசு
மலைபடுமலருமஞ்சும்வளைபடுந்தறுவுஞ்செய்யுங்
கலைபடுமெதியுமன்றுங்களைபடுந்தடமுஞ்சாந்தம். (௫௰]

வேறு.

செய்காட்டுந்தாமரையாத்தேன்காட்டுங்கழுநீரா
மொய்காட்டுநறுந்தளவாமுருகாட்டுமாந்தளிராக்
கைகாட்டிமுகங்காட்டிக்கண்காட்டிநகைகாட்டி
மெய்காட்டித்திருமடந்தைவிளையாடுந்திருநாடு. (௫௧)

பண்ணவருங்கடவுளரும்பரவுசராசரமாகக்
கண்ணனைசேர்த்திசைதோறுங்காதலாயுறைகுவரோ
லெண்ணலார்நன்கர்த்தென்னாரியநாட்டணிபுகழ்தல்
விண்ணவர்க்கேயரிதாமேமேதினியோர்க்கெளிதாமே. [௫௨)

பூவிருக்கிறைவர்கஞ்சப்பூமகட்கிறைவர்தங்க
ளாவிக்கிறைவர்வாழ்தென்னாரியநாடுசொற்றும்
பாவினிற்பயனிற்சொல்லிற்பண்ணினிற்பயிலுநர்தோறு
நாவிருக்கினியதானநகரினைப்பகர்தல்செய்வாம். (௫௩)

உ வது-திருநாட்டுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௱௫௩.

---

✠ காலாறு - வண்டு.

## ௧-வது-திருநகரச்சருக்கம்.

அகிலகாரணனகிலலோகமும்படைத்தளித்தருளிடமாகிச்
சகலகாலமுமழிவிலாத்தலமெனுந்தகைமையாற்சதுர்வேதன்
பகலிராத்தொறுந்தவிர்படுபலபருப்பதங்களுங்கடல்யாவும்
புகலிடம்பெறவந்திடம்பிடித்ததாம்புரிசையுமகப்பாவும். (௧

பூமிக்கோரரசிருக்கைதென்புடார்ச்சுனபுண்ணியபுரமாகு
நேமிக்குன்றமேநகர்ப்புறஞ்சூழ்தருநெடுங்கிலைப்பெருஞாயில்
வாமக்குன்றெலாமாடங்கள்வரைக்கொருமருகனார்திருக்கோயி
லேமக்குன்றுசூழ்நாற்கிரிகோபுரமெண்குலக்கிரிமாதோ (௨)

இஞ்சிசூழ்வதுநாற்றிசைப்புறமெலாமிடந்தொறுந்துளிதூங்க
மஞ்சுசூழ்வதுமணிமதிற்புறமெலாமங்கையரடிசேர்செம்
பஞ்சுசூழ்வதுமைந்தர்பொன்முடியெலாம்பயிலுமங்கலநாத
மஞ்சுசூழ்வதுமனையெலாமணிநாழித்தாறுசூழ்வதுமூதூர், (௩

நாட்டம்போல்வதுதனைமகட்கந்நகர்நாடொறுமளகேசன்
றேட்டம்போல்வதுதிரள்பெறுமிருநிதிதிரிபுனாசெழுங்காமக்
கோட்டம்போல்வதுகுளிரறச்சாலைகற்குறுமுனிபெரும்பான்மை
நீட்டம்போல்வதுநிகழ்தருபதிதொறுநிறைதருபெருஞ்செல்வம், ௪)

நீலமாடமுநித்திலத்தெற்றியுநிரைத்தனதெருத்தோறுங்
கோலமோதிமமாகியொவ்வோருருக்கொண்டுபற்பலகால
மாலமுண்டவனடிமுடிதேடுவாரணிவிழாத்தொறுங்காண்பான்
மூலமானபற்பலவுருக்கொடுநகர்சூழ்ந்துநிற்பதுமானும். ௫

வேறு.

முந்தமாமறையோர்முதுவீதிவாய்
விந்தைநாரியர்மேடையின்மேற்கிளி
சிந்தைவேதச்சிறுரயிர்ப்பாயினுஞ்
சந்தைசொல்லுந்தனித்தனிமாடங்கள். (௬)

விரும்புகைக்குலமேகத்துளியெலாங்
கரும்புகைக்குங்கனிமொழிமாதரார்
சுரும்புகைக்குமலர்க்குழல்சூட்டகில்
வரும்புகைக்குளிர்வாசனைவீசுமால். (௭)

வேறு.

விடமுந்தூயதெள்ளமுதமுமின்னனார்விழிகளினிடைத்தோன்றுங்
கடவுதண்டமுங்கருணையுமனுநெறிக்காவலரிடைத்தோன்றுஞ்
சுடரிற்காய்வதுங்குளிர்துளிபொழிவதுஞ்சூரியரிடைத்தோன்று
மடைவுசேர்பெருந்தவத்தர்பாற்சாபமுமநுக்கிரகமுந்தோன்றும். அ

கறைகொள்கந்தரக்கடவுளைச்சேர்ந்தபின்கறைதவிர்மதியோங்கிப்
பிறைகளாயிரகோடியாய்க்கிளைத்தமேற்பிறழ்வதோபெருவானத்
துறைகொள்கங்கையின்பெருக்கமோபுரந்தரன்சுடர்ப்படைதனிலீர்ந்த
சிறைகள்குன்றெலாமுளைத்தவோமாடமேற்செழுமணிக்கொடியீட்டம். (௯)

பின்னல்சேர்நிவேணியார்முத்தலைப்பிறங்கலிலயலுகி
முன்னெலாம்நூர்தலமெலாம்படைத்தான்முகிலெலாமதியெல்லாம்
பொன்னெலாமணியெலாமணங்கமழ்பூவெலாமுயர்வானின்
மின்னெலாங்கொடிசெமைத்ததாமிநகர்மின்னலூர்வடிவெல்லாம். (௰)

வேறு.

விளர்தருமதியின்பாலோவெள்ளிவள்ளத்தின்பாலோ
கிளர்வதென்றுணராப்பின்னைக்கிள்ளைகண்முகப்பவெகித்
தளர்வதனைகமேடைத்தளர்பொருந்தேய்கதிங்கள்
வளர்வதுதவளமாடம்வடிம்புதோய்கறையான்மன்றோ. (௰௧)

பயிலுமேனிலைக்கபோதம்பர்தடிக்தாவோலா
மயிலெனக்குயில்பின்காட்டமழலைவாயிசையாலஞ்சிக்
குயிலெனமயில்பின்காட்டக்குழைகளாலளகக்கோத்தால்.
வெயிலொடுபுயலுங்காட்டிமீட்டுமீட்டழையாநிற்பார். (௰௨)

பச்சையாற்பவளக்கோத்தாற்பதமராகத்தான்முத்தால்
வச்சிரவயிடூயத்தான்மற்றுளமணிகளாலு
மச்சினில்வார்த்தாலென்னவணிகிளர்மாடவீதி
✠ நச்சரவுச்சியாட்குவமணிமாலைமாலும். (௰௩)

வேறு.

தெளிக்குமணிவளைவார்ப்பச்சிலம்பலம்பவாறுயர்ந்த
பளிக்குமணிமேடையின்மேற்பந்தாடல்பயில்வாரை
யளிக்குலஞ்சேர்பூந்தடத்திலன்னமெனப்பொன்னாட்டுக்
களிக்கும்வானதிக்கரையிற்கன்னியன்னங்குழுமால். (௰௪)

வண்டாடுஞ்சோலைகளுமயிலாடுஞ்சாலைகளும்
விண்டாடுமேடைகளுங்கண்டேண்டுமேதினிமான்
பண்டாடுங்கரங்களன்றிப்பயில்கோடிகரமெடுத்துக்
கொண்டாடுவதுபோலுமணிமாடக்கொடியெல்லாம். (௰௫)

குலவுதமணியச்சிகரிகோலவடவரைகாட்ட
விலகுமணிமேனிலைகளெழுபுவனமுறைகாட்ட
நவமணிகளழுத்தியதூவக்கிரகநிலைகாட்ட
நலக்கணிதநூலோர்க்குளன்மயக்கங்காட்டுமால். (௰௬)

---

✠ நச்சரவுச்சியாள் - பூதேவி.

ஒண்மணிமண்டபந்தோறுமுயர்கொடிகள்வானளவித்
திண்மையுறநின்றுடல்செங்கதிரோன்றேர்த்துகளும்
வெண்மதியிற்படர்மாசும்விண்மீதுபடராமே
மண்மகள்செங்கரந்தூசுகொண்டுதுடைப்பதுமானும். (௰எ)

அரும்படிகநிலத்தூடுமணங்காளையாடவர்கள்
விரும்படிகளெனப்பரவியான்முடிமேலலத்தகங்கள்
வரும்படிகண்டலர்விளைப்பார்வருகாலைமருமாலைச்
சுரும்படிகளடிச்சுவடுதோன்றுமன்மறைத்திடுமால். (௰அ)

வேறு.

பொதிர்படக்ககனந்தாவும்பொலன்மணிமாடகோடிக்
கதிர்கள்கண்வழுக்கித்திங்கள்கனககோபுரத்தின்மோதிப்
பிதிர்படுமதனாலன்றேபிறையதாய்க்குறையாயெங்கும்
விதிர்படுநாளாய்க்கோளாய்மீன்களாய்ப்பரம்பும்வானம். ௰௯

யிண்டருங்கொடிஞ்சித்திண்டேர்விழாவருவசந்தவீதி
யெண்டரும்புயத்தெம்மானையென்றுமேநின்றுபோற்றுந்
தொண்டர்தங்குழாங்கள்போலுஞ்சுதைநெடுமாடமெல்லா
மண்டர்தங்குழாங்கள்போலுமம்பொனூடரங்கமெல்லாம். ௨௰

வேறு.

தாயின்மிக்கவன்றொழுமுச்சகங்
கோயின்மிக்குவருபெருங்கொள்கையாற்
சேயின்மிக்குலகுண்டுமிழ்சிதரன்
வாயின்மிக்கதுகோபுரவாயிலே. ௨௧

வேறு.

வாடைவந்துலவியபடிகமாமணி
மேடையிலுடுக்குழாத்துலவும்வெண்பிறை
யோடைநீர்ப்பெருந்தடமதனிலோதிமப்
பேடைதன்பார்ப்பொடும்பெயர்தல்போலுமால். ௨௨

எகமாமரகதத்தியற்றுமாளிகை
மாகமார்சூளிகைதொடுத்துமாடெலாம்
பாகமேற்பதிந்தொளிர்பதுமராகங்கண்
மேகமேற்பரந்தொளிர்மின்கண்மானுமே. ௨௩

சேடகமுயர்நிலைதிட்டுஞ்சித்திர
நாடகப்பத்திசேர்நடத்தைநாடொறும்
பாடகக்கால்களாற்பயின்றதாலன்றே
வாடலிலுயர்ந்தனரமரர்மாதரே. ௨௪

பளிக்குமாளிகையின்மேற்பவளத்தூவிகள்
குளிக்குநீர்க்குளக்கண்மேற்குமுதம்பூத்ததாங்
தளிக்கருமுகிலினஞ்சூழ்ந்தலாவரல்
களிப்புறுசிறையளிக்கணங்களேய்க்குமால். (உரு)

இந்திரநீலத்தினியன்றமாடமேற்
சந்திரகாந்தத்திற்சமைத்ததூவிக
ளந்தரமதிக்குநிரளித்தல்வேனிலுங்
கந்தரம்பொழிதளிக்காலங்காட்டுமே. (உசு)

வேறு.

சாந்தளைக்குமடவார்கள்வீதிதொறுஞ்சவைதொறுஞ்சென்
மார்தளைக்குங்குமச்சேறுமறுநாளும்வழுக்கெடுக்குந்
தேர்தளைக்குளுழவோர்க்குந்தெவ்வலிலபோற்றுத
காந்தளைக்கும்பிடிவோர்க்குங்கைகூப்பும் ○ கதிர்ச்சாலி. (உஎ

வேறு.

காமர்பொன்மாளிகைக்கவினிரண்டுபான்
மாமணிவயிரத்தான்முகப்புவாய்க்கிட
மைமால்வரையிருபாலும்பௌவநாட்
சோமனுமிரவியுஞ்சுடர்தன்மாறுமே. [உஅ

திங்களைமுகமெனச்செய்நான்முகன்
பங்கயமுகிழினைப்பதித்ததாலன்றே
நங்கையர்குவிமுலைநாளும்வெய்யவ
னங்கதிர்பரப்பினுமலர்ந்திடாததே. (உகூ]

துன்னியகொழுநர்பாற்சுரதாரியர்
முன்னியபுலவியின்மொழியைமேடைமேற்
பன்னியபசுங்கிளிபயிலும்பான்மையான்
கன்னியைப்பயிற்றுவகாமநூலரோ. (௩௰)

வேறு.

சிறுகாலையட்டில்புகலருத்தியுறச்சமைத்தல்சுவைதிருத்தியூட்டன்
மறுகாலையென்றுதயிருந்தல்ழித்தன்மகப்பெறுதன்மடநாணச்சம்
பெறுகாலையின்புறுதன்முன்றுறக்கப்பின்றுறங்கல் ‡ பின்னெழாத
லுறுகாலைதொழுதெழுதல்பன்னிரண்டுமங்கையர்க்கற்புடையோர்செய்கை, [௩௧]

நிதமறையார்பிரமமுத்தழலாற்றெய்வமுயர்பலியாற்பூதம்
பேதமானுடமதிதிபூசையாற்றருப்பணத்தாற்பிதர்க்கள்யாக
மேதகுமைவகைவேள்வியிவ்வகைசெய்தறுதொழிலும்விதியாலாற்றிப்
போதநெறிக்கொருதுணையாய்மறைக்கொருவித்தாயுறைவர்புரிநூற்செல்வர். (௩௨

---

○ கதிர்ச்சாலிகென்பதுபின்னையதற்கு-அருந்ததி எனப்பொருள்படும்.
‡ பின்னெழாதல்-கணவன்துயில்நீர்ந்தெழுமுன்எழுதல்.

மூலமறைமறுவோதிமுறைபெறுசைவாகமத்தான்முதல்வர்பூசை
காலமுறநித்தியநைமித்தியகாமியங்களினாற்கருத்தினாற்றி
யாலமமுதுண்டபிரானடியர்குழாத்திருந்தமுதமருந்திநாதன்
சீலமலதுணராதேயுணர்ந்திருப்பர்முப்பொழுதுஞ்சிவநூற்செல்வர். ௩௩

காலைதொறுமுழையொடுநூலாய்ந்துகுடிமுதலாங்காப்புப்போற்றி
மேலைநூற்பாவலர்க்கும்வேதியர்க்குமீய்ந்துபலவேள்விவேட்டுச்
சாலைதனிற்சிவபெருமான்றமர்களொடுந்தமர்களொடுந்தகவாயுண்டு
மாலைதொறுமொற்றுய்ந்துதுயிலிடத்தும்பார்காப்பர்மனுநூற்செல்வர். ௩௪

புங்கமாமறையோதிவாணிகந்தொட்டறுதொழிலாற்பொருள்களாக்கிப்
பிங்கலற்குங் ○ கருகூலம்போலிருப்பபொருகூலம்பிரியாச்செல்வர்
கங்கைமாபினிலுதித்துக்கலைபயின்றுபொருள்வளர்த்துக்கலிகளாய
வெங்களைகட்டுயர்தருமவேளாண்மைபுரிந்திருப்பாமேழிச்செல்வர். ௩௫

வேறு.

மருவுறுநன்னெறிநிலத்துவாய்மையெனும்விதைதெளித்துப்
பெருகுகுணநீர்பாய்த்துப்பிறங்குசினக்களைகடிந்து
தருமமெனும்பயிர்வளர்த்துச்சகலபோகமும்விளைக்கும்
பொருவருஞ்சீர்த்திருநகரம்புடார்ச்சுனபுண்ணியபுரமே. ௩௬

மாமணிமண்டபமாடமாளிகைகளுறுப்பாகக்
கோமதியமுகமாகக்கொங்கைகோபுரமாகக்
காமருதேரல்குலாக்கடிமதின்மேகலையாகப்
பூமகளாரரசிருக்கும்பொன்னகரமிந்நகரம். ௩௭

இல்லறமுந்துறவறமுமிடைவிடார்வெறுக்கைவிடார்
பல்பயிர்க்கும்யோகியர்க்கும்பதந்தொறுங்கொண்மூப்பொழியு
நல்லவரும்விளையாட்டுயர்தவருஞ்சுதெறிவா
ரல்லவருமெல்லவருமாதரிப்பாரிரவலரை. ௩௮

வேறு.

பன்னகர்பதியாமென்கோபாதலத்தரசின்வாழ்வாற்
பொன்னகரொன்கோபுத்தேட்பொலிவினான்முனிவோர்சித்தர்
கின்னரர்பதியாமென்கோவாங்கவர்கிளைக்குழாத்தா
லிந்நகர்க்கிணையாவோருரிசைக்கலாந்தகைமைத்தாமோ. ௩௯

பன்னகசயனனூட்டிற்பங்கயனுலகிற்றேவர்
மன்னகர்சுவர்க்கந்தன்னில்வளமிகுநகரையாரு
நன்னகரொனவேயிந்தநகர்ப்பெயரிடுவாரானு
லிந்நகர்ப்பெருஞ்சீர்கூறவெம்மனோர்க்கெளியதாமே. ௪௰

○ கருகூலம்-பொக்கிஷம்-அது.இக்காலத்தில்-கருவேலம்எனமருவிவழங்குகின்றது

இந்தமாநகனாயாருமிறையவனின்மையமீன்ற
செந்தவர்க்கனிவாய்ச்செல்விசெண்பகவல்லிபாக
னந்தமோடாதியில்லானுயிருமெவர்க்குந்தாயாய்த்
தந்தையாய்த்தலைவனுள்ளான்சரிதையைப்பரவல்செய்வாம். ௪௧

௩-வது திருநகரச்சருக்கமுற்றிற்று-
ஆகத் திருவிருத்தம்—௱௯௰-

---

## ௪-வது புராணவரலாற்றுச்சருக்கம்

விரைசெய்தாமரைவியன்கலைமாதுடன்மேவி
முருகுயிர்த்தநால்வாயுறவாரணமுழங்கி
யரசமைந்தபூந்தண்டுகமண்டலமசைத்துப்
புரையிலாவனத்திசைமுகக்கடவுளைப்பொருவும். ௧

தளவணிந்தவேயிசைதந்துசரப்புடைப்பாலுங்
களவுசெய்துகற்றிளையுண்டுகாவிளங்கன்றால்
விளவெறிந்தநீள்குருந்தமேலிவர்ந்தவிண்ணொடுபா
ரளவுசெய்தலாலாழிமால்பொருவுமவ்வனமே. ௨

வேள்விபற்பலபுரிந்தவான்றருநிழன்மேவித்
தாழ்விலாமுகிலூர்ந்தநீள்வச்சிரந்தரித்து
வாழ்வுசேரமகளிராடலினுகமலர்ந்து
சூழ்குலாவனம்பொன்னகர்க்கிறையெனத்தோன்றும். ௩

நின்றுதாதணிந்தெழிலிநீர்மஞ்சனஞ்சொரிந்து
வன்னிபாதிரிமாதவிகூவிளம்வகுளம்
பன்றுருந்தமேற்றளிர்மலராருச்சனைபயின்று
கன்னிநீள்வனஞ்சிவபிரானடியவர்கடுக்கும். ௪

முறைபழுத்தமெய்யம்மனத்தலைமுனிவார்வேண்ட
மறைபழுத்தவாய்த்திசைமுகன்குசையினல்வகுத்த
நிறைபழுத்ததோர்நேமியினைத்ததாய்நிரம்பி
நறைபழுத்தநுக்கலைசேர்நைமிசாரணியம். ௫

வாவிதாமரைவான்முகமலர்ந்தனன்மருங்கிற்
காவிசாத்தியுற்பலமெறுங்கண்மலர்முகிழ்த்து
மேவிமாதவர்நிகர்ப்பதுமின்னனார்குழல்போ
லாவிமாமணக்கமழ்வதுநைமிசாரணியம். ௬

தேனூர்தம்பியுமெடுத்தபண்ணிசைசெவிமடுத்து
மானும்வெள்ளையுமொருதலைத்துயில்வதுமயில்கள்
கானநாடகம்பயிறாக்கானமாமறைகண்
ஞானயோகிகள்பயில்வதுநைமிசாரணியம். ௭

ஆலமுண்டவர்க்கன்பராயதிஞராயழியாக்
காலமூன்றையுமுணர்ந்தவரிருப்பதுகருதுஞ்
சீலமூன்றின்மேற்றெளிந்துமெய்த்தவங்கள்செய்வார்க்கு
ஞாலமூன்றின்மேற்கதிதருநைமிசாரணியம். (அ)

வேறு.

மவ்வனஞ்செய்யதாகவருந்தவவுழவர்யாரு
மெய்வரும்விதியேர்ப்பூட்டிச்சமிதைவித்தெறிந்துவேழக்
கைவருபருமைநெய்யாம்புனல்சொரிந்தனேககாலஞ்
சைவவைதிகவேளாண்மைச்சத்திரமகங்கள்செய்தார். [கூ)

பண்ணியதவங்கடானம்பரிவினுற்புரிவார்க்கன்றிக்
கண்ணினுற்கண் டுளார்க்குங்கதியெனும்விதியையோர்ந்து
நண்ணியகலைகள்யாவுநவின்றருள்சூதனன்னேர்
புண்ணியவேள்விச்சாலைபுகுந்தனன்முனிவோர்சூழ. (ய]

பொருந்தவச்சூதர்சூழாப்புலன்மகத்தோர்கடாவி
யிருந்தவச்சூதர்போலுமிருடியர்வருடியேத்தி
வருந்தவச்சூதன்றன்னைமாதவவியாதனென்னும்
பெருந்தவச்சூதஞ்சேர்ந்தபேரிசைக்குயிலைச்சூழ்ந்தார். (யக)

ஆசனத்திருத்திவாழ்த்தியருக்கியமுதலநல்கிப்
பூசனைபுரிந்தியாங்கள்புரிமகந்தொடுத்தகாலை
வாசனைமுகுர்த்தமன்றேவந்தனைபெரியோயென்று
நேசனைவினவிக்கேட்பார்நிறைதருபுராணமெல்லாம். [யஉ]

பண்ணியல்பலபுராணம்பகர்ந்தபின்பதினுலென்ன
வெண்ணியல்சிவபுராணமீரார்திலிலக்கமாக
நண்ணியகாந்தந்தன்னினன்னகர்த்திருக்குற்றுலப்
புண்ணியபுராணமெங்கள்புந்தியிலுவட்டாதென்றும். (யங]

அன்னதைச்சுருக்கமாகவறைந்தனையடுநோய்தீர்ப்பார்
முன்னுமந்திரத்தையோதிமூலம்வித்தறியார்போலப்
பன்னரும்பலநூல்கேட்டுந்தவிர்ந்திலபதிமேற்றுக
நன்னகர்ப்புராணமின்னுநன்கெமக்கருள்வாயென்றார். (யச]

மோனரீதுரைப்பச்சூதன்மொழிகுவான்முக்கணர்க்குத்
தானமெயனந்தமாகுமவைகளிற்றவப்பூவின்பத்
தேனமர்திருக்குற்றுலஞ்சிவரகசியமாமீது
ஞானபக்குவத்தார்க்கன்றியாவர்க்குநவிலொணுதால். (யரு]

தன்மகன்முதலோராறுதகையர்நூற்குரியரோனு
முன்னவர்களியாதிமூவைந்துதிறத்தார்க்கோதார்
சொன்னநாலிருவருள்ளுந்தூயவர்நால்வர்தம்மி
லன்னமெயனையரானீர்பால்பிரித்தறிந்தவாற்றால் (யசு)

அதிகாரர்தேவராலுமறிவதற்கரிதாமுண்மை
மதிவலிகலத்திறுலேவிளவுதல்வல்லரானீர்
பதிமுதலுரைத்தமூன்றிற்பரமெனும்பொருளைச்சேரும்
விதிவலியுடையீர்நீரேயென்றமேல்வியந்துசொல்வான். ௰எ]

வேறு.

சீர்பெருகார்தமெனுஞ்சிவபுராணச்செழுஞ்சங்கிதைகளாதிற்
சார்பெருகுகுழலுமையாட்கெம்பிரானுரைத்தருள்சங்கரசங்கிதை
யேர்பெருகுர்திருமுடிமேலிருந்தருளிக்குமரதேசிகனெங்கோமா
னேர்பெருகவுணர்தரும்பசம்பவனுக்குபதேசநிகழ்த்தினுல். (௰அ)

மாதவரினுயர்மலையமாமுனிவனதையுணர்ந்தவகைமைசாலப்
பூதலத்தினுணர்த்தியதாலகத்தியசங்கிதையெனவும்புகலவர்மேலோ
ரீதலறசனற்குமரசங்கிதையுந்தருபொருளாமெழிற்செவ்வான
மீந்லெழுமதிபோலுங்குற்றாலமகிமையெனவியந்துபோற்றி. [௰௯]

விரிகூடக்கம்பகும்பக்களிறபிளிறிடவுரித்துவிரித்துவேங்கை
யுரிகூடவுடுத்தருளிநடித்தருளுஞ்சிவபெருமானுலகமீன்றாள்
புரிகூடுதிருமணத்தின்பொருட்டாகக்குறமுனிக்குப்புகன்றகாதை
திரிகூடத்தலமகிமைதிரிகூடவரைமுதலாச்செப்புகின்றான். [உ௰]

ச-வது-புராணவரலாற்றுச்சருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்--ளஅ௰.

## ரு--வது. திரிகூடமலைச்சருக்கம்.

தேயாழிசைக்கின்னரர்கானமுந்
காதல்விஞ்சையர்பண்ணிசைகானமுஞ்
சேதமால்வரைத்தீங்குளிர்க்கானமும்
வேதகானமுமிக்கதுதிக்கெலாம். [க)

முழைகடோறமுனிவர்குழாங்களே
யுழைகடோறமுயர்மகச்சாலையே
கழைகடேறுங்கதிர்மணிமுத்தமே
மழைகளேமஞலியையமானுமே. ௨)

பந்திபாய்முகில்பாய்மதமாவெனத்
தந்திபாயுமத்தந்தியைவெற்பென
மந்திபாயுமம்மந்திகள்பாய்தல்போ
லுந்திபாயுமுயர்வரைச்சார்பெலாம். [௩)

கானயாறுங்கடிமலர்ச்சோலைவாய்த்
தேனயாறந்திசைபொருகைமலைத்
தானயாறுந்தவைவனச்சோலையும்
வானயாறும்பமுனையுமானுமே. [௪)

செருவிலார்த்தெழுதேன்பொரத்தேனிரு
லருவியார்த்திடவார்த்திடுமைவன
மிருவியார்கரும்புனத்தினுமெண்ணிலாக்
குருவியார்ப்பக்குரால்பரந்தார்க்குமே. ரு

குமுதமொத்தவிதழ்க்குறக்கோதைமார்
கமுகநெற்றிக்கறிபடர்முன்றில்வாய்
விமுதினைக்குவிலையெனநேர்க்குமே
ரமுதினைச்சுரமாதரளப்பரால். சு

வேறு.

சீர்மலிபடிகப்பாறைபத்தியாச்செல்வான்மீனை
நீர்தருகயல்போற்கொத்துநிறைதருமடப்புள்ளீட்ட
மூர்மணிச்சுடிகைப்பாந்தளுற்கையென்றூதியூதிக்
கார்மலிகுளிர்க்குத்தீப்போற்காய்வனகிழக்கூன்மந்தி. எ

நகிலெழும்புகைபார்க்கென்னநனிசெழுபொருப்பின்மாத
ரகிலெழும்புகையும்வேடரடுபுனத்தகருச்சாந்த
மிகிலெழும்புகையும்வேதவேள்வியின்புகையும்விண்மேன்
முகிலெழும்புகைபோன்மொய்ப்பமுகிழ்ப்பர்வானவருநாட்டம். அ

ஆழ்புனலருவியார்ப்புமந்தணரோத்துநூறு
வேள்வியினார்ப்புமேலைவிண்ணவரார்ப்புமாதர்
வாழ்புனக்கவண்கல்லார்ப்புமணிவளையார்ப்புமாங்கே
யூழ்வலிகடக்கின்றார்போலுருமொலிகடக்குமாதோ. கூ

மழைதருமுத்தும்வானமதிதருமுத்துநீண்ட
புழைதருபணைக்கைநீலப்பொருப்பினமாமருப்பின்முத்தும்
கழைதருமுத்துமேனக்களிறுகோடுகுத்தமுத்தும்
விழைதரவொளிருஞ்சாரன்மீனொளிர்வானமேய்க்கும். ய

வேறு.

சோலைகாட்டுந்துதையிருளாலிரு
வேலைகாட்டலிலாமையின்மெய்த்தவர்
காலைகாட்டுவவாவிக்கமலங்கள்
மாலைகாட்டுமலர்தருகாவியே. யக

மாகமேனகைமங்கையுருப்பசி
மோகநாடகம்பார்ப்பதின்மொய்த்தெழார்
தோகைமாமயிலாடலைச்சோலைவாய்
மேகமேனின்றுபார்ப்பர்விண்ணோரெல்லாம். யஉ

மலைகடாவுமருவிகள்வானதித்
தலைகடாவுந்தலைமதிமானின்மேற்
கலைகடாவுக்கணத்துமேடைமே
லிலைகடாவுநிரைவளையாடரோ. ௰௩

கோலமாங்குயில்காவினிற்கூவுத
லாலமுண்டவனிங்குளனுதலாற்
ஞாலம்வானந்தடவப்பெரிரோன
மாலயன்றனைக்கூவுதன்மானுமே. ௰௪

அருவியாடிக்கரைபுகுவீர்க்கண்டர்
தருவிமானமொப்பாமலர்ச்சண்பக
மருவிமாருதத்தாலுகுமாமலர்
பொருவில்வானவர்பூமழைபோலுமால். ௰௫

சாலமாதறவம்பணைசாதியே
சாலமாதறவம்பணைசாதியே
யேலமாரமிலவங்காறுமே
யேலமாரமிலவங்காறுமே. ௰௬

காளத்தும்பிகடாங்கவிப்பாலெழு
கானத்தும்பிகடாங்கவிப்பாலெழுந்
தானத்தும்பர்களிற்றொடுந்தாக்குதைத்
தானத்தும்பர்களிற்றொடுந்தாக்குமே. ௰௭

கனமுழக்குவகானமடக்கலுங்
கனமுழக்குவகானமடக்கலும்
வனமடுத்துறைமாகயமென்றுமே
வனமடுத்துறைமாகயமென்றுமே. ௰௮

வண்டினங்கண்மலர்வனசத்தின்மேல்
வுண்டினங்கண்மலர்வனமாதரார்
கண்டுளக்குமுகக்தலங்காட்டுமே
கண்டுளக்குமுகத்தலங்காட்டுமே. ௰௯

மாவிருப்பைமகிழ்தருவன்னியே
மாவிருப்பைமகிழ்தருவன்னியே
காவினித்தகவிற்றவவாசகம்
காவினித்தகவிற்றவவாசகம். ௨௰

கோடரக்குயிலுடுக்குலமரக்
கோடரக்குயிலுடுக்குலமலி
லோடரக்கமழையுமருவியே
யாடரக்கமறையுமருவியே. ௨௧

வானரம்பையின்மாவிற்பலவின்மேல்
வானரம்பையின்மாவிற்பலவின்மேல்
வானரம்பையின்மாமயில்யாழ்செய
வானரம்பையின்மாமயிலாலுமே. உஉ

பூண்டவாதுபுணர்முலையார்கதை
பூண்டவாதுபுணர்முலையார்படா
ராண்டசோகமமருநீழல்வா
யாண்டசோகமமருமெய்துவார். உ௩

வேறு.

மன்றலயர்பெருவளங்களிவ்வகையால்வளர்ந்தோங்கி
மின்றலையசடையார்க்குமுமைக்கும்வியனுடரங்காய்த்
தன்றலையில்வந்தடுத்தோர்தவம்வளர்த்துச்சிவம்வளர்க்குந்
தென்றலையும்வளர்க்குமதுசெண்பகப்பூந்தடங்காவே. உ௪

மற்றுரும்புகழ்கயிலைவடமலைவிட்டெம்பெருமான்
முற்றுதகளபமுலைமுதல்வியுடனுறையுமிடங்
குற்றாலத்திருநகருங்குளிர்மலர்ச்செண்பகக்காவுந்
தெற்றுகவுடையமலைதிரிகூடத்திருமலையே. உ௫

பூவருக்கமுதலாயபுவனமெலாம்படைத்தளிக்கு
மூவருக்குமுளைக்குமிடமாதலான்முதுமறைகண்
மாவருக்கையாய்முளைத்துமாதவஞ்செய்மகிமையினற்
றேவருக்குந்தெரிவரிதாந்திரிகூடவரைமூலம். உ௬

வேறு.

தெய்வமுத்திரைக்காவெனவழிபடர்செண்பகப்பொழிலென்னுங்
கைவசப்பட்டதகைந்துபைந்தாதினுற்கமழ்திருநீறுடி
மைவனத்துறைநாளின்மேற்கோளின்மேல்வானின்மேல்வானோர்மேற்
சைவமுத்திராசாத்துமுத்தலைக்கிரிதண்டமிழ்த்திரிகூடம். உஎ

ஈன்றுகாப்பதுமழிப்பதுமறைப்பதுமிதற்குமேல்விளையாட்டு
மான்றபல்வகைக்காரணகாரியமவையெலாமுறைதோன்றத்
தோன்றுகாலமுங்கணிதமுங்கடந்ததோர்சுடர்முளைத்திடுநாளின்
மூன்றுகாலமுந்தன்னிடைமுளைத்திடமுளைத்ததுதிரிகூடம். உஅ

தம்மையேதமக்கறியொணுதிருளெனச்சமைந்தமும்மலமோடச்
செம்மையேமுதன்முச்சுடரொறிப்பதுசெனனசஞ்சிதமேய
வும்மையேதொடுத்திம்மையேமறுமையேயுயங்குமுப்பவநோய்க்கு
மும்மையேமணிமந்திரமருந்தெனமுளைத்ததுதிரிகூடம். உ௯

பின்னுசெஞ்சடையெம்பிரானெத்தலம்பிரியினும்பிரியாதே
துன்னுகின்றமால்வரையெனத்தமைப்பிரிதொறும்பிரிவாற்றுமே

மன்றுமாடகவரையிரசதகிரிமந்தரமெனமூன்றும்
பொன்னின்றுவகைக்கொடுமுடியாமெனப்பொலிந்ததுதிரிகூடம். ௩௰

கமலநான்முககாரணப்பிரளயகற்பகாலந்தோறு
மெவணமாகவித்தலத்திடைச்சிவபிரானிருத்தலாலழியாமற்
புவனம்யாவையுமொருதலையந்தரமொருதலைபுரையில்லாப்
பவனமோர்தலையாகநின்றெடுத்தருள்பழமலைத்திரிகூடம். ௩௧

வீற்றிருந்ததேன்கமலமேலுவரிமேலோங்கன்மேலனம்புள்ளே
றேற்றிருந்துமுச்செயல்செய்வான்றுவடிவெடுப்பவர்க்கிடமாக
மாற்றிருந்தபொன்மேகலைமூன்றுடும்வயங்குதெக்கணமேவி
வீற்றிருந்ததோர்வடநெடுஞ்சயிலமேவிரிதமிழ்த்திரிகூடம். ௩௨

பொன்மலைக்குமோர்முதுமலைபுதுமையாற்புதுமலைகயிலாய
நன்மலைக்கொருதுணைமலையுவரிசூழ்ஞாலமேல்வளர்ந்தோங்கும்
பன்மலைக்குமோர்தலைமலைதிசைதொறும்பசுந்தமிழ்மணநாறுந்
தென்மலைக்கொருவடமலைசிவபிரான்றிருமலைத்திரிகூடம். ௩௩

வேறு.

ஆமையெழுத்தாலுலகையருள்செய்வார்க்கிடமாகி
மாமையெழுத்துடாடாமறைநான்கின்முதற்கிடந்த
வூமையெழுத்தருவாகுமுயர்சயிலமவ்வெழுத்தின்
சேமவெழுத்தொருமூன்றின்வடிவமேதிரிகூடம். ௩௪

ஆடலொருமூன்றுகிமூவுருவுமமைந்தார்க்குக்
கூடமொருமூன்றுயுங்கூடமேலிருக்குமறைப்
பீடமொருமூன்றும்பொழின்முத்தேவியர்க்கு
மாடமொருமூன்றும்வயங்கியதுதிரிகூடம். ௩௫

முக்குணமோவெப்பொருளோவெச்செயலோவெனமறையு
மிக்குணராவகையுணர்த்தயான்மாட்டேன்மெய்யடியா
ரக்குணமேயச்செயலேயப்பொருளேயானபிரான்
முக்குணமோமுச்செயலோமுப்பொருளோதிரிகூடம். ௩௬

வேறு.

பொன்னின்மாமணியருவிப்பூமாலைகரத்தேந்தி
வன்னிசேர்காத்தார்க்குமணம்பூட்டவருமிமையக்
கன்னிபோல்வதுகருணைக்காசினியாமடமகட்குச்
சென்னிபோல்வதனைத்திருமவுலிபோல்வதால். ௩௭

முந்தையார்திருமுடிமுத்தலைவேலையுமேந்தி
விந்தையார்கோடீரமதிவளர்ந்தவிடையேறு
மெந்தைபோல்வதுருலத்திலுலகின்றபெருமாட்டி
தந்தைபோல்வதுகருணைத்தாய்போல்வதுலகினுக்கும். ௩௮

வேறு

பூமடந்தைதனமிசைந்துபாரிடந்துவானளந்துபொன்னைமேவி
மாமணியினிறம்படைத்துவாளரம்புள்ளேறியலைவாரிமேவித்
தாமரைமாமலரிலஞ்சிதனிற்பூத்துச்செழுந்திகிரிசங்கமேந்தி
நாமமாயிரம்படைத்தமால்போலுந்திரிகூடஞானக்குன்றம். ௩௯

உந்திமிசைவந்ததடப்பாணியாற்குவலையங்களுவப்பினீன்று
விந்தைசேரும்புவனம்பலபடைத்துத்திசைமுகங்கண்மேவிவானி
லிந்திரற்குமிடர்நீக்கியெண்கிரியின்வாகுமிகுந்திருத்தலாலே
முந்துபதுமத்தயனைநிகர்காட்டுந்திரிகூடமுருகார்குன்றம். ௪0

எத்தலமுமேகலிங்கமுளதாகும்பஞ்சலிங்கமிசைப்பர்மேலு
முத்தரகாசியிற்பதிட்டைகோடிலிங்கம்வடவருவியுவரிமேய்ந்து
மைத்துளிபெய்திரிகூடச்சிலையெல்லாஞ்சிவலிங்கவடிவமாகி
யத்துணையுஞ்சிவமாகிலெத்துணையென்றெடுத்துரைப்போமதன்சீரம்மா. ௪௧

திரிகூடத்திருமலையைவலஞ்செய்தார்தீராதவினைகடீர்ந்தார்
திரிகூடத்திருமலையைத்திசைநோக்கிப்பணிந்தவருஞ்சிவத்தைச்சேர்ந்தார்
திரிகூடத்திருமலையின்கீர்த்தனங்கள்கேட்டவருந்தேவரானார்
திரிகூடத்திருமலைசார்ந்திருப்பவர்கண்மகிமைதுதிசெய்யற்பாற்றே. ௪௨

வேறு.

என்றிவைபகருங்காலையிவ்வகைநான்கினாலு
நன்றிசேர்கதிகள்பெற்றோர்சரிதைநவில்வாயென்ன
வொன்றியமுனிவர்கேட்பவுளமகிழ்சிறந்துசூதன்
குன்றினைவலஞ்செய்தார்சீர்முதற்கொண்டுகூறலுற்றான். ௪௩

பொதியமேலிமையநீங்கிக்குறுமுனிபோதுங்காலை
யெதிர்தொழானறவமால்பூண்டவிந்திரத்துய்ம்மனென்னு
மதிகுலநிருபன்றன்னைமுனிந்துநின்மதத்தினாலே
யதிர்குரன்மதமாவேழமாகெனச்சாபஞ்செய்தான். ௪௪

நின்வரவுணராவென்னைநெறிகொலோசபிப்பதென்ன
மன்னவன்வணங்கிக்கூறமலையமாமுனிவன்முக்கண்
முன்னவனடியார்க்காணின்முந்துறவெழுந்துதாழ்ந்து
பொன்னடிவணங்கார்யார்க்கும்புகல்வதிச்சாபமென்றான். ௪௫

முனிவரசரணஞ்சாபமோசனம்புரிவாயெனனத்
தனிதொழுமரசைக்கும்பசம்பவனோக்கியெங்கோ
னனிவளர்திரிகூடத்தைநண்ணிநீவலஞ்செய்காலம்
புனிதமுற்றிடுவைதென்கீழ்புறத்தொருதடத்திலென்றான். ௪௬

பாயிரமறைதேர்கும்பப்பண்ணவனருளாற்பின்ன
ராயிரங்கரிக்குவேந்தாயடற்கயேந்திரப்பேர்பெற்றுப்

தன்னதென்றலின்மகிமையாலருந்தவருறைபு
நன்னகர்ப்புடார்ச்சனபுரமெல்லோாற்றிசையுங்
மன்னியின்னுயிர்விடுத்ததோர்பாதகமறையோன்
✠ சின்னநீக்கிமேற்கதிபெறுமகிமையைக்கிளப்பாம். ௪

வேறு.

விண்டலைத்தெங்கின்பாளைமிடறுடைத்தெழுந்தவாளை
கொண்டலைக்கிழியப்பாயக்குழவியைத்தருவுந்தாய்போற்
கண்டலைக்கமுகைமாவைக்கதலியைக்கடந்துதேமாந்
தண்டலைச்சென்னிநாடுதரங்கநீர்ப்பொன்னிநாடு. ௫

பாரிடைநீதிநீராப்பல்குடிபயிர்களாக
சேரியர்செங்கோல்வேலிகோலியநெடுஞ்சோனாட்டுப்
பேரியலந்தணாளர்பெருங்குலத்தலைமைபூண்டோ
னாரியமறைநூலாதியருங்கலைபயின்றநாவான். ௬

அருமகம்புரியுங்காட்சியத்திரிகோத்திரத்தான்
பெருமகத்தவஞ்சேர்கல்வியத்திரியெனும்பேராளன்
வருமகத்துணையாங்கற்பின்மடக்கொடிவயிறுவாய்ப்ப
வொருமகனுத்திரோயனுதித்தனனுருவின்மிக்கான். ௭

சீர்பயில்குடிக்கோர்செல்வத்திருமகனுதலாலே
பார்பயின்றறியான்மூன்றுபருவமுமருமைத்தாயர்
தார்பயின்முடிமேற்கைமேற்றந்தையார்மடிமேற்கோல
மார்பின்மேல்வளர்ந்தான்முருப்புல்லூரிவளர்வதேபோல். ௮

காலமேற்பயிலுந்தோறுந்தன்குலத்தருமமஞ்சி
யோலமிட்டரற்றல்போலவொலிமணித்தண்டையார்ப்ப
ஞாலமேற்கிடந்தபாவநடைகற்பநடைகற்றுன்வேள்
கோலுலமம்படைநாண்பூணக்குலவுமைம்படைநாண்பூண்டான். ௯

ஒருபிறப்பினியில்லாதவுயர்பிறப்பினில்வந்தானை
யிருபிறப்பாளரெல்லாமிலங்குமுப்புரிசேர்முந்நூல்
பெருகுநான்மறையினூலேபிராயமோரைந்திற்சாத்திப்
பருவமாறன்றவேழிற்பல்கலைபயிலச்செய்தார்! ௰

ஒருபதோடிரண்டாம்யாண்டுமோதினனேதுங்கவலை
சுருதிநூல்பயிலுந்தோறுஞ்சொற்பயில்கிள்ளைபோல்வான்
றருபுனல்படியுந்தோறுந்தாவுநீர்க்கரண்டம்போல்வா
னருநெறி ○ நியாசந்தோறுமவிசயப்பாவைபோல்வான். ௰௧

---

✠ சின்னம்—உபத்திரவம்.

○ நியாசம்—கிரியைசெய்தல்

அருங்கலைபயிலுங்காலையறம்பொருளின்பம்வீடா
மிருங்கலைநான்கின்முன்னையிரண்டுபின்னொன்றுமோரா
னொருங்குசேரின்பத்தேனுமொழி ✠ பெருந்திணையேயன்றி
யிரும்புமைந்திணையுந்தோரான்விதிவழிமதிபோமன்றே. ௬௨

புருவமுமுகமுங்கண்ணும்புயங்களுமுந்நூன்மார்பு
முருவமுங்கண்டமாதருள்ளமுங்கலையுஞ்சோரப்
பருவமும்பதினாறாகிப்படைமதன்வடிவமானா
னுருவமொன்றெய்தானாகிலவனிவனென்னலாமால். ௬௩

தன்னுடைக்கொழுநன்மேனிதானெதிர்நோக்குந்தோறு
மின்னிடையிரதியார்க்குவேறுபாடறியவேண்டிற்
சன்னலஞ்சிலையில்லாமற்காமனைப்பொருவானின்னோ
னன்னவெஞ்சிலையினாலேயனங்கனும்பொருவான்மன்னோ. ௬௪

அளப்பரும்வடிவின்மிக்கானாதலாலணங்கனாரும்
விளக்கில்வீழ்பதங்கம்போலவிருப்புடனவனைச்சூழ்வார்
துளக்கறும்விகாரத்தாலேயவனுமத்தோகைமார்பா
லுளத்தினிற்காதல்கூரவொட்டில்வீழ்பதங்கம்போல்வான். ௬௫

கிளர்பொருள்கல்விசெல்வங்கிளைகளும்படைத்துநீங்கா
விளமையும்பெற்றான்வாழ்வோர்க்கிவைகளிலொன்றேபோதும்
விளைபொருளைந்துங்காமவிடரிடைவீழ்ப்பதானான்
வளர்குடிப்பிறந்தாரேனும்வாழ்வுண்டோமதியற்றார்க்கே. ௬௬

பேய்மொழிகேட்கும்யாமம்பிறன்கடைதிரிவானீன்ற
தாய்மொழிகேளான்மற்றுந்தந்தைதன்மொழியுங்கேளா
னேயுமேற்குலத்தேவந்துமிழிகுலவிடர்பாற்கூடி
யாயசூகரத்தைச்சேர்ந்தவானிளங்கன்றுபோன்றான். ௬௭

வேறு.

மாவேட்டிலெழுதாதுமறைசொல்வார்தனைநீங்கி
மாவேட்டிலெழுதாதுமலர்கொய்வான்மாதருக்காத்
தீவேட்டமுறைபுரியுஞ்சிலதருப்பையேந்துதல்போய்த்
தீவேட்டமுறைபுரியுஞ்சிலையேந்தித்திரிகின்றான். ௬௮

பெருக்காயத்திரிகுலத்துப்பிறந்துமேபிறமாதர்
செருக்காயத்திரிகுலத்தார்பிறரோடுஞ்சென்றுழல்வா
னிருக்காயத்திரிவாணையிகழுவானினமயில்போ
லுருக்காயத்திரிமயக்காலுயர்காயத்திரிமறந்தான். ௬௯

---

✠ பெருந்திணை-ஒவ்வாக்காமம்-அது-மடன்மாவேறுதன்முதலியநான்கானுமுக்கப்பட்டு-யௌவனநீங்கியவழியுங்காமப்பற்றறாதுவருந்தல்.

அஞ்சமகமத்சமகமாயிருறையர்குலத்து
விஞ்சிரறுதொழிலுமறுதொழிலாக்கைவிட்டான்
பஞ்சமிணையிற்கலவிகலம்பாராட்டிச்செவிக்கோதும்
வஞ்சியர்கள்சதுர்மறையேவழங்குசதுர்மறையானன். உ௰

சந்தியானதுமறந்ததரித்தாலும்போதுச்சேரிச்
சந்தியானதுமறந்ததரித்திடான்சந்திதொறு
முந்தியேதொடுமிடங்கண்முறைமறந்துபோதுமாதர்
முந்தியேதொடுமிடங்கண்முறைமறவாதொழுகினன். உக

பிரமமாகன்மணமும்பிரசாபத்தியமணமும்
விரவுபிரமச்சரியம்விட்டமையால்விட்டொழிந்தான்
சரதமாமிழந்ததனாற்றெய்வமணச்சடங்கொழிந்தா
னருமறையினெறிதவறியாரிடமும்விடுத்தனனால். உஉ

பாசுரத்திலெழுதரியபாவையரைவழிச்செலவின்
மாசுரத்தில்விழித்துயிலிற்பைசாசமணம்புரிந்தான்
பூசுரர்க்குமுறையல்லாப்போரேறுபொய்த்தழுவி
யாசுரத்திற்கோவசியரணங்காசுரமணஞ்செய்தான். உ௩

மாபுதவிலேழைமையோன்மடமகளைவலிதாக
விரவுதனிற்கொண்டேகியிராக்கதமாமணம்புணர்ந்தா
னரவனையவல்குலார்மூவகையாரல்லாமற்
கரவுதனிற்சிலமாதர்கந்தருவம்போற்புணர்வான். உ௪

கோமளஞ்சேரிவ்வகையாற்குலவுமனைமடவாரை
மாமனையிற் ௦சாரிகைபோன்மாறுதசிறைப்படுத்திக்
காமவெரிமூட்டுகின்றகலகவிழிக்கணிகையரைப்
பூமலர்மேலன்னமெனப்பொன்றூவிக்கிறைவித்தான். உ௫

வேறு.

பூவியலன்னம்போல்வார்புலவியேநிலமதாசத்
தூவியபொருள்கள்யாவுநாறுமுளைவித்ததாகக்
காவியங்கண்ணார்மோகக்கலப்பையேகருவியாக
மேவியசரதபோகவிரகவேளாண்மைசெய்தான். உ௬

அந்தியும்பகலுமாயவரும்பொழுதிரண்டுமூன்று
சந்தியுமற்றுநான்காமொழுக்கமுந்தவறிவேத
மாதிரவிளக்கமெல்லாம்வரவரமாதர்மோக
முந்தியருறைக்காற்றுலவிற்றனவொவ்வொன்றாக. உ௭

அடிமுறைகடந்தசெல்லவறிவுகண்ணிலருய்மோகச்
செடிவழிசுழன்றுகாமத்திரன்புலிதுடரவோடிக்

௦ சாரிகை-பூவைப்பட்சி

கொடியிடைக்கணிகைமாதர்கொங்கைவெற்பிடறிவீழ்ந்து
கடிதடவாவிதாவிக்கலவியங்கயத்துளாழ்ந்தான். ௨௮

கொம்பெலாமன்னோன்காமக்கொடுந்தளிர்தளிர்த்துச்சாதி
பம்பியவரம்புதோறும்பழிமொழிக்காடுபல்கி
யம்பலஞ்சந்திதோறுமம்பலாயரும்பியெங்கும்
வம்பலர்பெருகப்பூத்துவடுக்களாய்ப்பரந்தவன்றே. ௨௯

ஆனவைசெவியிற்கேளாவவன்குலத்தறிஞனவான்
ஞானநூலவனுக்கோதினன்னெறியுணர்த்தச்சென்றான்
றான்முனாம்பயிற்றுங்கல்விதன்னையுமயர்த்ததோரான்
மேனெறிசெறிவிலானைவேறிடத்திருத்திச்சொல்வான். ௩௰

வேறு.

எறும்புகடையானைதலையெண்பத்துநான்கிலக்கயோனிபேதம்
பிறந்துழலுமுயிர்க்கெல்லாமனிதராய்ப்பிறப்பரிதுபிறந்தாரேனும்
பறம்பர்சோனகர்சூனரீனர்கானவர்நுளையர்பழையராதி
யறைந்தகீழ்க்குலநீங்கிமேற்குலத்திலவதரிப்பதரிதுமைந்தா ௩௧

தாழ்குலத்தோர்கோடிசென்மந்தவம்புரியவேண்டுமுயர்சதுரத்தராகக்
கேழுழவர்கோடிதவஞ்செயவேண்டும்வணிகர்சென்மங்கிடைக்கவேண்டிற்
சூழ்வணிகர்கோடிசென்மந்தவம்புரியினரசனெனத்தோன்றுவிற்பர்
வாழரசர்கோடிசென்மந்தவஞ்செயினுங்கிடையாதுமறையோர்சென்மம். ௩௨

அந்தணராய்ப்பிறந்திடினுங்குருடுசெவிடூமைமுடமகன்றுமேனி
சந்தவடிவுடன்பிறப்பதரிதுபிறக்கினும்பாலைத்தாளமாதி
கந்தலவனம்புனமொருவிநீர்நாட்டில்வரலரிதுகண்டாய்பார்மேன்
முந்துறவித்தனைக்குயர்சீர்பெற்றனையெத்தனைதவமோமுயன்றாய்முன்னர். ௩௩

ஓதுபிரமச்சரியமொழிந்தவானப்பிரத்தமுயர்சன்னியாச
நீதிநிலைபெறு ० காருகத்தியமாமாச்சிரமநெறிகணான்கிற்
கோதிலாமூவர்நெறிப்படர்பயிர்க்குக்கொளுகொம்பாங்கொள்கையாலே
மேதினியில்யாவருக்கும்வியன்காருகத்தியமேவிசேடமாமால். ௩௪

மூனமாகவைகறைப்போதெழுந்துசவுசாதிமுதன்முடித்துவாசப்
புனலாடிச்செபதவங்கண்முயன்றுகடவுட்பூசைமுயன்றுமுப்பா
லனலோம்பியைவகைவேள்வியுமியற்றிக்கிளைஞருடனடுத்தோர்தம்மைத்
தினமோம்பிநுகர்ந்துகலைபயின்றிருத்தலில்லறத்தோர்செய்கையாமால். ௩௫

பூமரமாயூர்வனவாய்மிருகமாய்ப்புட்குலமாய்மனிதராகிப்
பாமரமாய்ப்பண்டிதராயொழுகத்தாலுயர்ந்தேணிப்படிப்போலேறித்
தேமறையோனுயினைமேற்சுவர்க்கபதத்தினதுபதஞ்செலுத்தற்பாலாய்
காமமெனுமந்தரத்தேதாவியினிக்கீழ்வீழல்கடனோவையா. ௩௬

---

० காருகத்தியம்-இல்லறவியல்பு.

நிதியானவிறைநீருக்குடைகுளமிக்கானகுலநெறிக்கோர்தினை
மதியானமதிவிழுங்குங்கோளாவுபவத்தாறுயளர்க்குங்கானங்
கொதியானநரகிழுக்குங்கொடும்பாசமுயிருருக்கிக்குடிக்குங்கூளி
கதியானவழியடைக்குங்கற்பெருங்கபாடமன்றோகடியகாமம். ௩௭

சருடஞ்சேர்பரிமகனுதியற்றிவானரசன்னற்சவைபோற்பெற்றன்
சகடம்போலவன்மனதிற்சிகாமம்பிடித்தலைப்பத்தலைகிழாக
மருடம்போய்வானகம்போய்வையகம்போயரசுபோய்மலைப்பாம்பாக
கருடன்போய்வீழ்ந்தகதையறியாயோசிறியாயோகளினத்தாரோய். ௩௮

வேறு.

மனைவளர்குலஞ்சேர்சற்பின்மங்கையர்வருந்தநீபோய்ப்
பணைவிழைப்பரத்தைமார்க்குப்புதுநலம்பெருகநல்கல்
சினைதருபருவப்பைங்கூழ்சென்னலின்பொதிகள்வாடக்
கனைகுரலெழிலிவீண்போய்க்கானலிற்பொழிவதென்றான். ௩௯

கொழுந்துவிட்டறிவுதோன்றக்கொளுத்தியகுரவன்வாய்மை
கழுந்தனையாருக்கேதோகடத்தினைக்கவிழ்த்துவிழ்த்த
வுழுந்தெனத்தகையவாகவுருத்துமேலுரைப்பதானு
னெழுஞ்சுடர்விளக்கிட்டாலுமிருளன்றோகுருடர்க்கம்மா. ௪௰

மணிநகையாரோதெய்வம்வாக்குபதேசங்கொங்கைத்
அணைகுருபீடம்பாதத்துணைவருவதேபூசை
பணைவதுமுத்தியாசாவின்னமுமறியாய்போலுங்
கணிகையர்முகத்திற்கூறுங்காமனாகமங்களென்றான். ௪௧

மருண்மொழிபொருளாக்கூறும்வஞ்சகமறையோன்றன்னை
யருண்மொழிக்குரவன்சீறியகன்றனனுதலாலே
திருவொழிகிளையும்வாழ்வுஞ்சிதைந்தனன்சிறிதுநாளிற்
குருமொழியிகழ்ந்தமூடர்குவலயத்தெவ்வாறுய்வார். ௪௨

தனமெலாங்கணிகைமாதர்தனவிலைக்காற்றுவாகி
மனையுளபொருள்போயப்பார்ப்பான்மற்றுளபொருளுந்தோற்றுக்
கனைநைபோய்மெலிவாயூரிற்கடப்படுங்கடப்படாதே
வினையதோர்வறுமைபூண்டானினியதோகொடியகாமம். ௪௩

கானகவேட்டமாடிக்கடுங்கொலைகளவுசெய்து
தானமுமழிகமானந்தவறினுந்தவறுன்காமச்
ஞானமங்கையர்பாலுறுந்தவசமங்கையர்பாற்கள்ளு
மீனமங்கையர்பாலுறும்போகமுமிசைவதானுன். ௪௪

கரியர்மயக்கில்வீழ்ந்தாற்குலக்கடைவிட்டனர்
சேரியிற்புகுதாணசெய்கைதெரிந்தனரந்தணாள
ரூரினிற்புகுதாவண்ணமொழிந்தனர்பழித்துநீக்கி
வாரிவின்மூழ்கிச்சார்திபுரிந்துவாலாமதீர்ந்தார். ௪௫

கீழ்குலத்தாழ்ந்தான்வேறுகிளைவேறுதாரம்வேருய்
வாழ்வுபோய்க்குலினந்தின 0 மைமைமூவகையின்மாய்ந்தார்
சூழ்தருநாம்புதண்டஞ்சுரைமூன்றுமிசையில்யாழாம்
வீழ்படில்வேடர்கண்ணிவிறகுவெம்பலியோடன்றே. ௪௬

அங்கணத்துக்கபால்போலருங்குலப்பெருமைவிட்டுத்
தங்கணக்கிளைகைவிட்டுத்தாரமோரேகைவிட்டுக்
கங்கணக்கையார்மோகங்கைவிடானறிஞோர்விட்ட
கொங்கணஞ்சிலநாள்வைகிக்காழகங்குறுகப்புக்கான். ௪௭

வேறு.

நீர்நாடுநீங்கியுமேநீங்காதுபின்றுடரும்
போர்நாடுகாமவெள்ளநீந்தவொருபுணையின்றிச்
சீர்நாடுமாதர்தனக்குடந்தேடித்திரிவாற்கு
வார்நாடுந்தடைதீர்ந்தமலைநாடுவாய்த்ததுவே. ௪௮

மலைநாட்டில்வருந்தூர்த்தமறையோனைமடக்கொடிமார்
முலையானைமதமூட்டிமுரிபுருவச்சிலைகுனித்துக்
கலையாளிதேர்நிறைத்துக்கட்டெழிலினுற்பகைத்த
சிலைமாரன்பொரவிடுத்தசேனையெனப்புடைவளைந்தார். ௪௯

சாவிநெடுங்கணவலையான்மடப்பவருங்காரிகைமா
ராவிமருண்டருமறையோனழகுவலைப்புகுந்தவளை
தூவியனம்போற்றுடர்ந்தார்தூர்த்தமாமறையோனும்
பூவையர்தம்பிடிச்சூழல்புகுந்தமதக்களிறுனன். ௫0

ஆம்பகிதன்குலம்வாழ்வும்பறிகொடுத்துமவர்மோகம்
போம்பரிசிலுவர்துவிடான்பொய்களவாற்பொருள்கவர்ந்து
காம்புறழூந்தொளியராங்கணிகையர்பாற்கருத்தழிவான்
வேம்பரிசிலுடல்கரிந்தும்விளக்குவிடாப்பதங்கம்போல். ௫௧

சிலமாதர்செவ்கையொடுஞ்சிலமாதர்கொங்கையொடும்
பலமாதர்புலவியொடும்பலமாதர்கலவியொடும்
நலமேறியுவட்டெடுப்பநாணுபோகஞ்பொசித்துத்
தொலையாதகனிபழுத்துச்சொரிசோலைக்குருகானுன். ௫௨

வேறு.

மானமின்றியவல்லியர்மாமுலை
யானைவாய்க்கரும்பாகியுங்கண்வலை
மீனமாகியுமல்குல்வியாழத்தின்
பீனவாய்ப்பெருந்தேரையுமாகினுன். ௫௩

---

0 மைமை—சநததுப்பறிலலாமை

தையலாரிடைத்தாகம்விளைந்ததும்
பொய்யெலாநிறைபோகம்விளைந்தது
மையன்மோகம்விளைந்ததுமற்றவன்
மெய்யெலாம்வினையாகவிளைந்ததே. ருச

ஈனிலார்நயனப்பெருந்தும்பியே
ஞானமாமுடலெங்குந்துளைத்ததோ
கானலாமதன்பூங்கணைக்காயமோ
பூணலாப்பிணிபூண்டுபுண்ணாயினான். ருரு

மின்னுலாவுயர்விண்ணவராயினும்
பெண்கள்காமம்பிடித்தவருய்வரோ
புண்களாகிப்புரந்தரன்மெய்யெலாங்
கண்களானதுகாமத்தினலன்றே. ருசு

மருவிருக்குமலர்க்குழல்சோரவே
புருகிகித்தமுடன்புணர்மாதரார்
பெருவருத்தமுற்றான்பிணிகாண்டலு
மருவிருக்கவெருவருப்பாயினர். ருஎ

வேறு.

முன்பெலாங்கனிகூரமோகமநுபவித்து
வன்பிணியாலுழல்காலமறுகினிடைத்தள்ளினு
றென்பெலாங்கசிந்துருகுமிற்பிறர்தாரல்லாம
லன்பிலாப்பொதுமாதராபத்துக்காவரோ. ருஅ

தலைநாடுபுறந்தள்ளச்சேரன்மலைநாடேகி
மலைநாடுபுறந்தள்ளப்பாண்டிவளநாடணைந்தான்
கலைநாடுந்தலைநெறிபோய்க்கைப்பொருள்போய்நோய்பூண்டும்
புலைநாடுமமெனுத்தேக்கிலையிற்புனல்போல்வான். ருகூ

உடையாப்பசிபிடிக்கவுறுப்பெல்லாநோய்பிடிக்க
வாடைதுணிபோர்த்தவுடலிப்பிடிக்கவருந்துவான்
பேடைமயிலார்விரகப்பிணிக்குடைந்துபுறக்கடைபோய்
வாடையேறயர்வானேல்யானைவிடுவான்மதனன். சுo

சாதகெதிமணவேட்கைத்தன்மனையார்மனங்கொதிப்ப
விரகொடும்போய்ப்பிறர்மனையில்மிதித்தகால்விரலழுகி
மரபழியமுந்திதொட்டமணிக்கரங்களுடழுகிப்
பரமனையார்தமைத்தழுவும்படிவமெலாம்புண்ணானன். சுக

தலைமாற்குலமறுசார்பிலாண்டொழுக்கால்
விலைமாதர்மறுகணையான்மேனியுருவழிந்தமையால்
வலையர்சேரியினுறுமள்ளர்சேரியின்மதவும்
புலையர்சேரியெருத்தப்புறக்கடையிலுறங்குவான். சுஉ

அம்மையிலேபலிக்குமென்பர்செய்தவினையாங்கொருசார்
செம்மையிலாமறையோன்செய்தீவினையெல்லாமிவனுக்
கிம்மையிலேபலித்ததனாலிவையறிந்துவிலகாதார்
வெம்மையுறுகொடும்பிணிக்குநரகினுக்கும்விருந்தாவார். ௬௩

வருநாளின்முகம்பார்த்தோர்மறுநாட்கண்பாராரா
யொருநாளிலுறைபதிமற்றொருநாளிலுறையாமற்
பெருநாடுபலகழித்துப்பிறநாடுசேர்வதற்குத்
தருநாடுமிருள்வனத்துவினைதள்ளத்தனிபோனான். ௬௪

ஆகத்திலெழும்பசிக்கருந்துவதொன்றில்லாமற்
றாகத்தாலுவுலர்ந்துதண்ணீருங்கிடையாமற்
சோகத்தாலயர்ந்துகொடும்பாலையிடைச்சுழல்கின்றான்.
பாகத்தாற்பகுத்துண்ணார்படும்பாடுமிதுவன்றே. ௬௫

கூண்டுவருநெறிதவறிக்கொடுஞ்சுரம்புக்கயர்காலைப்
பூண்டகுலநெறிதவறிப்புலைபுகுந்தமறையோனைத்
தீண்டலுறும்வாலாமைதீரவோசெழுங்கதிரோன்
காண்டலுறுமாபாவங்கழியவோகடற்குளித்தான்! ௬௬

உழிக்கொண்டபுள்ளொளிப்பவுயர்வனமுங்கண்முகிழ்ப்ப
விழிக்கொண்டசுரமடைந்தாயினியெங்கேபோவதெனப்
பழிக்கொண்டமறையோன்செய்பாவமெல்லாங்கூடியொரு
வழிக்கொண்டுவளர்ந்ததுபோல்வந்துவளர்ந்ததுகங்குல். ௬௭

வேறு.

அன்றுமோருணவில்லாமலதற்குமுன்னிரண்டுநாளா
வொன்றுமேபலியுமின்றிவெம்பசியுடற்றவோய்ந்து
சன்றினன்சைவமல்லாக்கடும்பரசமையம்போலச்
சென்றுசேர்நெறியொன்றில்லாக்கானிடைத்திகைத்துநின்றான். ௬௮

வேறு.

வாட்டானைவிழியார்க்குவருந்துவான்வனத்திலுயர்
வாட்டானைபுவியார்க்கவருந்தினான்மாதர்முலைக்
கோட்டானைத்துணைமேவிக்குளறுகுரல்கேட்டுவப்பான்
கோட்டானைத்துணைமேவிக்குமுறுகுரல்கேட்டயர்ந்தான். ௬௯

ஈனக்கள்ளிகள்பாலுமிடுஞ்சோறுமிதழ்க்கனிவாய்ப்
பானக்கள்ளுடனேந்தப்பரிவாயுண்டுறங்குவான்
கானக்கள்ளிகள்பாலும்பொதிசோறுங்கடிமலர்வா
யூனக்கள்ளுடனேந்தவுண்ணான்மற்றுறங்கானால். ௭௰

வீங்கிவளர்ந்ததுதிமிரம்விருத்திராசுரனெய்ப்ப
வோங்குமுடுக்கண்ணுகவிந்திரனொத்ததுவான

மாக்கசுரன்போயொளிப்பவந்தரநாதன்கரத்தில்
வாங்குமொருவச்சிரம்போல்வானிலெழுந்ததுபரிதி. எக

வேறு.

வடிந்திடத்திமிரவெள்ளம்வளர்ந்திடப்பரிதிகானிற்
படிந்திடுமொத்திரோயன்படருறுவினையோநோயோ
முடிந்தானதுவோவென்றமுடிவிலாப்பிறப்போவெல்லாம்
விடிந்ததுவிடிந்ததென்னவிடிந்ததகக்குற்கானம். எஉ

விடிந்ததென்றெழுந்துபோவன்மெய்களைத்தயர்ந்துசோர்வ
ணடர்ந்தகல்லிடறிவீழ்வனடியிடச்சவியிலாதே
முடங்குவன்மரங்கடோறுமுட்டுவனெட்டியேகி
நடந்தனன்திருக்குற்ருலநகர்க்குயோசனைக்குஞாங்கர். எங

வேறு.

கடிக்கொண்டபூங்கோதைக்கணிகையர்க்கேகாதலனுய்க்
குடிப்பண்பின்மடவாளைக்கொடுஞ்சிறைசெய்பாதகத்தான்
பிடிக்கொண்டுவெறுந்தனியாய்வெயிற்கானற்பால்வீழ்ந்து
பொடிக்கொண்டதழல்விழும்புழுப்போலத்துடிக்கின்ருன், எச

உண்ணுதுபசிதரப்பவுடலெல்லாம்பிணியுலைப்பப்
புண்ணுகமெய்யயர்காற்போற்றவொருதுணையின்றி
யெண்ணுதபலவெண்ணியிளைத்திருமிவாய்குளறிக்
கண்ணுருமொளியிருண்டுகாதிலோசையுமடங்கி. எரு

தருணகிலதுமோறிச்சாக்கிரஞ்சொப்பனஞ்சுழுத்திக்
கருவிகரணங்களெலாங்கைகடந்துமெய்யயர்ந்து
துரியவவத்தையில்வீழ்ந்துதுரியாதிதங்கடந்தே
புரியதொருகுக்குமத்தாயுயிரொடுங்குமந்நேரம். எசு

அறநெறிமுற்றவப்பயனேவத்திரிகோத்திரமறையோ
னுறுகதிமெய்த்தவப்பயனேவுயிர்விடும்வேதியனுடலிற்
குறுமுனிக்கன்புடையபிரான்றிரிகூடக்குலவரைவாய்ச்
செறிமலர்ச்செண்பகச்சோலைத்தென்றற்கால்பாய்ந்ததுவே. எஎ

மால்பாய்ந்தமறையவன்மேற்றிரிகூடவரைவசந்தக்
கால்பாய்ந்ததென்கேனோநவுணியன்வாய்க்கவுரிமுலைப்
பால்பாய்ந்ததென்கேனோபவக்கடலிற்குகப்பெருமான்
வேல்பாய்ந்ததென்கேனோயாதெனயான்விளம்புகேன். எஅ

இந்தவகையிறந்தானையியமபடரெதிர்முடுகி
வந்துநெடுவலைவீசிவளைந்துபெரும்பாசத்தாற்
பந்தமுறக்கட்டியொருபட்டமார்த்தனிர்த்ததெனச்
சிந்தைநிரமெழப்புடைத்துத்தென்புலத்துக்கோடுசெல்வார். எகூ

செல்லுகின்றவேலைதனிற்சிவபிரான்கணநாதர்
நில்லுமெனத்தூதர்தமைநிராகரித்துமறையோனை
வல்லுதிரக்கறைதுடைத்தவன்பாசமறுத்துநயஞ்
சொல்லுவனபலசொல்லிச்சூட்டுவனபலசூட்டி. ௮௰

அரமகளிர்கவரியிடவக்கரபல்லியங்கறங்க
வரியிசைக்கின்னரர்பாடவானவர்பூமழைபொழியத்
புரிசடைப்பண்ணவர்புகழப்புட்பகத்தின்மீதேற்றிக்
கரியுரிவைதரித்தபிரான்கயிலைதனிற்கொடுபோனர். ௮௧

வேறு.

செம்மானமிசையிழிந்துசென்றுமறையோன்கயிலைச்சிகரமேவிப்
பெம்மானையடியின்மிசைமுடிபணிந்தானந்தவெள்ளப்பெருக்கிலாடிக்
கைம்மானுஞ்சுடர்மழுவுங்கறைமிடறும்புரிசடையுங்கண்கண்மூன்று
மெய்ம்மானுந்திருவடிவுங்கண்டிருகண்களிப்பவுடல்விதிர்ப்பநின்றான். ௮௨

சென்றுதொழுமந்தணனையருணோக்கிற்கயிலைவளர்சிவபிரானார்
சென்றுநீயுயிர்விடுக்கானமதுசெண்பகாடவிசேர்நறும்பூந்தென்ற
லொன்றியுனகாகமிசைத்தைவரலாற்பாவமெல்லாமொழித்தோங்கண்டா
யென்றுமழியாமலினியெமதுகணத்தவர்பதத்திலிருப்பாயென்றார். ௮௩

வேறு.

அன்றுநாதன்றிருவருள்செய்கதான்
மன்றன்மாலயன்வாழ்வுமுவர்ப்புறச்
சென்றுசெல்வச்சிவகணத்தாருட
னென்றுநீங்கலாப்பேரின்பமெய்தினன். ௮௪

o யாமியந்தனிலெய்தியதூதுவர்
சாமியந்தகன்றாளிணைபோற்றியே
காமியந்தனன்கண்ணுதல்பாலுற்றான்
பூமியந்தரம்போற்றிடப்போயென்றார். ௮௫

வெய்தவாறுடைவினையனைத்தென்புல
மெய்தவாறுகொண்டேகலுமேதடை
செய்தவாறுஞ்சிவபெருமான்றொண்டர்
வைதவாறும்வளர்செவிசாற்றினர். ௮௬

செறிவுசேர்மனத்தென்புலக்கோமகன்
குறிகொள்சித்திரகுத்தனைக்கூவியே
வெறிகொள்விப்பிரன்மேற்கணக்காலுள
பொறிகள்யாவும்புகலுமினென்றனன். ௮௭

---

o யாமியம் - தென்றிசை.

சாத்திரம்பலதான்கற் றுமத்திரி
கோத்திரத்திலுதித் தங்கு லமெந்தி
க்ஷேத்திரத்தொழில்வைசிய ர்க்குஞ்
சூத்திரர்க்குங்கடைஞரிற்றோன்றினன். ௮

கற்புமங்கையர்கட்டழிந்தான்பொரு
ளற்புமாதரடைக்கலம்வெஃகினன்
பொற்புமாதர்புறங்கடைநின்றனா
ரற்புமாந்தர்க்குநண்ணியதின்மையான். ௯

சாலசத்திரந்தன்மமலைத்தளா
ஞாலபத்தினளவுகையாட்சியான்.
மாலைகாலையுஞ்சந்திமறந்துளான்
வேலைதோறுமதுநுகர்வேட்கையான் ௧௰

குருவுந்தெய்வமுநிந்தைசெய்கோளினன்
கருதரோன்புலைக்கன்னியர்காமுகன்
தருமயோகர்தவங்களழித்துளான்
பொருவின்மோகப்புலைச்சியர்போகத்தான். ௧௧

அந்தணர்க்கோருங்கொலைமூலகைச்
செந்தமிழ்ச்சுருத்தெறும்புனல்நிந்தைசெய்
மந்திரத்தின்மறவிபிறரொளா
நிந்தைசெய்புநீர்க்கருக்கியான். ௧௨

பிறந்தநாட்பிதிர்நாள்வருடாதியிற்
சிறந்தநாட்சிவராத்திரியாதியா
வறைந்தநாள்விரதாதிமுச்சந்தியு
மறஞ்செய்வான்விழியாமைமறந்திரான். ௧௩

அலைவிலாதகுடிகளலைத்துளான்
மலர்செய்காவின்மரங்கள்குறைத்துளான்
புலைசெய்பான்மையும்பொய்களவாதியுங்
கொலைசெய்பான்மையுங்கூறத்தகாதவால். ௧௪

இரும்புபோலுமிதயத்தன்கள்வெறிச்
சுரும்புபோல்பவன்கோபச்சுடரனு
நெருங்குபாவத்துடன்பிறந்தானற
மிருந்தவூரிலிருந்தறியானென்றார். ௧௫

சரணவீரர்கணக்கிலவைகூறலு
தாரகவீரரினல்வழிசேர்த்திடும்
வரவியாதெனமாமனத்தெண்ணினன்
றிரமதாரபேச்செய்புஞ்செங்கோலினன். ௧௬

அரவமாலையவிர்சடையாரிடைப்
பரமராசியம்யாதுபயந்ததோ
பிரமன்மாலறியாதபிரானுடன்
விரைவில்விண்ணப்பஞ்செய்திடவேண்டுமால். கஎ

செப்புமேலவைச்சிவபெருமான்முறை
தப்புமேல்வைத்தகல்வதுதாக்கென
வெப்புமேல்வைத்தவெம்பகடேறினன்
கப்புமேல்வைத்தசூலமுங்கைக்கொண்டான். கஅ

பாசந்தண்டமெழுக்கரபத்திரம்
வீசுங்கைவலையெஃகம்விறன்மழு
மூசுசம்பமுசலங்கணையம்வாட்
பூசல்வீரர்கொடுபுறஞ்சுற்றினர். கக

காலனும்பெருங்காலமிருத்துவும்
ஆலவுக்கிரன்றன்முகனாதியா
நீலமேனிநிரைத்தெழுதூதரு
மோலமென்னவொருபுடைசுற்றினர். உ0

விளங்கும்வைவைச்சுதபுரமேவினார்
துளங்கியோர்புடைசூழ்ந்தனர்சூழ்திறை
யளந்துபோற்றினர்தானவராதியோர்
வளர்ந்துகிங்கரர்மல்லர்களாடினார். உக

பெருவியாதிமுயல்வலிபீனிசங்
குருமகோதரங்குட்டங்களாதியா
மருவுசேற்றும்வாதபித்தங்களும்
பொருவுசேனைகளாய்ப்புடைசூழ்ந்தவே. உஉ

வெட்டுவார்துணிப்பார்மிகுபாவரைக்
கட்டுவாரடிப்பார்நரகாதிபர்
இட்டுவார்பணிகேட்பவராய்நமன்
மட்டுவார்கழல்வந்துவணங்கினர். உ௩

ஆயசேனைக்கடலிடையந்நலார்
தூயசாமரைத்தெண்டிரைதுள்ளுறப்
பாயுமோதையிற்பல்லியமார்த்தெழ
மேயவூர்தியன்வங்கத்துமேயினன். உச

சொந்தவைவைச்சுதபுரநீங்குபு
வந்துசேர்ந்தனன்வைதரணித்துறை
யுந்துதானையைநோக்கினனெண்கயல்
பந்திசேர்தருபல்சினைநோக்கல்போல். உரு

பாங்குசேர்பரிவாரத்தொகையெலா
நீங்குமென்னநிறுத்திவெங்காலனை
யாங்குகூவியமைச்சனோடேகியே
வீங்குசோதிக்கயிலையைமேவினான். ௯௬

நீலமால்வரைநின்றிழிகொண்டல்போற்
கோலமேதியிழிந்துசெங்கோற்கிறை
காலனோடுசெயிலையஞ்சாரல்வாய்ச்
சூலமேந்தித்தொழுதெழீஇப்போயினான். ௯௭

வேறு.

சென்றுவெள்ளியந்திருமலைத்தென்றிசைகாத்திடும்வடமேருக்
குன்றுபோலுயர்கோபுரவாய்தலிற்குறுகிவிண்ணவரெல்லா
நின்றுபோற்றுபொற்படிமிசைத்தென்புலநிருபன்வெம்மனக்கோட்ட
மன்றிநின்றுதன்வரவினையருங்கடைகாவலர்க்கறிவித்தான். ௯௮

கடைகளேழினொருவர்பாலொருவராய்க்கழறிமற்றவர்பூதப்
படைகள்காவலர்க்குணர்த்திடவன்னவர்பணவரவணிகோலச்
சடைகுலாமுடிச்சுடர்மழுநந்திநந்தலைவனுக்கமைந்தோத
வுடையநாயகன்சன்னிதானத்தவனுணர்த்தலுங்கொணர்கென்றான். ௯௯

நந்திநாயகனருண்முறைசிவகணநாதர்கள்புகுந்துய்ப்பப்
பந்தியாம்பலதிருக்கடைகடந்துமேற்படர்ந்துதென்றிசைவேந்தன்
புந்தியார்ப்புறக்கண்டனன்சிவபிரான்பொன்னணிதிருக்கோயின்
முந்தியாரணர்நாரணர்பெறவொணாமுறைமைபெற்றனனென்றான். ௱

வேறு.

கின்னரர்கின்னரமிழற்றத்தந்திரர்தந்திரிமீட்டிக்கீதம்பாடப்
பன்னகர்கிம்புருடர்சித்தர்வித்தியாதரர்தம்பணிசெய்தேத்தப்
பொன்னகரிந்திரன்பரவவானவர்பொன்மாரிபுட்பமாரிதூவப்
பின்னகபாதிளசையவரம்பையர்கண்மணிக்கவரிபிடிப்பமாதோ. ௧௱௧

புவலோகர்வலம்புரியப்பாதாளலோகர்மணிப்பொற்பூணேந்தத்
தவலோகர்சனலோகர்சத்தியலோகரும்பணிந்துதவப்பேறெய்திப்
பவலோகங்கடந்தேறமாலோகத்தவர்பரமபதமேயான
சிவலோகந்தனைவேண்டியடிபரவச்சிவகணங்கள்சேவைசெய்ய. ௧௱௨

அணுமாதிசித்திகள்குற்றேவல்செயவீசானனடைப்பைதாங்க
மணிவாரியோரேழுந்திறையளப்பப்பகல்வேந்தர்மாருத்திபம்
பணிமாறமதிபடிமக்கலமேந்தமழைதெளிப்பப்பவனன்றூர்ப்பத்
தணியாததழற்கடவுள்பரவியாலத்திசுற்றத்தருமம்வாழ்த்த. ௧௱௩

அறுசமையமைம்பூதநான்மறைமுக்காலமிரண்டறங்கள்யாவு
மெழுமலிகள்வேண்டியொருகோடிவரமந்திரங்களெண்ணில்கோடி

மறுவறநின்றிருநோடிபுகழ்ந்தேத்தவரிபிரமர்மகுடகோடி
செறிகமலத்தாள்வருடப்பதிறெருமுக்கோடியராங்தேவர்போற்ற. ௧௰௪

கங்கைசரசோதிசிந்துயமுனேகோதாவிரிநன்மதைகாவேரி
மங்கலமாநதிபலசாமரையிரட்டவிமையவரைவயிறுவாய்த்த
நங்கையொருபாலிருப்பப்பொருப்பெறிந்தவேற்குமரனடுவண்மேவ
வெங்கயனேயமர்சாய்த்தவிசையமதக்களிறொருபால்விளையாட்டெய்த. ௧௰௫

மாணிக்கமரகதங்கோமேதகமுத்துப்பவளம்வயிரநீல
நீணித்தமணிபுருடராகவயிடூரியங்களிழைத்ததூணி
ஞணிப்பொன்மேருவெனவுயர்மணிமண்டபத்தரியாசனத்தின்மீது
வேணிச்செவ்வான்படரமதிதவழுமொருபவளவெற்புமான. ௱௰௬

ஒருமருங்குமிருசருமத்துகிலுடையுமூன்றுகண்ணுமுயர்நோனுன்றூன்
கருணைபொழிதிருமுகமுமைந்துபணுடைவிமுடிமேற்கங்கையாறும்
பருதியெழுவெயிலெறிக்குமவுலியும்வெண்ணிலவெறிக்கும்பணிலத்தோடும்
பொருமுரககுண்டலமுமண்டலமும்விண்டலமும்பொலிந்துளானை. ௱௰௭

கரதலமுமான்மழுவுமபையவரதமுஞ்சுருதிகனிந்தவாயு
மரவணியுமுரககணகங்கணமுங்காண்டொறுமற்புதமேற்கொண்டான்
திருவடியுங்குழைகழலுமிடம்வலங்காண்டொறும்பயமுந்திடமும்பூத்தான்
பிரமன்மால்சிரமாலைதுயல்வருதிண்புயநோக்கிப்பிரமைபூண்டான. ௱௰௮

முதியவானவர்கணமாம்பாவையிடைமுழுமணியாசனமென்றோங்கு
முதையவரைதனிலனந்தகோடிகதிரோருருக்கொண்டுதித்தாலென்ன
வதியுமுயர்பரஞ்சுடரைக்காண்டொறுங்கண்வழுக்கியன்பின்வழிக்கொண்டேகித்
துதிபரவியெழிற்கடலினருட்டுறைவீழெழிலியெனத்தொழுதுவீழ்ந்தான். ௱௰௯

ஆதியாய்சரணமநுபூதியாய்சரணமகிலாண்டமீன்றருள்
பாதியாய்சரணமறைவேதியாய்சரணமருட்பரமானந்தச்
சோதியாய்சரணமெனவீழ்ந்தானையெழுகவெனச்சுருதிநாதன்
மேதியான்முகநோக்கிவந்தகாரணம்யாதுவிளம்பாயென்றான். ௱௨௰

என்றுமுதல்வன்றிருவாய்மலர்ந்தருளப்பெற்றேனென்றிருகைகூப்பிச்
சென்றுதுணையடிவணங்கிவணங்குதொறுமுடல்விதிர்ப்பச்சிலிர்ப்பரோம
நின்றுசெழுந்துகிலொதுக்கிவாய்புதைத்துநடுநடுங்கிநிமலமூர்த்தி
யொன்றுளதென்னேறுவிண்ணப்பமெனவுரைத்தருளாலுணர்த்துகின்றான். ௱௨௧

பாரின்மேன்மறைக்குலமாம்பயிர்க்குமுதுகளையாகப்படர்ந்தானந்த
ஞரின்மேலுதிக்குமுனம்பாதகத்தினுடனுதித்தானெழுக்கந்தீர்ந்தா
னீரின்மேற்குளித்துறியானமாதர்முலைத்தடங்குளிப்பானீசமாதர்
காரின்மேனியுந்தீண்டியவர்மனைபுக்கூனருந்திக்கள்ளுண்பானுல். ௱௨௨

ஞானமறியான்முன்றசந்தியறியானலதுசாமவேத
கானமறியானேமக்கனுமறியான்மறுநூற்கல்விகேள்வி
மானமறியான்செபமுமந்திரசித்தியுமறியான்மவுனயோக
ஞானமறியானிவனோர்காங்களறியாப்பதத்தானென்னுவானே. ௩௨௩

கோடுபொருமுலையார்கள்காமத்தாற்புலைபுரிந்தகொடியோன்றன்னை
வாடுபெருந்துயர்நீக்கிக்கயிலைதனிற்சிவகணத்தார்வரித்தான்றோ
ராடுவதுதிருக்கூத்தாயதுதானேயலங்காரமாகுமானால்
வீடுபெறுசுவர்க்கமென்றுநரகமென்றுமெங்களுடன்விகற்பிப்பானேன். ௩௨௪

னைப்பொழுதுபாவமெலாமினிப்பொழுதுகடந்தானைக்காட்டும்போது
தப்பொழுக்கணாதர்தள்ளிருமொனிற்பாவந்தருமமேது
பொய்ப்பொழுதுகழிப்பானையலைத்தானமெலிவதினிப்போதுமெந்தா
யெப்பொழுதுங்கயிலையினுன்னடியவர்க்கேபணிவிடைசெய்திருப்பேனென்றான்.

தக்கவேதியன்றவமுஞ்செய்குளூர்மறையவன்பாதகமும்பூசை
புக்கமறைப்பாலகன்வாணாளழிவும்புரராட்பொலிவுமாற்று
மிக்கதிருச்செயல்களினும்விதிமுறையைநிலைநிறுத்தும்விளையாட்டாலே
முக்கணுயர்தருமன்முகநோக்கிக்கருணையுடன்மொழிவதானார். ௩௨௬

முந்தக்கால்சிவதலத்துத்திரிகூடமான்மியங்கண்மொழியுநாளிற்
சந்தக்காநெடுவேலிச்சண்பகக்காமகிமைசொன்னோந்தனித்தக்காலே
மந்தக்கான்மகிமைசொல்லவைத்திருந்தோமினியதனைவழங்குவோம்யா
மந்தக்கான்மகிமையைநீயறிந்தக்காலிவன்மகிமையறிவாயென்றாம். ௩௨௭

விளையாடுந்திரிகூடக்கடவுண்மால்வரைத்தோணறிக்கிரித்தேன்கவ்வை
யிளையாடிப்பொங்குகடற்பாலாடிவடவருவியமிழ்தமாடித்
தளையாடிமடலவிழ்க்குஞ்சண்பகாடவிதவழ்ந்துசக்கக்கோயில்
விளையாடியெம்மருகில்விளையாடுநதென்றலங்கால்விளையாட்டேயோ. ௩௨௮

மலையாறுகடலலைந்துமண்டுபுடார்ச்சுனபுரத்துமாய்வோர்திமை
மலையாமனுமிருந்துமறைப்பொருளைவலக்காதில்வழங்கும்போது
மலையாட்டிகவுரிகுழல்வாய்மொழிசெங்கையிலணைத்துமடிமேலேந்த
மலையாமலிளைப்பாற்றிவிசுவதுதிரிகூடவசந்தக்காலே. ௩௨௯

தீர்த்தமகிமையிலதிகாதிரிகூடவடவருவிதிருக்குற்றால
மார்த்ததலங்களிலதிகமுவடிவாஞ்சிவலிங்கமருளானந்த
மூர்த்திகளிலதிகமிவைசாலோகமுதன்மூன்றமுறையேநல்குங்
கூர்த்துணைக்கிலிவைமூன்றமத்தலத்திலுலவுதென்றல்கொடுக்குமாதோ. ௩௩௰

மஞ்சதோய்முகடுமித்திரிகூடமலைச்சாரல்வசந்தவுதை
அஞ்சுபோதையின்மேனிதவரலாவ்வானெழுந்தருறைக்காற்றிற்
பஞ்சபோன்மறையவன்செய்பாதகம்போய்ச்சிவதருமம்பலித்ததாலே
தஞ்சமாமுயர்கயிலைவரைமேவியெமதுபதஞ்சார்ந்தானன்றே. ௩௩௧

ஆதலாலெமதுபுடார்ச்சுனபுரத்திலெழுதினாத்தேனுருபாயுங்
காதலாமைந்திணைநாற்றிசைமூன்றியோசனையுங்கலந்துவாழ்வோர்
சாதலாம்பொழுதிருபாலுயிரிடத்துமொருநாளுந்தருமவேந்தே
போதலாவதுதவிர்த்தூதர்யாவருக்குமிதுபுகல்வாயென்றார். ௱௯௨

இன்னபடிகயிலைமலையெம்பிரானருளியவாறியமன்கேளா
முன்னமிதையறியாதுசெய்தமையைநினைந்திரங்கிமுகுந்தனாலும்
பன்னரியமறையாலுந்தெரிவரியபரமாசியத்தின்பான்மை
மன்னுபெருந்திரிகூடத்தென்றலங்கான்மகிமையெனமகிழ்ச்சிகூர்ந்து. ௱௯௩

பின்னலணிபிறைமவுலிச்சடையினாடிபரவிப்பெம்மானெம்மான்
சொன்னபணிவிடைதலைமேற்கொண்டனன்கொண்டனனெனவேதொழுதுபோற்றித்
தன்னகர்க்குமம்பெருமான்விடைகொடுப்பபகட்டேறித்தருமன்போந்து
தன்னகர்மாதாநிலத்துமகிமையேயனைவருக்குநவில்வதானன். ௱௯௪

தருமமேதங்குபுடார்ச்சுனபுரத்துமூன்றியோசனையின்மேலும்
வருமமேமறந்துமின்றூதர்காளவணுறைவோர்வருவோர்யாருங்
கருமமேதியற்றுகினுந்தருமமேகுறிக்கொண்மெனக்கணக்கர்யார்க்கும்
பருமமேதியையுகைக்குநடுநெறிச்செங்கோற்கடவுள்பகர்ந்தான்மன்னே. ௱௯௫

பாராதுமறையவன்செய்மாதகர்தீர்த்தருள்புரிந்தபரிசிதென்று
வாராதவழிகாட்டுமந்தமாருதமகிமைவழங்கிச்சூதன்
தீராதசிவத்துரோகந்தீர்த்தமகிமைபுனைசெய்வாயென்னு
மாராமைமுனிவரர்க்குத்தக்கன்மகம்புரிதன்முதலறைவதானான். ௱௯௬

௰௨-வது-மந்தமாருதச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௯௱௰௪.

## ௰௩-வது-தக்கன்வேள்விச்சருக்கம்.

அலர்க்கமலாசனம்பொகுட்டிலயன்றலைநாளுலகமெலாமளிக்கவேண்டி
முலைத்தலத்திலறத்திறைவனமார்பினிடைப்பிருகுளத்தினமுதுமரீசி
புலத்தியனத்திரிகிருதுவங்கிராச்சனபதிமேற்புலகன்றோன்ற
வலப்பதத்திற்றக்கன்முதலாயதசப்பிரமரையுமரபினீன்றான். ௧

அன்னவராம்பதின்மர்களிற்பின்னவனுந்தக்கனெமுந்தயன்பாலேகிப்
பின்னமிலாதுயிர்க்குயிராய்நிற்பவனுஞ்சிற்குணனும்பெருந்தேவர்க்கு
முன்னவனுமிறுதியிலாமுதல்வனும்யாரெனக்கேட்பமுளரிமேலோ
னுன்னரியானுணர்த்தரியானிருவர்களுந்தேடநின்றவொருவனென்றான். ௨

படைப்பதுவுங்காப்பதுவுமுன்னர்நீர்புரிந்திருப்பப்பரிவாற்பின்னர்த்
துடைப்பவனேமுதல்வனெனச்சொன்னவாறெனையெனச்சுதன்வினவ
வுடைப்பிரமமாமவனேயுலகொடுக்குநாளைமையுமொடுக்கநிற்பன்
விடைப்பரன்பின்னருளியன்றேயாமகள்படைப்பதுங்காப்புமென்றான்வேதன். ௩

நாரணனையுமைப்புரவகைகையுயிர்த்தொகையையெலாநான்குவேதம்
பூரணமாம்பிரமமெனப்புகல்வரெவனென்றுதக்கன்புகலவேதா
வாரணம்பரமனுரையுமம்மொழியவற்சேமற்றவர்கட்கெல்லாங்
காரணமாமுகமறுநாவேசுதனையுமீசனெனல்கடுக்குமென்றான். ௪

ஆக்கவலுளர்செப்புறுடையன்வடிவுடையனுதலிலுலவறுக்கென்றும்
பாக்குபெறுர்தோற்றமிறெய்தாதோவெறுஞ்செய்க்குப்பதமத்தண்ணல்
யாக்குமுனன்யாக்குமில்லனுருவுமிலனுருவுமிலனெம்மானம்மா
வோக்குலகின்பொருட்டாகச்செயல்புரியக்கருணைதிருவுருவாக்கொள்வன். ௫

உயிர்கள்புரிவினைக்கேடாயுருவுக்கவேண்டிலெனதருவமாவன்
செயிரறவெவினைப்பயன்களூட்டுதற்குமாலாவன்சிதைப்பான்வேண்டி
வயில்பெறமுத்தலைச்சூலதரனுவனயாவுமறைத்தருளும்பான்மை
யபின்மகேசனுமாவன்சதாசிவமாயருள்புரிவன்பரமமூர்த்தி. ௬

வின்னாமையருவாகியருவுருவமாகியுருமேவாகிம்பன்
றன்னாமையுருவகத்தும்யாக்களிருவருமாகித்தானவேறுவ
னென்னாருந்தயிலமும்பூமணமுமணிச்சோதியும்போலெங்குந்தானே
யன்னாகிப்புறமாகியகம்புறமுநீங்காதவொருவனுவன். ௭

மாதவனேபிரமமெனநம்யான்பிரமமெனநமதிமயங்காவண்ண
மீதெவமெம்போல்வார்வெண்டலைமாலைகள்புனைந்தான்விமலமூர்த்தி
மீதெனமுணர்தனாமாலாகிமாலுடன்யானிகலுங்கால
நாதனெதிர்விலக்கியவனுருவாங்களடிமுடிதேடநின்றனே. அ

மூவாதிகேனைத்தரியைபென்னையானறனைக்கினையமொழிவர்யாரும்
பாவாயத்தாரதமையேகெடுப்பதனறியெமக்குமவர்பகைவராவார்
சேவினனன்பரெனநினைப்பவர்க்கேயாங்களருள்செய்யாநிற்பே
மேவராகிலும்யானாயிறைவனெனவிறைஞ்சன்முக்கணிறைக்கேசாரும். ௯

கவ்வைநீர்ப்பலகோடிகசிகளுக்குஞ்சாகரமேகதியாம்போல
வெவ்வகையாகியசமயநெறிக்கெல்லாமிறைவன்முக்கணெம்மான்றே
யவ்வகையாயிரமறைகளுணர்த்தம்யாதுணர்த்தியுநியதியாவையா
நவ்வியணிகரத்தானைப்பரவியருள்பெறுகவென்றுனவினத்தானே. ௰

வேறு.

சதியின்மேற்பெருவிதிமொழிசிறவிநிருதா
முதியாயனைரனெனிற்பணிந்தமான்முதலோர்க்
கதிகருசெனும்வினையமுள்ளமைத்தருந்தவஞ்செய்
பதியதானம்யாதெனவனுமலரில்வாழ்புத்தேள். ௧௧

அாதமானதல்லுணர்வருமேருவினவித்தா
[illegible]கமானதத்தடம்புனல்மூழ்கிம்பாவ
முத்தமானதவருச்சனைமுதற்றவமுயன்று
சோதமானதத்பரனடிசேரெனச்சொற்றுன். ௧௨

வேறு.

பூந்தவிசிலயனுரைத்தபோதுமானதத்த டத்துப்போர்துதக்க
ருந்தவமோராயிரம்யாண்டியற்றுதலுமுயர்விடைமேலாதிதோன்றிக்
கூர்ந்தபெருந்தவமுவந்தேமீக்குனக்குவேண்டும்வரங்கூறுயெனனைப்
பார்ந்தளணிசெஞ்சடையார்பவள வாய்மலர்ந்தருளப்பணிந்துபோற்றி. ௰௩

மேகபதமுதலாயவிசும்புலகு மால்பதமும்விரிஞ்சனூடு
நாகருலகமும்புவியுமெ ண்டிசையுமெனதாணைநடப்பநாளும்
பாகசாதனன்மு தலாவுனைப்பணிவோர்யாவருமென்பணிகள்கேட்ப
மாகனசுற்றமும்வாழ்வு மக்களுஞ்செல்வமுமழியாவரமும்வேண்டும். ௰௪

சுந்தரியுன்னிடத்துறையுந்தோகையுமென்மகளாகத்தோன்றநீபோ
ரந்தணன்போல்வந்தருளிமண ம்புரியவேண்டுமிவையருளாயென்னப்
புந்தியுறவணங்குதலும்புகன்றவரமனைத்துமருள் புரிந்துமேலுஞ்
சிந்தையுறநன்னெறிநீநிற்கிலிவைநிற்குமென்றான்றேவதேவன். ௰௫

வரமனைத்துமழவிடையாரருளியெழுந்தருளியபின்மதங்கூர்தக்கன்
பிரமனைத்தன்னிடத்தில்வரவுன்னுதலுமவனுணர்ந்துபெருஞ்சீர்முத்திப்
பரமனைக்கண்டிவ்வாறேபெற்றனன்யான்பணித்ததொன்றும்பயின்றானல்லன்
றரமனைக்குளமுதூட்டிவளர்த்தாலுங்காளமன்றித்தருமோநாகம். ௰௬

சிற்றறிவற்கினிதுரைக்குநன்மொழிகண்மென்முளைபோற்சிதைவாமென்று
முற்றறிந்தநான்முகன்போய்மைந்தனவையகத்திசைந்தமுகமன்கூற
மற்றவனைக்கம்பியன்போல்வளநகருமுறைபதியும்வகுப்பாயென்றான்
பெற்றவனைப்பெரியவனைத்தெரியுமோசிறியவறகுப்பெருக்கம்வந்தால். ௰௭

தாலமிசையயனவகுத்ததக்கமாபுரியிடத்துத்தக்கன்மேவி
மாலயனுமுறைபுரியவாசவனும்பணி கேட்பவானோர்போற்ற
நீலவிழியரமகளிர்கவரியிடநிரைமணிப்பூண்மகுடஞ்சூடி
மேலரியாசனத்திருந்தானவேந்தர்வேந்தாய்விதிக்குவிதியாய்மாதோ. ௰௮

வேறு

அரசுசெய்காலந்தன்னிலயன்மலர்ப்பதத்துத்தோன்றும்
விரைசெறிகுழலாள்வேதவல்லியைவிரும்பிவேட்டுத்
தரைதனிற்புதல்வரீராயிரவரையிருகாற்றந்தா
னுரைசெய்நாரதனாலன்னோரொழிவிலாமுத்திசேர்ந்தார். ௰௯

பாலரைமுத்திசேர்த்தபான்மையான்முனியைத்தக்க
னேலநீர்ப்புவனந்தோறுமுழன்றிடச்சபித்துப்பின்னர்
நீலவார்கூந்தலம்பானேரிழைச்சனத்தையீன்று
சால்புசேர்சுபுத்திரியாதிபதின்மூவர்தருமற்கீய்ந்தான். ௨௰

அரிவையர்பதின்மர்தம்மிற்பிருதியங்கிராவுக்காக
மரிசிசம்பூதிவேட்பவுற்சையைவசிட்டன்மேவக்

சிருதவேசமையைவேட்பக்கியாதியைப்பிருகுமேவப்
பொருளனற்சுவாளவாண்ணைப்பிரீதியைப்புலகன்வேட்ப, உக

புத்திராசனதிமாதைப்புலத்தியன்மணப்பவாய்மைத்
தத்தையாமனசூயைக்குத்தலைவனத்திரியேயாக
வித்தகக்கியாதிமைதன்விதாதாவேசுவதைக்காக
வத்திரிமகவான்சோமனசுபதிமுதலோர்க்காக. உஉ

தார்முடிச்சுவதையின்றவிருவரிற்றரணிதன்னை
மேருவேமணப்பவாட்கண்மேனையையிமவான்வேட்ப
வார்முலைத்தரணியின்றமேலையைவருணன்வேட்டா
ராமுதனையாரீன்றமக்களுமனேகர்மாதோ. உங

வேறு.

இங்கிவரிற்காசிபனையீன்றனன்மரீசிபுலத்தியன்சேர்மைந்தர்
பொங்கிராக்கதர்கவிகள்கின்னரர்கிம்புருடர்முதற்புலகனீன்றோ
ரங்கிராச்சனபதிகள்கந்திருவர்வசுக்கடமையளித்தாராங்கே
வெங்கவியைத்திருவையவுணரைப்பயந்தான்பிருகுவெனவிளம்புமேலோன். உச

அன்னவரிற்காசிபன்பின்றக்கனருள்பதின்மூவரணங்கார்தம்மை
முன்னர்வேட்டனனவரிலதிதியாதித்தர்தமைமுறையினீன்றாள்
பின்னிரணியனிரணியாக்கனையுந்திதிபயந்தாள்பிரகலாதன்
பொன்னவன்சேயவன்மகன்விரோசனன்மாவலியவன்சேய்புதல்வன்வாணன்.

காலகேயரைப்பயந்தாள்காலையாயுவுமசுரர்கணத்தையீன்றாண்
மேலையோர்நால்வரொடுகெலுழனையுமருணனையும்வினதையீன்றா
ளாலவிழியரம்பைமுதற்பன்னிருவர்தமைப்பயந்தாளரிட்டைமூவாக்
கோலராகுவைப்பயந்தாள்சிங்கிகைகத்துருநாகக்குலத்தையீன்றாள். உரு

சம்பரனேமுதலாயபன்னிருவர்தானவரைத்தனுவுமீன்றாள்
கொம்பினிலங்கிளைகபிலையிருவருமேகந்திருவக்குலத்தையீன்றாள்
வெம்பரிதியிற்றிரியம்பாரிமூக்கினில்விடுப்பவிரண்டுகோடி
யும்பர்மருத்துவர்பிறந்தார்பிறந்தனசராசரங்களுலப்பில்கோடி. உஎ

எண்ணிலையாவான்மகப்பெற்றெனப்பெற்றாளுயிரத்திரட்டியோரும்
விண்ணிலையாவீடுபெற்றார்மீட்டுமகளிரைப்பயந்தவியப்பாலோங்கி
யொண்ணிலையாய்மலைகடலும்பாதலமும்பூதலமுமுயர்வானும்
பெண்ணிலையாற்சிறுவிதிக்குப்பெருநிலையானதவத்திற்பெரிதொன்றுண்டோ.

வேறு.

அத்தலைவாழ்வுமீசனருளெனவுணரான்றன்பாற்
சித்தெனவகந்தையேறிச்சிறுவிதிபெருமால்பூண்டா
னெத்துணைகற்றோரேனுமிருவகைச்செருக்காலயார்க்கும்
வைத்தநோயறுமோமுக்கண்மருந்தையுட்கொள்வார்க்கன்றி. உக

மகக்குழாத்திருபானேழ்பெண்மக்களைமணஞ்செய்சோமன்
முகத்தெழிலாரல்பாலுமுலையெழிலுரோணிபாலு
முகப்பினாலேனையோரையொருவினைதனைக்கேளாத்
தகைப்பெருமதியைத்தேயவிதிமகன்சாபஞ்செய்தான் ௩௰

புதியவானமுதமீய்ந்துபுலவரைவளர்ப்பான்மேனி
திதிதொறுந்தேய்வதானுஞ்சிறுவிதிசாபந்திரா
னதிபொதிபவளவேணிநாதனாரடியாரன்றி
விதிதனைமதியினாலேவெல்லவும்வல்லாருண்டோ. ௩௧

பான்மதிதேய்ந்துமேனிபழுதுபட்டுழன்றுவானோர்
கோனவைகுறுகிக்கூறக்கொழுங்கனல்கரியாவேட்ட
தேனனார்க்கோரஞ்செய்தசிறுமையாற்பெருநோய்பூண்டாய்
மேனெறித்தக்கன்சாபம்விலக்குதற்கெளிதோநம்மால். ௩௨

முதிரைமோதகவிளாவின்முனைகயமுகத்தெம்மான்மு
னதிகவீறுரைத்துநீசனாயினையந்தச்சாபஞ்
சதுமுகனவனைவேண்டச்சதுர்த்தியினமைத்துநீத்தா
னிதுவுமங்கவனாற்றீர்தியென்னலுமவன்பாற்சென்றான். ௩௩

வியன்மதியுலகினான்றும்விண்ணிடைநான்கும்வீய
வயிரவாட்படையான்முன்னர்வளர்கலைநான்குந்தேய
வயன்முனர்க்கலைமூன்றேகமவன்வழிவிடுப்பவேகி
யுயர்பிரான்கயிலைவெற்பிலொருகலையொடும்போய்வீழ்ந்தான். ௩௪

மறைகளின்முதல்வாவோலம்வானவராவிகாத்த
கறைகெழுமிடற்றாயோலங்கண்ணுதற்பெருமானோல
மிறைவனேயோலமோலமென்னலுமிரங்கிநாதன்
பிறையையோர்கரத்தால்வாங்கிப்பிறழ்சடைமுடிமேற்கொண்டான். ௩௫

அருகுறைமதிமேற்சாபமயனின்றுபணிவினாவ
முருகுறைபிலிற்றுங்கொன்றைமோலியான்முடித்ததிங்கட்
கொருகுறையிலதாய்த்தன்பாலுற்றதால்வளர்வுமந்நோய்
வருமுறையதனாற்றேய்வுமதிதொறுமதிக்குவைத்தான். ௩௬

இன்னவையுணர்ந்துதக்கன்யான்புரிசாபந்தீர்ப்பான்
பின்னல்வேணியனோவென்னப்பிதற்றலும்புலக்னோக்கிச்
சன்னிதியடைந்தோற்காத்துன்சாபமுஞ்சிறுவிநின்சீர்ப்
பொன்னனார்வாழ்வுங்காத்தான்புரையதோவென்னத்தீர்ந்தான். ௩௭

சாதனைத்தவமும்வீறுந்தக்கனார்மிக்கவாழ்வு
மாதராராறுபானமூவராகியமக்கட்பேறு
மோதுதல்புரிந்தானிப்பாலுயர்புகழ்ச்சதியையீன்று
நாதனார்க்கீய்ந்தவாறும்வேள்விசெய்நயப்புஞ்சொல்வாம். ௩௮

இராசதசிகிரிமீதிலிறைவர்பாலெம்பிராட்டி
யரசுவீற்றிருக்குமெல்லையடிதொழுதகிலமெல்லாம்
வரதனிடத்தும்பான்மைவகுத்தெனக்குணர்த்தாயென்றாண்
* முராரிக்கரியாதன்முறுவல்கூர்ந்தருளிச்செய்வான். ௩௯

சகளநிட்களமேயாகிச்சகலமுமொடுக்கந்தோற்ற
நிகழ்த்தரப்புரிவோமென்றுநிகழ்த்தலுநிமலமேனி
யகளமாமுனக்கேதென்றுள்ளருளுருவாவதென்றான்
புகலுநின்னருள்யானெல்லாமெனதென்றான்புவனமீன்றாள். ௪௰

அகிலமாமுணர்வையாதனம்பிகையுரையான்மாற்ற
நிகிலமுமயக்கிப்பாறுநிலாவொளிதிறம்பியேனைச்
சகமுளோர்சடமாய்வீழ்ந்தார்சதுமுகத்தயன்மாலானான்
முகில்வண்ணன்பிரமமானான்மூவுலகிருளாயிற்றால், ௪௧

யாவுமேமருளாய்க்கன்மமிகந்துமாசுறலாலஞ்சிப்
பூவையென்மடமையாவும்பொறுத்தியென்றடியில்வீழ்ந்தா
டேவிமெய்த்தளக்கநீங்கத்திருவுளமிரங்கியண்ண
லாவியாய்நிறைந்துநின்றானலமுமெழுந்தவன்றே. ௪௨

உணர்ச்சிமீண்டிறைவனல்கவுலகுயிர்த்தெழுந்ததம்மா
கணத்தினிலுகம்பல்கோடிகழிதலாற்கன்மமாற்றப்
புணர்ப்புறுதலமேற்குற்றம்போக்கெனக்கவுரிபோற்றத்
தணப்பினாற்பிறவியெய்தித்தவஞ்செய்துதவிர்ப்பாயென்றான் ௪௩

வள்ளலைப்பிரிந்ததேவிவலம்புரியெனக்காளிந்தி
வெள்ளமேன்மிதந்துபூமேல்விரதமுற்றுழன்றுதக்கன்
பிள்ளையாயூழிகாலம்பெருந்தவமுயன்றும்பாவந்
தன்னாதற்கரியதானாற்சகத்துளோர்க்கெளிதோவம்மா. ௪௪

மணந்தனன்மறையோனாகமழுவலான்மாதைவேட்டுத்
தணந்தனன்மறைந்தானன்றேதக்கனுந்ததமேற்கொண்டா
னணக்குபின்வருந்திரோற்பவர்வமுற்றெய்திநாதன்
கணத்தொழிலிட்டுமேற்கொண்டுகயிலைமால்வரைமேற்போந்தான். ௪௫

தந்தைதாயுணராவண்ணந்தன்மகட்கொடுசென்றானென்
றெந்தையார்தமையென்னுமலிகழ்வதுதொடுத்தான்றக்கன்
சிந்தையாமைாருன்னிச்சிறுவிதிக்கிதனாற்றீமை
வந்திடுமெக்குமேதம்வருமெனவெருவிச்சூழ்ந்து. ௪௬

ஆகியார்வரத்தாற்பெற்றவரனிலவன்பால்யாமும்
போதராதிருந்துகூடாதாதலாற்புனல்சேர்வேணி
நாதர்பாலிவளையுய்ப்பாலவயறுமென்றுதேறி
மாதுநின்மருகற்காண்பான்வருகெனவயறுஞ்சென்றான் ௪௭

* முராரி—விஷ்ணு.

தவளமால்வரையைக்காத்தோன்கமலத்தோன்குலிசத்தாலே
துவளமால்வரைகளீர்ந்தோன்சுரர்களுந்திரளாய்வெள்ளித்
தவளமால்வரையைநோக்கித்தக்கனோடெழுந்துமுக்கட்
பவளமால்வரையைக்காண்பான்பரிவினல்விரவிப்போந்தார். சஅ

போந்தனர்வானோர்வெள்ளிப்பொருப்பிறைசெம்பொற்கோயில்
சார்ந்தனர்வாயில்பூதர்தடுத்தனர்விழியுந்தாளுஞ்
சேர்ந்தனனகங்காரத்தாற்சிறுவிதிநின்முன்செல்வி
காந்தனைப்பணிவாரெல்லாங்கடைதடையின்றிச்சென்றார். சகூ

எரிமணிவிமைக்குங்கோயிலிமைப்பிலாவிமையோர்புக்கு
வரிவிழிமடந்தையோர்பால்மருவிவீற்றிருந்தான்றன்னை
யரியணையணுகித்தாழ்ந்துபணிந்தனருகாந்தவாரி
கிரிசனெம்பெருமான்வெள்ளிக்கிரிமுனர்த்தாழ்தலேய்ப்ப. ருo

சொல்லினுவரிக்குமோலித்துளக்கினுல்விதிக்குமூரல்
வில்லினுற்குலிசத்தாற்குவிழியினுலமரர்க்கின்ப
நல்கினுன்சமையந்தோறுநண்ணியகடவுளாகி
யல்கலிலுயிர்கட்கெல்லாமளவினுக்களவாய்நிற்பான். ருக

காப்பதுகடனுக்கொண்டகண்ணனையினிதுநோக்கி
மாப்புவனங்கள்யாவும்வளவிதேயென்றானன்னோன்
பூப்பவன்றனக்கும்யாவும்புரக்குமென்றனக்குமேத
நீப்பவனுனேநீயாகநிறைவலாற்குறைவேதென்றான். ருஉ

கரியுரியாடைபோர்த்தகண்ணுதற்கருணைமூர்த்தி
யரிபிரமாதியோரையவரவரதிகாரத்துப்
புரிவனபுரிந்துவாழ்மின்போதுமினென்றுவாக்கால்
விரிதருகுறிப்பானேக்கால்விடைகொடுத்தருளப்போந்தார். ருட

படையினர்வணங்குநேமிப்படையினுனுதிவானேர்
விடையினர்சரணம்போற்றிவிடையினுனமீளுங்காறுங்
கடையினர்முகனுங்கோயிற்கடையினிலமர்ந்தான்றக்கன
புடையினர்பரவக்கொங்கைப்புடைப்பினர்கவரியேந்த. ருச

திருமலைக்கோயில்வாயில்செறிந்தசாரதரைநோக்கி
மருகனைமகளைக்காண்பான்வருமெனைத்தடுத்தென்னேவ
லரிதனையயனைவானிலமரரைவிடுத்தீர்நீரெள
பெருகடித்தொழும்பராயும்பேதமேபுரிந்தீரென்றான். ருரு

வணங்குதியாகிற்சேறிவள்ளல்பாலென்றார்பூத
ரணங்கினையவனுக்கேய்ந்தேனடியர்போல்வணங்கேனென்னைக்
கணங்களீர்தடுத்தவாற்றாற்காண்மினுங்கடவுள்பூசை
தணந்திடவுலகம்யாவுந்தடுப்பனென்றுருத்துப்போனான். ருசா

அன்றதொட்டவளைமாலையமார்காவலனைமேருக்
குன்றதொட்டவன்பொறசோமில்குமருதிர்பணிதிராகின்
மன்றதொட்டரசும்வாழ்வுமார்தவனெனறுமன்றோர்
கன்றதின்பணியேசித்போரம்பிர்முனியேலென்றார். ௭

பூமறுக்கன்னன்றுரும்பூமறும்புனிதத்தெய்வக்
காமறும்போயபினனக்காமறுவெரிதீர்தக்கன்
சோமனைமுடித்தத்தோகைச்சோமனென்றடுந்தானென்னை
மாமனென்றணரான்றனேமாமனென திருத்தானென்று. ௮

தீர்த்தனைப்பரவுவாரைத்தீர்த்தனன்றிராக்குற்றம்
போர்த்தனன்பிரமன்யாகமபுகுர்தனைபரமபாக
கீர்த்தனைந்திசாபதிதவிடவேள்விகருண்டர்
மூர்த்தனைகர்ததைசெலவத்தாவினைத்தூர்ப்பதோரான். ௯

திருநத்திசாபமஞ்சிச்செய்கலர்யாரும்வேள்வி
தருமமார்தனையைநீக்கித்தவித்தனவுலகமெல்லாம்
வெருவுபோவையைநோக்கிவேள்வியாண்புரவேவென்று
னெரிபெருஞ்சாபத்திமுன்னேதிரும்வைத்தறபோல்வான். ௰

தெருண்டவானவனரகூவிச்செப்புவான்கயிலையார்கு
மருண்டபுன்காடுநாடுமலர்க்கையிலெடுப்பதோடு
சுருண்டபூங்குழலாள்விடுதொறும்பலிக்குழல்வான்கண்ட
மிருண்டதவமிருற்குமலெழூடல்விடமுண்டன்றே. ௧௧

விதியெனுமென்றதாதைவிதியிலார்கிரமதியென்பார்
சதியெனுமகளைடன்னுன்றனக்கருளென்றவார்ருற்
பதியெனவழைக்கிச்சேனபாக்கியமவனாற்பெற்றுன்
மதிவிழுமதியானேனைமாதலனெனவுமோரான். ௧௨

தாயிலான்றமருமில்லான்றந்தையுமில்லான்காடு
கோயிலானுருமில்லான்குலமில்லான்குடியுமில்லான்
தீயிலாடாக்கமாகத்திக்கெலாமுடைதொட்டாடும்
பேயிலாதிருத்தாறுண்டோபேயிலான்றனக்கோர்சுற்றம். ௧௩

கொற்றவனல்லன்வேணிக்கோலத்தாற்குருவிலாதான்
சேற்றவனல்லன்மாதர்கற்பினையழித்தலாலே
கற்றவனல்லன்மாட்டிருலொழுக்கமில்லான்
மற்றவன்றனையேதுஞ்சவைக்குநர்காலேர்நீவிர்- ௧௪

பொன்மையாதிருவர்க்காகமற்றனபுதல்விமாரை
யன்மையாயளித்தான்றன்னையளித்தனன்சாபத்தியான்
மென்மைசேர்மகத்தியொன்றவேட்டிவிச்சதியைவேட்டான்
வன்மையும்பணியுமேதேவர்மடைமையுந்தவிர்ப்பேனென்றான். ௧௫

என்றனனிருந்தார்தும்மவெழுந்தனனமரமாகர்
பொன்றுணைக்கவரியேந்தப்புள்ளிடைதட்பப்போகிச்
சென்றனன்கங்கையோர்பாற்றிசைமுகனுதிதேவர்
மன்றனன்மகளிரோடும்வருகெனவிடுத்தானேலை. ௬௬

களகலவனத்துத்தெய்வக்கம்மியனிறைஞ்சிப்புக்குப்
புனைமணிவாயின்ஞாயில்பொன்னெடுஞ்சிகரமன்றஞ்
சினகரமணங்கார்கோட்டமுனிவராச்சிரமந்தெற்றி
யனமடஞ்சாலைசோலையறப்புறம்வேதியாதி. ௬௭

எழுயோசனையோராஞ்ஞூற்றிரட்டியின்யாகசாலை
நூறுயோசனைவிசாலநுவலரும்வேள்விக்குண்டங்
கூறுயோசனையான்மேருக்குன்றமுமலையாநிற்ப
வீறுசேர்கடலுமெங்கவிண்ணவர்வியப்பச்செய்தான். ௬௮

வேறு.

இந்தமகச்சாலையுழித்தக்கனோலைவழியெழுந்துபோந்தார்
கந்திருவர்கின்னரர்தானவரியக்கர்கிம்புருடர்கருடர்போக
ரந்தரசாரியரமரர்வித்தியாதரபூதாரக்கர்மாந்தர்
முந்துதாரர்கணத்தர்பாதளர்வேதாளர்முனிவோர்சித்தர், ௬௯

பன்னிருவமாதவர்கள்பதினொருவருருத்திரர்மேற்பதின்மர்தேவர்
மன்னுவசுவமணிமவுலிமனுவேந்தரெண்டிசையின்மகுடவேந்தர்
நன்னதிகளோரேழுபொழுதாறுசருக்கலைந்துநான்குவேத
முன்னருலகொருமூன்றுமிருமருங்குநிறைந்தனரான்முகூர்த்தமொன்றில். ௭௰

பொன்னுலகிலரம்பையர்கள்பொருப்பிலுறையரமகளிர்புயங்கநாட்டுக்
கன்னியர்களியக்ககுலப்பூவையர்விஞ்சையமகளிர்சுகுபவேந்தர்
பன்னியர்கள்கந்திருவப்பாவையர்களுடுமகளிர்படியமாத
ரின்னகைமேனகையரம்பையுருப்பசிதிலோத்தமைமேலிந்திராணி. ௭௧

வேறு.

வந்தருகுழுமினர்மகவாள்முதலோராகவானவர்குழாத்துடன்மால்வாரிமீதி, லுந்தி
பூத்தவனிடம்போய்த்தக்கன்வேண்டி யுயர்மகநிகழ்த்தருளென் றுரைப்பமாமான்
முந்தவெழுந்தொருகருடத்துரங்கமேறிமுளரிமலர்த்திருவினொடும்வந்தான்பூமே,
லந்தணனேர்புறத்தணைந்தானதனைக்காணு வறுபத்துநாற்கலையோடொருமான்வந்
தாள். ௭௨

வேறு.

புக்காட்செல்வம்போலும்புகலுண்டோபுகலாமுன்னர்த்
தக்கனூர்வேள்விச்சாலைதன்னிலெவ்வுலகத்தோருந்
தொக்கனர்புவனவேந்தர்தொகையிலீசானனல்லார்
மக்களிற்சதியேயல்லார்மருகரிற்பரமனல்லார். ௭௩

மவுனிபராசரன்சீர்வசிட்டனத்திரிததீசி
சவனுயர்கும்பயோனிதுருவாசன்பிருகுத்தங்க
ளிவர்களெம்மானையன்றியெய்திலரிருந்தார்மற்றைத்
தவமுயன்முனிவர்யாருஞ்சார்ந்தனர்யாகசாலை. ௭௪

பதுமாசனுக்குமேலைப்பண்ணவர்தமக்குஞ்செய்யு
முதலமையாஞ்சிறப்புச்செய்தமுறைமுறைவரிசையாவும்
புதல்வியர்மருகர்க்காற்றிப்பொருவருநெடுங்கூடத்து
மதகயம்புகுந்தாலென்னமகப்பெருஞ்சாலைபுக்கான். ௭௫

ஆவலியக்கொருகபத்தியர்தென்பாலங்கி
மாசறக்கொழுந்துவீசவடவரைத்தறிவாலோங்கப்
பாகமாங்காமதேனுப்பார்த்தவிசொரியாவிற்ப
யாகமார்பொருள்கள்யாவுமீய்ந்திடப்பாரிசாதம். ௭௬

நிதியக்குன்றருன்றுத்தேவர்கள்குவிப்பவானோர்
புரவலன்பணிப்பமோனைப்புங்கவர்திசைகள்காப்ப
விரதமார்வருக்கமெல்லாமிர்தவேகொடுப்பவேலை
மருகரோடதிதியாதிமக்கள்கைக்கருமமாற்ற. ௭௭

இருபுறத்தமரமாதர்கோடிகமேந்திச்சூழத்
திருமாதலிந்திராணிசெயும்பணிக்குறைகடீர்ப்பக்
கருணையாலுலகமெல்லாங்காப்பவன்வேள்விகாப்பப்
பொருவரும்யாகத்தெய்வம்பொலிவுறநடிப்பமாதோ. ௭௮

தருமனேகுரவனுகச்சதுமுகப்பிரமனின்ற
பிரமரிலொருவன்மேவிப்பிரமதானத்தில்வைகக்
கருநிறக்கலைத்தோல்போர்த்துக்கைத்தலம்வெண்ணீறுபூசித்
திருமகப்பொலிவுபூண்டுசிறுவிதியிருந்தான்மன்னோ. ௭௯

மந்திரச்சொல்லுரையாவாணிமறையுரைப்பவளாம்யாவு
மெடுத்துக்கைநீட்டுவாளாமெழிற்பெருந்திருவாஞ்செல்வி
விடுத்தக்கைம்மறப்பாருண்டோதக்கனூர்வேள்விச்செல்வம்
கொடுக்கக்கைசடைப்பாரில்லைக்கொள்ளக்கைசடைப்பாரின்றி. ௮0

இன்னவைநிகழுமெல்லையீசனெம்பெருமானன்றிப்
பன்னருமகத்தின்சாலைபடருவான்மடமைநோக்கிச்
செந்நெறியிலைப்பாலுன்னிச்சென்றனர்முனிக்குழாத்துத்
தன்னுயிர்ச்சவனுத்தங்கன்றுருவாசன்றதீசிமாதோ. ௮௧

சிறுவிதிமுகத்தைநோக்கிச்செப்புவான்றதீசியார்க்கு
முறுதியேயறங்கள்செய்தலுயர்பலவறத்தின்மேன்மை
பெறுகதிமகமேமிக்காம்பிறங்குசீர்மகத்திறன்போன்
றுதவமுயற்சிவல்லார்வழக்குழுவுலகிற்காணேம். ௮௨

நிச்சமார்தருவும்வானோர்நிருபனுமேவல்கேட்பப்
பச்சைமால்வேள்விகாப்பப்பண்ணவர்விண்ணோரோத்த
விச்சையாமகஞ்செய்கின்றாய்விதிமகன்விதிநீசெய்யு
மெச்சமென்பதற்கோரெச்சமீசனில்லாததென்றான்- ௮௩

தேசமர்முனிவன்கூறச்சிறுவிதியொருவர்க்கிங்கே
யீசர்பன்னொருவருள்ளாரொன்றனனிவரோநேர்வா
ரோசைவிந்துவமாமூலவுருத்திரர்க்கென்றான்யோகி
யாசருமனத்தன்மீட்டுமுருத்திரரவரோவென்றான் ௮௪

உமையொருபாகர்க்கோதுமுருத்திரநாமஞ்சொல்வார்
தமதுருப்பெற்றோராங்கிசம்புவின்கணத்தோர்க்கெல்லாஞ்
சுமையுறுதாதுவைந்தும்பொன்னெனிற்சுவணமாமோ
வமாரோபுலவவொன்றாலாடினோர்பாடினோரும். ௮௫

கடைநடுமுதலிலாமுக்கண்ணனேகடவுளென்று
சடைமுடித்தலைவன்கூறச்சாற்றுவான்முனிந்துதக்க
னிடையினிற்சடையின்மாதரிருவர்வைத்தவனோயோகி
விடையினைப்பரியாவேறிவீதிபோமவனோவீசன். ௮௬

நஞ்சினையமுதுண்பானோநாணிலாநக்கன்றானோ
குஞ்சிதப்பவுரியாடுங்கூத்தனோதீர்த்தனாவான்
வெஞ்சினப்பன்றிக்கோடுமீன்விழியாமையோடு
கஞ்சுகிபிறவும்பூணுங்கருத்தனோகருத்தனாவான். ௮௭

கழிதலைமாலையானோகையிலோடேந்துவானோ
சுழிபுலிகரித்தோலாடைசுற்றிவெண்ணீறுபூசி
யழிதருமயானந்தன்னிலலகையோடாடுவானோ
விழியில்வேற்றுருவுகாட்டும்விகிர்தனோவிமலனென்றான். ௮௮

முறையிலான்முனிந்துகூறமுனிவிலான்மொழிவான்மூல
மறையெலாங்கற்றுங்கல்லாமனத்தராய்மதத்தாலுன்போ
லிறைவனையெண்ணாராகியிருந்தவம்புரிந்தார்மன்னோ
கறைகெழுமனத்தர்தாருகாவனமுனிவர்முன்னாள். ௮௯

ஈங்கிவர்தவத்தைமாய்ப்பமாயனையேவியெம்மான்
றீங்கனிமொழியார்க்கெல்லாந்திகம்பரனாகிச்சென்றா
னாங்கவர்மருங்குநெஞ்சுமாசையேயுடையராகி
நீங்கருந்தவமுங்கற்புநிறைகளுந்தோற்றாரன்றே. ௯௰

அவ்வவராபிசாரமுயன்மிதித்தாடிவேங்கை
வெளவுரியுடுத்துநாகமிலைந்துகூர்மழுவுந்தீய
நவ்வியுந்துடியுமேந்திநகுதலைமுடித்துப்பூதம்
வெவ்வடர்படையாநாதன்விரதர்வீறடக்கியாண்டான். ௯௧

உலகீன்றருளப்பெண்பாலுகந்தனன்மலர்ந்தகாட்டங்
நிலவொளுருலாள்போர்த்தச்செங்கைவேர்வெழுந்தவாரி
புலமெலாமழிந்தல்கண்டுபுவனமூன்றுருவய்த்தான்
பலதிப்பரப்பிலொல்றேபகிரதற்கேந்தகங்கை. கஉ

சிறக்கருகாந்தம்பொங்கியெரிதெறவெளிபாங்கால
மிதிலாவமயிருலீசனிவ்வெளிமயானத்தந்த
நிறணிந்தாடல்செய்வாளின்மலையொருத்திகாண
ஆதிபாத்தருமஞ்சேவாயுகந்தொறுமொருதாங்கும். க௩

மீனமாய்மறையைமீட்டுக்கமடமாய்வெற்பைத்தாங்கி
வானவர்க்கமுதமீய்ந்தமகிதலம்விழாமற்கோட்டா
லேனமாயெடுத்தமாமாலெய்தமாலடைக்கிமைநதர்
ஞானநாயகன்பாலுய்த்தார்காட்டமுமோரங்கோடும். கச

கயமெறுமவுணக்குன்றமுயிர்க்கடல்கலக்குங்காலம்
வியமுறுதலகமுய்யவென்றதோலுரித்தப்போர்த்தா
னயன்மதஞ்சிரந்தானிக்கியதுபலிக்கலமாச்சூலம்
வயிரவற்கேய்ந்தவிட்டான்மாலாதிசுரர்மான்மாற்ற. கரு

வாசவன்மதமோர்காலமாற்றவேற்றருவாயெங்கோன்
பூசல்வெங்கதத்திலுய்த்தசலந்தரன்புவனமூன்றிற்
கேசவன்முதலோர்சாயக்கிளர்சமர்விளைத்தான்வெற்பி
லீசனந்தனன்போலுய்த்தநேமியாலிருகூறுற்றான். கசா

வீய்ந்தவனுருவிற்புக்குவிறலரிவிருந்தையென்றங்
காந்தையைப்புணர்காற்சோரங்கண்டவள்சபித்ததீயின்
மாய்ந்தனன்மயானத்துமேயங்கலுமுலைமயோர்வித்தாற்
பூந்துழாயருளவன்றேபுனைந்துமாலொழித்தான்மாலும். கஎ

அகிலகாரணமாவாடலாடலுக்கிசைந்தகோலஞ்
சகலமுமங்கங்காகத்தரிக்குவன்விடுப்பனல்லாற்
புகலருமுருப்பேர்செய்கைபூண்படையுடைபூண்மற்று
நிகிலநாயகனுக்குண்டோநிகழ்ந்ததகிழ்த்தஞாலம். கஅ

சரமிலந்தசரமெல்லாந்தந்தையாய்த்தாயாய்த்தந்த
பரமனைப்பணிந்தேரியும்பண்ணவர்க்கரசாயுள்ளை
பிரமனைப்பிறையாண்டாய்பிஞ்ஞகர்க்கவியும்பெய்து
பிரமனைச்செவ்வமெய்தித்திறம்பெறவாழ்தியென்றான். கக

ஆங்கவன்பொருட்டாலென்றுமமுதின்றிவிடமுண்டாற்குப்
பாங்கிருந்பலியேற்றன்னப்பரிகலங்கொடுத்தானெங்கை
நீங்கலாவருமைகேற்கிகேரிழைசந்தியையானே
யோங்குசீர்மணத்தாலிப்தேயையர்மனைவாழ்வுபெற்றான். ௨௰

துன்னரும்புலித்தோன்மாற்றித்துகில்சுற்றிமகுடஞ்சூட்டி
மன்னுபொன்னணிகள்பூட்டிமணவாளக்கோலஞ்செய்த
வென்னையோரணுவாயெண்ணாவிகழ்ந்தனைதருவீசன்
றன்னையுமருகாவெண்ணேன்சத்தியையுமகளாவெண்ணேன். ௱௧

பற்றிலனெனவேதக்கன்பகர்தலுமுனிவனோக்கி
யுற்றுநீபுரியும்வேள்விக்குறுபயனளிப்பார்யாவர்
பெற்றமாமறைகள்யாவைப்பிரமமென்றுரைக்கும்பேதாய்
வெற்றிகொண்டெழுமோசேனைவேந்தனையின்றியென்றான். ௱௨

முனிவனீதுரைப்பத்தக்கன்முயற்சியேபயனைநல்கு
மெனவுரைவலிப்பப்பின்னுமிறையின்றிச்சடமாமுக்க
நனிபயன்றருமோவென்னநற்றவன்மறுப்பமற்று
முனதுரைகேட்பார்க்கன்றோவுரைப்பதென்றுருத்துச்சொன்னான். ௱௩

அவனதுபகர்தலோடுமடன்முனிச்சீயஞ்சீறிச்
சிவனருளின்றிச்செய்கைசீவகோடிகளுக்குண்டோ
விவனையெண்ணாதநீயுமியலுமட்டியற்றும்யூபங்
கவனவெங்களத்திலாவிகழியுமட்டாடும்யூபம். ௱௪

விதுவணிசடையானன்றிவேள்விநீயியற்றுஞ்செய்கை
மதுமலர்க்குழலிற்சூட்டிவனமுலையாரம்பூட்டிக்
கதிர்மணிக்கலாபஞ்சாத்திக்கன்னிகையொருத்திதன்னைப்
புதுமணக்கொழுநனின்றிப்புரிமணக்கோலம்போலும். ௱௫

கண்ணனென்பவனுமெங்கள்கடவுள்பாற்சத்திமற்றை
விண்ணவர்பசுக்களன்றேவியன்பசுபதியைநீக்கிப்
பண்ணமைபசுப்படுத்துப்பயனுநீயெய்துவாயேற்
பெண்ணொருபெண்ணைக்கூடிமகவினைப்பெறலுமாமே. ௱௬

வசுக்களேயாதிவானோர்காசிபன்மற்றோராய
முசுக்கள்போன்முனிவராலுமுடிவதொன்றிலையாற்கவ்வை
யுசுக்கள்போலரிப்பக்கூடியுயிரரித்திருந்தீரும்மைப்
பசுக்கள்போற்படுப்பன்வந்துபசுபதியவனேயின்னம். ௱௭

உசம்பலகடந்தமுக்கணொருவனைமழுவலானை
யகந்தையாலிகந்தநீயுமழிகநின்யாகசாலை
புகுந்தவர்சிதைகவேள்விபொன்றுகவென்றுசாற்றித்
திகந்தமும்புகழும்யோகிமுனிக்குழாத்தெழுந்துசென்றான். ௱௮

ஆங்கவர்போயபின்னரமரரோடிருந்ததக்க
னீங்குதீவேள்விசெய்தான்மேல்வருங்கருமமோரான்
யாங்குமேநிறைந்தமுக்கணிறைவனையதிவித்தன்றித்
தீங்குனெய்தும்பான்மைதேவர்க்குந்தெரியொணாதால். ௱௯

இருநிலப்பரப்பும்வானுமேவல்கேட்டிறைஞ்சத்தக்கன்
றிருகுசெய்மகத்தின்கோப்புந்திங்கள்காசிபனேயாதி
மருவார்தஞ்செருக்குமன்னோர்மனைவியர்களிப்பும்வானோர்
பெருமையுங்கண்டுவெள்ளிப்பிறங்கல்வாழ்முனிவன்சேர்ந்தான். ௱௰

திருமலைக்கோயில்வாயிற்றிருக்கடைபலவுநீங்கி
மருமலர்த்திருவோலக்கமண்டபங்கடந்துபோகி
யருளிருப்பண்டான் ௦ சிற்குதகிலமுமாடுங்கையாற்
கருணாம்பரமனோர்பாற்கவறெதிர்ந்தாடுவானை. ௱௰௧

சடைமுடிதாளிற்சூட்டித்தாழ்ந்தவிழ்ந்திறைஞ்சிமுக்க
ணுடையநாயகனைப்போற்றியுலகெலாமீன்றதாயைப்
புடையுறவணங்கிவாழ்த்திப்போந்தவாய்புதைத்துத்தக்கன்
விடையமர்வேள்விமார்க்கம்விளைவின்விண்ணப்பஞ்செய்தான். ௱௰௨

கேட்டனன்கவறஞ்சூதங்கிடத்தினனிறைமுன்றுதை
யீட்டியமகத்தினார்வத்தெழுந்தனள்பணிந்துவீழ்ந்தாள்
வேட்டகத்தேவர்க்குமெய்தாவியன்சிறப்பெய்தினும்
பேட்டனநடையினார்க்குப்பிறந்தகத்தாசைபோமோ. ௱௰௩

அன்னைதாள்பணிந்துகேட்பவையர்தாமுறுவல்பூத்து
நின்னையுமழையானெம்மைநினைவிலுநினையான்சென்று
றுன்னையேமதியான்போதலொழியெனமறுத்தார்தாயர்
தன்னையர்க்கண்டுமீள்வேனென்றுபொற்சரணில்வீழ்ந்தாள். ௱௰௪

வல்லியக்கொம்புவேண்டவரதன்மேற்கருமமோர்ந்து
சொல்லியவண்ணநேர்ந்தான்றூயபொன்விமானமேறிப்
பல்லியக்கொம்புபம்பப்பனிமொழியணங்கார்சூழச்
செல்லியற்கணங்களார்ப்பச்சிறுவிதிசாலைசார்ந்தாள். ௱௰௫

நதிநிலக்குண்டங்கண்டுசமிதையாமூரந்துய்ச்சாலி
முதிரவித்தெறிந்துநெய்யாமுதபுனல்சொரிந்தானூர்
நிதமொடுகோளுஞ்சூழத்தீவினைப்பயிர்செய்வான்முன்
புதியால்வினைபோற்சென்றுபுகுந்தனள்புவனமீன்றாள். ௱௰௬

வன்சுதைநீற்றஞ்சாலைவாஞ்சையின்வருகின்றாளைத்
தன்சுதையெனவும்பாரான்றவேலன்வருகென்றூட்டாப்
புன் ✠ சுதையனையனுகிப்புறக்கணித்தகலாநின்றான்
மென்சுதைதனைக்கண்டாலம்பிலக்குதல்வழக்கேயன்றே. ௱௰௭

தீயவனிருந்தமார்க்கதிருவுளந்தவிலென்னுமை
லுயகொட்டாளுள்ளோடத்தலுமவன்காணாத
தாயருந்தனிவிமாருந்தழுவினர்மகிழ்ச்சிகூர்ந்தா
ராயிழைபாசவர்க்கமகத்திறுமகளுமேயா. ௱௰௮

---

௦ சிற்குத ஞானவிளையாட்டு. ✠ சுதை பால்கொடாப்பசு.

பயந்தனள்சிறப்புச்செய்யப்பயந்தனள்பதகனாலே
வியந்துடன்பிறந்தார்யாரும்விருப்பினர்வெறுப்பார்போன்று
ரயர்ந்தனளகன்றாள்செல்வியணங்கனார்குழாத்தைநீக்கிப்
புயங்கலையுரிவைபோர்த்தான்புரிமகமுன்னர்ப்போந்தாள். ௧௧௯

கண்ணனைமலருளானைக்கற்பகவனத்துளானை
விண்ணவர்பிறரைவானில்வெண்மதிக்கடவுளாதி
யெண்ணருமருகர்தம்மையாகத்தில்வரித்தாய்முக்க
ணண்ணலெம்பரனையெந்தாயயர்த்தனைபோலுமென்றாள். ௧௨௰

அலைகடலமுதப்பாயலண்ணலுமமுதமுண்ணும்
புலவரும்புலவர்கோனும்புலவருக்கமுதநல்குங்
கலைபிலாவொளிருந்திங்கட்கடவுளும்வளர்பொற்சாலை
நலமிலாவிடத்தையுண்டானண்ணுதற்குரித்தோவென்றான். ௧௨௧

ஆரணன்வெருவியோடவமரர்களோடவோடா
நாரணன்வெளியமேனிகரியதாய்நடுங்கியேங்கிப்
பூரணமுறையோவென்னப்புகறலும்விடத்தையெங்கோன்
பாரணஞ்செயலாலன்றோபருகினாரமுதமென்றாள். ௧௨௨

மன்றிடைநிருத்தஞ்செய்துமனைதொறும்பலியேற்றுண்டு
குன்றுறைகுலமிலானைக்கூட்டலன்வேள்விக்கென்றா
னுன்றனிமகவையன்னாற்குதவினாலமென்சொல்வா
யென்றனளதனானீவிரிருவருந்தவிர்கவென்றான். ௧௨௩

அங்கணாயகனைமுக்கணகிலநாயகனைமூர்க்கன்
பங்கமாயிகழ்தலாலேதந்தைமேற்பழையகாதன்
மங்கைநாயகியாண்முற்றுமறந்தனண்மடவார்க்கெல்லாந்
தங்கணாயகனேயன்றித்தந்தைதாய்தமர்வேறுண்டோ. ௧௨௪

மந்திரமறைகள்பாய்மாமகத்திலெண்டிசைகள்காக்கு
மிந்திரன்முதலோர் 0 ஆசரிமையவர்முனிவோர்தொண்டர்
சந்திரன்கதிரோனங்கிதம்பிரான்விழிதேர்பூமி
யந்தரமனைத்துமேனியவனலாதுலகமுண்டோ. ௧௨௫

சீர்மகமுனக்கேதீண்டிச்செயுமிடமேதுநீதான்
யார்மகன்றந்தைதாயர்யாவரொன்றுணராய்போலும்
போர்மழவிடையார்க்கன்புபுரிந்தமெய்த்தவத்தாலன்றோ
தார்மகபதியேயாதிதலைவர்க்குந்தலைமைபூண்டாய். ௧௨௬

நெறியுளார்செல்வம்பெற்றானெறிநின்றுநீடுவாழ்வா
ரறிவிலார்செல்வம்பெற்றாலளவிலாவகந்தைப்பேயும்

---

0 ஆசர்—படைஞர். உடைதருபவர்எனினுமாம்

பிறிதகன்றெரியாரேயும்பிடித்திடுமவையைமாற்ற
வறமையேதண்டமென்றுமிரண்டுமோமருந்தமாதோ. கஉஎ

சிட்டரைப்பரிக்குந்தேவதேவனையிகழ்தலாலே
நிட்டநிக்கிரகஞ்செய்யத்தோன்றலார்தோன்றுகிற்ப
திட்டமாமுனிவர்சொல்லுமெம்மனோர்மொழியுங்கேளாய்
மட்டறுசெல்வமந்தோமதத்தினுலழிகின்றாயால். கஉஅ

பாவிநின்மழுவலானையிகழ்வரோடவையுந்தப்
பாவலாயடுதல்வேண்டும்படாதெனிற்பழிமேல்வைத்து
நாவைத்தேவேண்டுமொழிவியர்திடாதவ்வூர்விட்டுப்
போவதேவேண்டும்வேண்டார்பொருந்தவர்சிவத்துரோகம். கஉகூ

என்றனன்கவுரிமானத்திவர்ந்தனளணங்கார்குழச்
சென்றனள்கயிலைவாழ்வைத்தெண்டனிட்டிறைஞ்சியோர்பால்
நின்றலங்குழல்பின்சோரமனத்தொருவேகந்தூண்ட
நின்றனள்கமலம்வேர்ப்பநிலங்கள்சிவப்பநாணி. கங௰

அணங்கெழுந்தருளும்பான்மையறிதலாலமரிலேற்ற
கணங்களைத்தூர்நிட்டன்றெலங்கனன்மகத்தாபிசாரத்
துணங்கெழுதறகட்பூதமொறுத்ததும்பிறவுநோக்கி
மணங்கெழுகொன்றையார்முன்சென்றனன்மதியாழோன். கஙக

வேறு

மமதையான்மதியழிந்திடுதக்கன்மாமகளா
முமையையென்னையுனதருளென்னலறுமையோ
டமையவேகுநின்கணங்களையடர்த்தனனமலா
விமையவர்க்கவிசொரிந்துவிகழ்ந்தனனென்றான். கஙஉ

முனிவன்வாசகந்திருச்செவிபுகுதலுமுதல்வன்
புனிதவாயிதழ்துடித்ததுநெறித்ததுபுருவ
பனிகொள்வாணுதல்வியர்த்ததுசிவந்ததுநயன
மனிலமஞ்சியுமொடுங்கினநடுங்கினவகிலம். கஙங

மாரனிற்கிலவிழிக்கடைசிவந்திடவதிரா
மூரல்வாய்நடமுப்புரங்களுமிலைமுழுதும்
வேரம்வாந்திடக்கடையுகமிதியெனவிமலன்
பாரவெங்கதமடக்கியோருதிப்பொடும்பார்த்தான். கஙச

௰ங-வது—தக்கன்வேள்விச்சருக்கமுற்றிற்று.

ஆகத்-திருவிருத்தம்—௲சயஅ.

## ௰ச-வது-தக்கன்வேள்வியழிந்தசருக்கம்.

பார்த்தநிக்னிற்கொடுமுடியாயிரம்பரப்பிச்
சூர்த்ததிண்புயவனாயிரண்டாயிரந்துளக்கிப்
பேர்த்ததாள்களிலன்றுமகன்றும்பெயர
வேர்த்தெழுந்தனன்வீரரில்வீரனில்வீரன். க

அண்டகோளகைமுகடுறுநெடுமுடியனந்தஞ்
சண்டபானுவோர்வடிவெடுத்தனவொளிதழைப்பக்
கண்டகங்கதிரொதிப்பவோர்கனகமால்வரைமேன்
முண்டகங்களாயிரமுகிழ்த்தெனக்கரமுகிழ்த்து. ௨

காற்றுமொன்றுதீயொன்றலாவிரண்டிலைகடப்பக்
கூற்றமென்பதுமொன்றலாவிரண்டிலைகுமைப்பத்
தோற்றயன்சிரநான்கலாலைந்திலைதுமிப்ப
வேற்றெழுந்திசையெட்டலாற்பிறிதிலையிருப்ப. ௩

குரைபுறக்கடலொன்றலாவிரண்டிலைகுடிப்ப
வரைசெய்மேருவுமொன்றலாவிரண்டிலைவளைப்ப
வுரைசெயண்டமேற்பித்திகையிரண்டிலையுடைப்பப்
பரசுபாணியாயழைத்தல்தன்பணிக்கெனப்பணிந்தான். ௪

பொன்பருப்பதமண்டமெண்டிசைகள்யாம்புரிந்த
மென்பரப்பெலாமழிப்பதுகுறித்திடேல்வீர
வன்பகத்திலாச்சிறுவிதிபெருமகமழித்து
வன்சிரத்தையுந்துணித்தியண்வருகென்றான்வரதன். ௫

என்னலும்பணிந்தேகினனிறைவிபாற்றோன்றி
யன்னைபத்திரகாளிபல்கணத்தொடுமணைந்தா
டன்னிடைப்பலகோடியர்வீரரைத்தந்தான்
பின்னர்முன்னருமருங்கினுநெருங்குறப்பெயர்ந்தான். ௬

ஆனைதந்தமீப்போர்வையுமடற்புலிகொடுத்த
தானையும்பெருந்தானையங்கடற்புலிதாங்கு
மேனமாமருப்பணியுடனெறிகடற்கிடையே
போனமாமறைமீட்டசேற்கண்களும்பொலிய. ௭

உரவுமார்பிடைச்சிங்கவேற்றுரிவையுத்தரிகம்
விரவுமாசுணக்கங்கணம்விரிபணமணிகள்
கரதலந்தொறுங்கதிர்தரக்கலைமதிக்கணம்போற்
பிரமர்மால்சிரமாலைகள்புயந்தொறும்பிறங்க. ௮

ஆயிரம்பணநெடுமுடியுடையகச்சசைய
வாயிரங்குபொற்கழலொலியுருமொலிமடுப்பச்
சேயிருந்திருமுகந்தொறுஞ்செறிநுதல்விழியாற்
காயகங்கையும்புறக்கடல்களுஞ்சுடர்கலங்க. ௯

வடிநெடுங்குடைகொடிகள்வானகத்தொளிமறைப்ப
விடைநெடுங்கொடிநிலவுமேலிருளெலாம்விழுங்க
வடிபெயர்ந்திடும்விசைதொறுந்திசைதொறுமதிரத்
தொடிநெடும்பணிகதிர்மதிமண்டலந்துரப்ப. ௰

அடல்செய்திண்புயமெண்டிசாமுகவெளியடைப்ப
வுடையபொன்முடியண்டகோளகைமுகடுடைப்பப்
படைகள்சண்டகர்மனாதோறுங்கொடுக்கனல்பரப்பத்
தொடையன்மார்பமுந்தடித்ததோள்களும்வலந்துடிப்ப. ௰௧

கண்களிற்பொறிபூழிவெங்கனலையுக்கனற்ற
விண்களிப்புறமுடுக்கள்போன்மலர்த்தொடைமிடைய
மண்களிற்பிலமெதிர்தாவரும்பெருஞ்சேனை
யெண்குலப்பெருக்கிரிகளிவிசைகளாலெடுப்ப. ௰௨

கன்விகாவுயர்கயிலையின்றிழிந்தொருகோடி
குன்றுபூதமொவ்வொன்றுபோண்டமுஞ்சுமப்ப
வன்னிவாக்கியவுயர்மணிக்கொடிஞ்சியந்தேர்மே
லென்னையாள்பவனேறினனுலகமீட்டற. ௰௩

வேறு.

கப்பணம்பிண்டிபாலங்கணிச்சிமுட்கரக்கோடாரி
வைப்பெருஞ்சுரிகைதோட்டிவச்சிரம்வெதிரந்தண்டக்
தப்புடைமுசலங்கைவாள்குலமேதிகிரியாதி
வெப்புடைப்படைகார்காலமின்னெனப்பரந்துமின்ன. ௰௪

முருசெல்லரிகள்பேரிமுரசமத்தளிதடாரி
காடிகைதமிலமொந்தைதலைமணிபடகம்பம்பை
திரடருபணவாதக்கைதண்டிமாவுரிகாளம்
உருடகாலத்துத்தோன்றுமாமுகிலொலிபோலார்ப்ப. ௰௫

வேறு.

நந்திபல்கணத்திரளொடுநவிபுறங்காப்ப
வாருசண்டனும்வலத்துறவிடத்துறமணிமான்
மூருதபல்கணாதரும்பூதருமுரணிச்
சீர்துரககுமார்திரிந்தெனச்சாரிகைதிரிய. ௰௬

புலிமுகத்தனகலிமுகத்தனவயப்புலிமா
னெலிமுகத்தனகோய்யுளையுத்திரிமுகத்த
கலிமுகத்தனகரடியின்முகத்தனகனக்கண்
மலிமுகத்தினுமதிகடன்முகத்தினும்வாவ. ௰௭

அடித்தலங்களிலலைகடல்கலக்குவவனந்தன்
முடித்தலங்களுமுருக்கநின்றுவமுகிலோ
டடிக்குலங்களைப்பிசைவனமிசைவனவிமையோர்
செவிக்கலங்குறக்கணமண்டலங்களைக்கிழிப்ப. ௰௮

மேற்றிசைக்கரிகீட்டிசைக்களிற்றின்மேல்விடுப்ப
காற்றினைக்கொடுசெமுத்தவகலைவாய்மடுப்ப

போற்றுபாரிடஞ்சூழ்தரத்தேர்மிசைப்போந்தான்
கூற்றினுக்குமோர்கூற்றெனும்வீரகோளரியே. ௰௯

காளிவஞ்சனிகாடுகாள்கடற்படைகளுலக்
கூளிசிந்துவெந்துறள்புலிப்பறழெனக்குழும
வாளிசென்றெனச்சென்றனரடற்கணநாதர்
தூளிசென்றதுசிறுவிதிமகக்குழிதூர்ப்ப. ௨௰

மலையதிர்ந்தனமாதிரமதிர்ந்தனவான
நிலையதிர்ந்தனவீரர்களதிர்தலுநெடுநீ
ரலையதிர்ந்தனமகஞ்செயுமயன்மகன்குடுமித்
தலையதிர்ந்திடயதிர்ந்தனவானவர்தகுதி. ௨௧

காலைவாலுடுத்தெரிந்தனகதிர்தனைநோக்கிக்
கோலஞாளிகள்குரைத்தனநரிக்குழாங்குழுமிச்
சாலையூடவிகவர்ந்தனதக்கனுதியர்க்கு
மேலவேமனமடித்தனதுடித்தனவிடமே. ௨௨

தக்கனுனவன்றன்மகங்கடிந்துதான்புரிவான்
மிக்கனுவதுகாண்டுமென்றயனின்றவிரிஞ்சன்
முக்கணாயகன்சேனைகண்டுளம்வெரீஇமுதுவான்
புக்குநாமினியுய்ந்தனமெனப்புறம்போனான் ௨௩

தொகைத்தடங்கடல்வீரன்மாப்படைவருந்துழனித்
தகைக்குமாலுமாலாகினன்முனிவருஞ்சடைத்தார்
திகைக்குமன்னரோயாகினர்தேவர்கோன்முதலோ
ரகைத்துமாமகமயரும்வானவர்களுமயர்ந்தார். ௨௪

ஞாலமேழையுமீன்றநாயகியையுமிகழ்ந்து
மாலயற்குயர்தேவையுமறந்துளான்மகஞ்செய்
சாலைபுக்கதேயவலமென்றமரருஞ்சலித்தார்
மேலினிச்செயல்யாதெனமுனிவரும்வெருண்டார். ௨௫

ஆதிநாயகன்புதல்வனைமுன்னிடாதமிர்த
மோதவாரியிற்கடைந்துமுன்பட்டபாடுணர்வோ
மாதுபாகனையிகழ்ந்தவன்மகத்திடைமதிப்பாய்ப்
போதன்மேயினம்புரிந்தனம்பிழையெனப்புகல்வார். ௨௬

நன்றுதிக்கெலாந்துந்துமியதிர்தலுந்துளங்கிக்
குன்றடர்த்தவன்முதலினோர்மாலொடுங்குழுமி
யின்றினிச்செயல்யாதெனவெருவுவார்க்கெதிரோ
சென்றுதாக்கினபாரிடப்பெரும்படைத்திரள்கள். ௨௭

ஓலமிட்டெழுகூளிகளும்பர்மேலுதிரக்
கோலமிட்டெனக்கிழித்தனவாய்வழிகுருதி

காலவிட்டனவானவர்மகளிர்காதரிந்து
காலவிட்டனபுரர்தராதியர்சபைநாப்பண். ௨௮

மனமுருத்தெழுகுறட்படைமகப்பெருஞ்சாலை
பனல்கொளுந்தினையாகமேற்கொழுகனலவித்த
கனகற்சுவரிடித்தனவுடைத்தனகடங்கள்
சினைமலர்த்தருப்பிடுங்கினநடுங்கினதிசையே. ௨௯

சாலையிற்கனல்கொளுத்துசாரதர்தமைநெருக்கி
யாலையிற்படுகரும்பெனவலைத்தனரமரர்
பாலையிற்பெருங்கிழத்திசென்றமரர்தம்படைமேல்
வேலையிற்கலங்கலக்கிடுஞ்சுறவெனமிடைந்தாள். ௩௰

மிடைந்தமுத்தலைப்படையினுலதிர்த்துவாள்விதிர்த்துத்
தடிந்துசென்னியுமிளையுந்தசர்படத்ததியைக்
கடைந்தமத்தெனத்தண்டினுலலைத்தனள்காளி
புடைந்தவிண்ணவரோடினர்தரிபடாதலைந்து. ௩௧

அமர்தாங்கியகொடிப்படைநெரிதலுமழன்று
நமனுமக்கியுநிருதியும்வருணனுநலங்கூர்
தமனியப்பெருந்தலைவனும்பாகசாதனனுந்
திமிலமுற்றெழுபவனனுமெதிர்ந்தனர்செருவில். ௩௨

வலமழுப்படைநந்திதேவனுமணிமானுங்
குலவுபல்படைச்சண்டனுஞ்சாரதர்குழுவுங்
கலகவிற்கொடுவாள்கொடுகதைகொடுகலந்தார்
புலவுமைக்கடன்மேல்வடவனற்றிரள்புகல்போல். ௩௩

[illegible]ரிரன்பொரநந்திபல்கணைத்தொடுமெதிர்ந்தான்
முற்றுசெங்கதிர்தழன்முதன்மூவர்மேற்சண்டன்
வந்தெதிர்ந்தனனேறழ்வலித்தடம்புயமணிமா
னுந்தமாமதிவருணனுநியருட்டனுடன்றான். ௩௪

பம்பையார்த்தனபடலிகையார்த்தனபணைபோர்க்
கொம்புதாரைகள்குழறினபிளிறினவேழ
மம்புவார்சிலைமுட்கரமெறிமழுவடல்வாள்
சம்பமாதியபடைகொடுதாக்கினர்சமர்மேல். ௩௫

தாள்களைப்பெருஞ்சிரங்களைக்கரங்களைத்தடிந்து
தோள்களைச்சிறைபுறங்களையுரங்களைத்துமித்து
வாள்களிற்பொருசாரதப்படைகளைமடுத்துக்
கோள்களைப்பொருகோளெனவானவர்கொதித்தார். ௩௬

சித்தவாப்பெருந்தேவனாயக்கர்விஞ்சையவா
மொய்த்தகின்னரர்கருடர்கிம்புருடராமுரணிக்

கைத்தலத்தினாற்புடைத்துவெங்காலினாலுதைத்துத்
தத்தவானிடத்தெறிந்தனர்பாரிடத்தலைவர். ௩௭

கருநிறத்தெழுகாளனக்கார்முகந்தாங்கி
யுருமெனச்சிறுநாணொலிதிசைதொறுமொலிப்பத்
தருமழைப்பெருந்தாரைபோலமரர்கோன்சரந்தூஉய்
வருகணப்படைதுரந்தெதிர்நந்திமேன்மலைந்தான், ௩௮

ஒன்றுபத்துநூறுயிரமெனப்பொலிந்துலவாத்
துன்றுபத்திரமாயிரம்வாசவன்றுரப்ப
நின்றுநந்திதன்கணிச்சியாலடுதலுநீறாய்ப்
பொன்றிவிட்டனவிளக்கில்வீழ்பதங்கமேபோல. ௩௯

நிரைநிரைப்பொருகணையெலாமவ்வணநிசழ
வரையெனப்பெருங்கதைகொடுமலைதனனமசவான்
புரைதவிர்ப்பவன்மழுவினாற்போயதுபொடியாய்த்
தரைநனிற்சினத்தெறிந்தமட்கலமெனத்தகர்ந்து. ௪௰

குலிசம்வாசவன்பிடித்தனனியத்தெதிர்குமுறு
மொலியினாற்பெருஞ்சாரதர்மலைநதனருலைந்தார்
வலியையேலினிநில்லெனவள்ளன்மேல்விடுத்தான்
கலைகளார்த்தெனவார்த்தனர்வானவர்கணமே. ௪௧

எரிபரப்பியெண்டிசைகளும்புகைத்துருமேறுங்
கரிபடப்படர்புரந்தரன்வச்சிரக்கதிர்வாள்
விரிசடைப்பெருநந்திதன்கணிச்சியின்மிடலா
லெரிகனற்கிடுஞ்சமிதைபோலடலையானதுவே. ௪௨

காயும்வச்சிரப்பொருபடைசெரிதலுங்கனன்று
ளயிரந்தடங்கண்ணினனுடற்பெருங்கரியைப்
பாயவிட்டெதிர்படர்தலுங்களிற்றைவால்பற்றிச்
சேயமொத்தவன்றிசைதொறுங்கறங்கெனத்திரித்தான். ௪௩

கறையடிப்பெருங்களிற்றெருடுஞ்சுழற்றலுங்கலங்கிப்
பறவையின்குயிலுருக்கொடுவாசவன்பறந்தான்
மறைபுகாதுவிண்மறைதலுமழுவினான்மலையைச்
சிறையரிந்தவன்சிறையையுமரிந்தனன்செய்யோன். ௪௪

இயமனங்கியைநிருதியைப்பரிதியையயிகலி
யயமனங்கியேழ்கரங்களிற்சிலகரமரிந்து
வயமனங்கிபல்லுகுத்துவானவரைவான்மடுத்துச்
சயமனங்கிபோர்த்தாடினனெறழ்வலிச்சண்டன். ௪௫

வருணன்வாயுவைத்தனதனிந்துவைப்பொருமணிமான்
றருணவேந்தலாச்சேனையைத்தானையைத்தடிந்து

கருணைவாழ்செனபிருந்துறும்பருந்தொடுகாக
மருணமண்டமைறைத்திடும்பர்தரிலார்த்தான். ௪௬

அடித்தமார்பிடையுதைத்துமேற்கதைப்பிடையறைந்து
மிடித்துமெற்றியுந்தகைத்துமேற்பற்றியுமீர்த்துங்
கடித்தும்விஞ்சையர்விண்ணவர்தானையங்கடலைக்
குடித்துமைப்புயற்குழாமெனத்திரிந்தனகூளி. ௪௭

குழுமெண்டிசைக்காவலர்தொலைசுலுந்தொலையாப்
பூழிமொய்த்தெழச்சாலையுட்சாரதர்புகுந்தா
ரூழியண்டங்களுடைப்பபோலவிக்கடமுடைத்தா
ராழிமால்பெருவேள்விகாப்பவனெதிரடர்ந்தான். ௪௮

தக்கனெங்குளான்சாலையெங்குளதவன்சாலை
புக்கவானவரெங்குளார்போதமின்புகுமின்
சிக்கயார்த்திவட்கொணர்மினென்றமரிடைச்சினவி
முக்கணுயகனருளாலுஞ்சாரதர்மொழிவார். ௪௯

வெற்றியானைவிட்டோடினனிந்திரன்மேதிச்
சிற்றியானைவிட்டேகினனந்தகன்றேவர்
மற்றியாவருமிரிந்தனர்வேள்விகாவலன்போ
லெற்றுபோர்செயப்புகுந்தனன்முகுந்தனேயென்றார். ௫௰

எந்தையார்பதம்பணிந்துகண்ணிடந்துசாத்தியதும்
வந்தையாவருள்புரிகெனத்திகிரிவாங்கியது
முந்தையார்திருவருளினன்மொலிபெற்றதவுஞ்
சிந்தையாலுறமறந்தனனேகொலாந்திருமால். ௫௧

யாங்குளானவன்யாங்குளானெனப்புகாவெதிர்ந்து
தாங்குநின்றுழைத்தக்கனைத்தருதியோசமர்மே
லூங்குநின்றெதிர்பொருதியோவென்னவுமுருத்து
வாங்குவெஞ்சமர்க்கெழுந்தனன்கலுழன்மேன்மாயன். ௫௨

ஒறுத்தமால்சிறுநாணொலியுருமெனவொலிப்ப
மறுத்தவில்லிடுமுகிலெனச்சரமழைவரதன்
குறித்ததேரின்மேற்காளிமேற்கூளிமேற்குறண்மேற்
பொறுத்தநந்திமேற்சண்டன்மேற்கணங்கண்மேற்பொழிந்தான். ௫௩

மாதவன்கணைகணங்கண்மேற்சொரிதலும்வாதன்
மோதுதானவர்தமித்தியர்சேனைபோன்முகுந்தா
பூதர்மாப்படைவெளிதெனநினையலைபொருபோர்
பேதுறுவெனில்வருகெனவொருசிலைபிடித்தான். ௫௪

வேறு.

பிடித்தனனமலன்சாபம்பிறந்தனபகழிக்கூற்றங்
குடித்தனசெறனராவிருவிந்தனருணபக்குன்றந்

குடித்தனவுடல்கள்சோரிசொரிந்தனகளங்கள்பாட
னடித்தனகவந்தபந்திநடுங்கினதிசைகளெங்கும். ௫௫

சேனையைத்துமிக்குஞ்சில்லித்தேர்களைச்சிதைக்குந்தேவர்
தானையைத்தொலைக்குந்தானைத்தலைவரைத்துணிக்குந்தாவி
யானையையுருட்டும்வாசியடர்த்தெழுமமலன்பாணம்
வானமுங்கடலுந்திக்கும்வரைகளும்வரையாதேகும். ௫௬

கரங்களைக்கடிந்துநீண்டகால்களைத்தடிந்தும்வீர
ருரங்களைப்பிளந்துந்தாவியுயிர்களைக்குடித்துமோதிச்
சிரங்களைத்துணித்துமூளைதெறிபடத்தகர்த்தும்வானோர்
வரங்களைப்புகுந்துகுறையாடினவரதன்வாளி. ௫௭

நீடினவிசடர்சேனைநெரிபடவுரங்கள்சீறி
யோடினவுலகர்தோறுமுலவினவொருவன்வாளி
வீடினவுலகங்கீண்டுமெய்ந்நிணம்பருகியாவி
தேடினதிசைகடோறுந்திரிவனபொருவுமாதோ. ௫௮

அமரராயுடலுண்டார்களலகையாயுடலுண்பாராய்ச்
சமருளார்படைகண்மாய்ந்துதம்பிரான்படையாய்ச்சூழக்
குமரியாணலகைக்கூட்டங்கூளிகள்குரவையார்ப்பத்
திமிலையார்களத்திற்காகப்பந்தரிற்சீர்வேட்டன்றே. ௫௯

வேறு.

நொடிக்குளண்டமுமகண்டமும்வெடிபடநொதில்போர்
முடிக்குமாயினுமுடிவிலான்விடுகொடுஞ்சரங்க
ளிடித்தெழுந்துலகெவையினுமெண்ணலராவி
குடித்துமீள்வனபரவுவார்க்கின்னருள்கொடுத்து. ௬௰

வெய்யவோர்பசுவிதிமகன்விதியுற்றான்விரவார்
கையுமெய்களும்யூபமாக்களமமர்க்களமா
செப்படுவிவாய்நெருப்புமிழ்ந்தவியுணநிரப்பி
யையன்மாப்படையனந்தமாம்பசுப்படுத்தன்றே. ௬௧

ஏறுவெஞ்சமரிமையவர்தொலைதலுமெதிர்போர்
வீறுவெஞ்சிலைமாதவன்வளைத்துவெங்கணைக
ளாறுநூறொருதொடைதொடுத்தனனதையமல
னூறுநூறெனநூறினொன்றொருகணைநூறியால். ௬௨

ஆயிரம்படைகாந்தமால்விடுத்தலுமனகன்
பாயிரும்படைகாந்தநேரொருகணைபணித்தான்
மாயவன்பதினாயிரங்கணையிரண்மலைந்தான்
றூயவன்கணையாயிரங்கதிரொனத்துரந்தான். ௬௩

மாரிவிற்சரமாரிபெய்தனன்மழைவண்ணன்
மூரிவிற்சரங்குறையின்விடுத்தவைமுருக்கிப்
பாரிடத்தவன்முராரிதேர்ப்பரியினைப்படுத்துத்
தேரிடத்தவன்பாரிடத்தவனெனச்செய்தான். ௬௪

சேமத்தேர்மிசைக்குதித்தனனெதிர்த்தனன்றிருமால்
வாமத்தானையின்வலம்படுகணைகளான்மலைந்தான்
சோமத்தாரவன்சரமொருதொடையினூற்றளவத்
தாமத்தான்விடுகணையொடுசிலையையுந்தடிந்தான். ௬௫

புதையவெஞ்சரஞ்சிலையொடுதலைதலும்புழுங்கி
விதையமண்டுறத்தண்டமொன்றெடுத்தரியிறைமே
லுதையமால்வரைக்குதாதிமால்வரையெனவுய்த்தான்
கதையிறுற்றதையிலையெனக்கடிந்தனன்கடவுள். ௬௬

குல்லைமாலினித்திகிரியேபடையெனக்குறியா
வெல்லையண்டமும்புயமுழகடுக்குறவெடுத்து
வல்லையேவினித்தாங்கெனவவியிலுல்விடுத்தா
ளெல்லைவானவரார்த்தனர்சாரதருலைந்தார். ௬௭

சேமியம்படைநேமிமால்விடுத்தலுநெரிக்து
பூமியர்தரநெருப்பெழக்கொதித்தெழும்போதின்
மீமிசைத்தவுங்காரமொன்றிசைத்தனன்விமலன்
காமியர்தனைப்பக்குவன்மடுப்பதுகடுப்ப. ௬௮

அலைகள்வற்றுறக்குடித்தழுவலசுமுமதிர்த்து
மலைகளைப்பொடித்தெதிர்வருதகிரிமாப்படையை
மிலைதரப்புயப்பொருப்பின்மேலேற்றனன்வீரன்
றலைவர்போற்றலைமாலையிற்கடைமணிதயங்க. ௬௯

சண்டநேமிபோய்வாள்கொடுகுரைகடற்சயனன்
கொண்டன்மின்னெடுவருதல்போல்வருதலுக்குமுதி-
டண்டமெண்டிசைவெடிபடவார்த்தனனையன்
விண்டுவாய்வெரீஇயுருமொலிக்கரவெனவீழ்ந்தான. ௭௰

வீழ்ந்தவன்றனைத்தடிந்திலனருளிலுல்விடுத்தா
ளூழ்ந்தகண்கடலாண்புகுந்தொளித்தனனவறுஞ்
சூழ்ந்தநின்குரலிடித்தலுந்தடித்தவிழ்ந்தனனே
போழந்திடும்படைதொடுத்திடலாற்றுமோபுவனம். ௭௧

சண்டனூர்திருசக்தியுர்தவிமணிமாறு
பண்டுமேதிமேற்சண்டனைத்தனதனைமடுத்துக்
கண்டகால்கனல்வருணனைதிருநியைக்கடைநாட்
கொண்டலாமெனவாய்வழிகறைபுகக்குமைத்தார். ௭௨

ஒருவனைச்சிவபரமனைக்கருதலாவுதைய
னொருவனைத்தனிவிழிகுடைறத்தனர்மதியுருவா
மொருவனைத்தலைநிலத்தொடுதேய்த்தனருகைக்கு
மொருவனைக்கரங்களைந்தனர்நாவையுமொறுத்தார். எ௩

குடர்சரிந்தனர்தாள்குறைந்தனர்கரங்குறைந்தார்
முடிசிதைந்தனர்விண்ணவர்விஞ்சையர்முதலோர்
படுகளந்தனிற்கிடந்தனருடல்பதைபதைத்தா
ருடையநாதனையிகழ்ந்தவர்யாவரோயுய்வார். எ௪

கணையுங்குந்தமுஞ்சுரிகையுங்கயலினங்கடுப்ப
விணையில்குஞ்சரமிடங்கர்மாவெனவெடுத்தேகித்
திணைநெடுங்களக்குருதியாறுயர்பிணத்திரளா
மணைகடந்துதேர்க்கலிங்குமுன்சுழிந்துபாய்ந்ததுவே. எ௫

அண்டர்சேனைகடலைதலுமமர்க்களமகன்று
மண்டுசாரதரிருபுடைவலம்புரிமுழக்க
விண்டவேள்வியஞ்சாலையிற்புகுந்தனன்விமலன்
கண்டபல்வகைக்கணங்கண்மேற்புகுந்தனகணங்கள். எ௬

ஆண்கள்பற்றியபசுக்களைவிடுத்தனர்துரப்பா
ருண்கள்பற்றியவமரராமுனிவரையொறுப்பார்
சேண்குடத்தவிமுனிவர்தஞ்சிரங்கண்மேலுடைப்பார்
வீண்குவைப்படுதிரவியக்கடல்புகவிழ்ப்பார். எ௭

தீர்த்தனெம்பிரான்றனையிகழ்வேள்வியைத்தேவர்
பார்த்தகண்களைப்பறிப்பனகேட்டவர்செவியை
யோர்த்தகைகளையவிருகர்நாவினையீர்த்துக்
கூர்த்தவாளினுலரிந்தனதிரிந்தனகூளி. எ௮

வாணியிற்றிைதுண்டமுஞ்சசிவனமுலையுஞ்
சேணரம்பையரதிதிமற்றவர்குமிள்சிமிழு
நாணிரம்பவோகணணெச்சிலகழியவோடுவே
காணுமுன்பிடித்தரிந்தனள்சொரிந்தனள்காளி. எ௯

திக்கனைத்தையும்யாகதண்டத்தமர்செலுத்தி
யிக்கனைத்தவர்பணிசெயமுனிவரோத்தெடுப்ப
முக்கனைத்தழன்முருக்கெனப்பூத்துமுன்னிருந்த
தக்கனைச்சிகைபிடித்துவாள்பிடித்தனன்றலைவன். அ௰

மக்கடாரமுமுலைகண்மூக்கிழந்தமைமதியாய்
திக்கடாமல்விட்டோடியதேவராத்திருப்பாய்
மிக்கடாவினைவிடிந்ததோமுடிந்ததோவேள்வி
யக்கடாவுனக்கெளியனோமழுப்படையமலன். அ௧

வேறு.

சிற்பராபரைமகளாச்சிவபெருமான்மருகாக
முற்பராய்த்தவம்புரிந்தமுறைமையாலுலகாண்டாய்
தற்பராபரனைமறத்திகழ்ந்தனைவித்தாய்பாவி
யற்பரானவர்முடிமேற்றங்குமோவபிடேகம். அ௨

உன்னையின்றெடுத்தவனேயுயர்மவுலிதேடவவன்
றன்னையின்றெடுத்தவனேதாட்கமலந்தேடநின்ற
வென்னையின்றெடுத்தபிரான்றன்னைமறத்தாலிகழ்ந்த
சொன்னவாய்சிரத்தினொடுந்துணிக்கின்றேனெனத்துணித்தான். அ௩

எச்சாயத்தவருமிடைந்தமாய்ந்தனர்போத
னெச்சனுஞ்சிரவிதியுமினமப்பொழுதில்வீடினு
னச்சாமல்லதில்லையெனவிரலையாலெழுந்த
வெச்சனுமவன்றலையும்வாளிருவுறவெறிந்தான். அ௪

மந்திரத்தின்முறையறியார்பூசைபோன்மகவேள்வி
யிந்திரற்குமிமையோர்க்குமுடியாமலிருந்தாற்
சிந்துரத்தமொடுதக்கன்சிரமறத்தாகுதிபுரிந்த
தந்திரத்தினொடுமுடித்தானொருகணத்திற்சகாரதன். அ௫

அமராரகவேமகத்திடையவியுணப்புகுந்தா
ரமராரகவேகளத்திடையவியுண்டாரதனாற்
றமரவாரிதிவிடமுண்டதம்பிராற்பரவுந்
றமராதவர்கிளைத்தவாமுடிப்பரோசகமேல். அ௬

உரமழிப்பவனையபோர்வீரனென்னலைக்
ககமழித்திடப்பொருதபோய்க்கணத்தொடுகயிலை
யிகன்மழுப்படையெம்பிராற்றொழுவவனிந்தான்
மகமழித்ததோர்நாமமுமழிவிலாவரமும். அ௭

என்றுவீரனார்திபல்கணமுமாராதனுங்
கன்றுநம்புடைபரவீற்றிருந்தருள்கயிலைப்
பன்னவன்றனைப்பணிந்தனனெழுந்தனன்பகர்வா
னென்னல்பாகமுமாகமும்பிரிகலாவணக்கு. அ௮

வேறு.

எவரும்பரவுநின்னையெண்ணலாதிருந்ததக்கன்
பாவையென்றென்னைக்கூறும்பரிபவமொழிப்பாயென்ற
தேவிநின்றனைப்பாரதன்றிருவுளமகிழ்ந்தம்பா
லாவல்சேரிமவான்செல்வியாகெனவருளிற்போந்தாள். அ௯

சிறந்தநான்முகத்தோன்போற்றிச்செகங்களின்குறைபாடோதி
யிறந்தவருமினமீட்பாயெம்பிரானருள்பெற்றேமி

யறுங்கைகால்சிரங்களாதியவையவம்பொருத்துமேல்வை
யுறங்கினர்விழித்தாலென்னவெழுந்தனரும்பரெல்லாம். கய

அத்தலையூபந்தோறுமவரவர்முடிபெற்றுய்ந்தார்
மெய்த்தலையூபத்தூடுங்கணத்தலைபறிபோய்த்தக்கன்
மைத்தலையூபமேவிவானவர்தலைமைதீர்ந்தான்
மெய்த்தலைவிதியேவந்துவிலக்கினும்வினைவிடாதால். ககக

யாகத்தின்வினையாய்த்தக்கனெடுத்தநல்வினையேயென்றுஞ்
சோகத்தீவினையாய்வந்துசூழ்ந்திடத்துயரிலாழ்ந்தான்
மேகப்பூங்குழலோர்பாகனருளன்றிவினைகளாலே
பாகத்தினுயிர்கட்கெல்லாம்பயனறிந்தூட்டற்பாற்றே. ககஉ

சிவநெறியோர்க்குமோராச்சிறுவிதிசெயலின்மாய்வுங்
குவவுறுதிண்டோள்வீரன்கொற்றமுமுரைத்தாம்பின்னர்த்
தவநெறியில்லான்வேள்விச்சாலைபுக்குழன்றவானோ
ரவநெறியடைந்துபாவமடைந்தமைதுடர்ந்துசொல்வாம். ககஙு

யசு—வது தக்கன்வேள்வியழிந்தசருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்—ஆஙசயக.

---

## யஙு-வது-தேவர்கள்சிவத்துரோகமடைந்தசருக்கம்.

மோலியிற்பிறைவைத்தாரைமுறையிலாதிகழ்ந்ததக்கன்
சாலையிற்புகுந்துவேள்விசமைத்ததீவினையினாலே
மேலையிலிமையோர்தம்மைவெண்மதிவிரவிலாத
மாலையிலிருள்போல்வந்துவளைந்ததுசிவத்துரோகம். க

தளர்மதிமுடித்தார்சேயர்தவிர்தலாலமரர்பாவக்
களர்நிலத்திடைக்காலாழ்ந்தகயக்குழாமென்னத்தாழ்ந்தார்
கிளர்சமத்தஞ்சியோடிக்கீழ்ப்படுமவுணராங்கு
வளர்நரிக்கணம்பொற்றாக்கவளமெலாங்கவர்ந்தார்மன்னே. உ

பல்லவமுயிர்க்கும்பாரிசாதமும்பசும்பொன்னாடுஞ்
செல்வமுஞ்சுரபிசிந்தாமணிகளுந்தெய்வமாதர்
நல்லெழிற்புணர்வுநீங்கிநல்குரவடைந்தார்கல்லாப்
புல்லர்தம்மருங்கிற்சேர்ந்தபுலவர்போற்புலவரெல்லாம். ௩

கவிகையுமரசும்வாழ்வுங்கடவுள்வாரணமுஞ்செம்பொற்
சிவிகையுமிழந்துகாலாலுழந்தனன்றேவர்வேந்த
னவியமுமறியுமேந்துநம்பனைநம்பார்க்கென்றும்
புவிதனிற்பிலத்தில்வானப்பரப்பினிற்புகல்வேறுண்டோ. ௪

இந்திரபதத்தைநீத்தவிந்திரன்முதலோரெல்லா
மந்திரக்கிழவர்சூழமதிநெறிமுறையிற்சூழ்ந்த

தந்திரக்கிளைகளுவான்சதுமுகத்தவனேயென்று
சுந்தரப்பதுமத்தண்ணறுள்ளகர்நோக்கிச்சென்றார் ௫

வேறு.

பரவையாருறணவுபோய்வாழ்வுபோய்ப்பனிரா
விரவுதாமரைக்காடுபோன்முகம்புலர்ந்திமையோர்
குரவருன்முகன்கோயிலின்றிருக்கடைகுறுகிப்
புரவிபூண்டதேரிரவிமுன்கமலமேபோன்றார். ௬

நாலிரண்டெட்கமலமுமதிமுகநான்கு
மேலிரண்டிரண்டருமறைவிரிக்குநாத்தடமும்
பாலிரண்டிருநாலிருதடம்புயப்பணைப்பு
நூலிரண்டையுமகம்புறந்தரித்தநூன்மார்பும். ௭

மீதிலங்குநான்மகுடகோடிகள்வெயில்விரிப்புங்
காதிலங்கியகுண்டலமொளிவிடுகெதிர்ப்பும்
போதிலங்கியகரங்களுங்கமண்டலப்பொலிவுந்
தாதிலங்கியதாமரைத்தர்மமுந்தயங்க. ௮

நாவின்மாடத்துறைவிரிஞ்சனிடத்துத்
தேவிபாரதிமகிழ்வொடுசிறந்தவீற்றிருப்ப
வாவிபேதகமனந்தகோடிகளுமங்குறிப்பத்
தாவில்வேதமுமந்தமுங்கலைகளுந்தவிர்ப்ப, ௯

மடன்முறுக்கவிழ்°வனருகமண்டபாரப்பட்
சுடர்விராக்கெனவுறைதருசுருதிவானவனைக்
கடல்கொழித்தனகருணையங்கடவுளைக்கண்டா
ரிடர்தவிர்த்தனமினியெனவிறைஞ்சினரிமையோர். ௰

வானமாதியாறுயிர்க்குடல்கரணங்கள்வயக்கி
யேனபோகமும்புவனமும்வினைவழியிசைத்து
மேனகாலமுங்கருமமுமுறைபெறவிதிக்குந்
தானபஞ்சயாச்சிரமனேபரமனேசரணம். ௰௧

வானநாதனேமண்பொருத்தந்தையேமறைதேர்
கானவேதியர்களைகணேகருதுவார்கனியே
ஞானபாரநிரண்பனேநாற்பெருங்கோவிற்
பாறுவாயொளிர்பகவனேசரணெனப்பணிந்தார். ௰௨

எந்தையேயெனவிறைஞ்சுவார்க்கெதிர்முகங்கொடுத்து
நொந்தவானவரொழுமெனத்திசைமுகனுக்கு
வந்தகாரணம்யாதெனப்பவளவாய்மலர்ந்தா
னந்தராதிபன்பரவிவாய்புதைத்துநின்றறைவான். ௰௩

° வனருகம்—தாமரை.

சேமமாநிதித்திறைகொண்டுவந்தெமைப்பரவு
நாமவாளுடைத்தானவர்க்குடைதந்துநலிந்தோங்
காமதேனுவுங்கற்பகக்கானமுமிழந்தோஞ்
சோமசூரியர்வழங்கிடாத்திசைதொறுஞ்சுழன்றோம். ௰௪

வாலமாநதிவைகறையாடலுமறந்தோந்
தானபானமுஞ்சந்தியுநியதியுந்தவிர்ந்தோம்
பீனமார்தனத்தரம்பையர்முயக்கமும்பிரிந்தோங்
கானமாமலையுறுதிபோய்வறிதுநாட்கழித்தோம். ௰௫

வசைக்கலம்புனையவுணராஞ்சுறவினமடுப்ப
விசைக்கலங்கவிழ்வணிகர்போலிடர்க்கடல்வீழ்ந்தோ
நசைக்கலந்தனநறுஞ்சுவைக்கலந்தனநல்யா
ழிசைக்கலந்தனமெமக்கிதுபுகுந்தனவென்றார். ௰௬

மிக்கநான்முகன்விளம்புவானென்மகம்விலக்கித்
தக்கனுனவனல்லதற்கோமகஞ்சமைந்தா
னுக்கபேரவியுருத்திரபாகமுமொழித்தான்
முக்கணாயகன்றன்னையுமிகழ்ந்தனன்முடிவால். ௰௭

தகவின்மக்களையழைத்தனனழைத்திலன்சதியை
யகிலமுற்றவுமீன்றருளன்னையென்றுணரான்
வகையுணர்த்தவுமுணர்ந்திலன்மதத்தினாலழிந்தான்
புகலினுங்கெடுமதிகள்கண்டோற்றுமோபுலவீர். ௰௮

அறிவிலானவனப்படியாருகவானுற்
பொறியிலீருங்கள்புத்தியும்வெறுவிதாய்ப்போமோ
வெறிமழுப்படையிறைவனையாவரோனிகழ்ந்த
நெறியில்யாவருசிறப்பரோநீவிரோநின்றீர். ௰௯

ஆதியார்விடமுண்டதாலமராராயமர்ந்தீர்
காதிமுப்புரம்வென்றதாற்கனகநாட்டுறைந்தீர்
மாதுபாகர்செய்நன்றியைமறத்தலின்மகத்தா
லோதுநல்வினைதிவினையானதாலுமக்கே. ௨௰

நந்திநாயகன்முகுந்தனைப்படைப்பாலவன்ற
னுந்திமாமலர்மிசையவனருளினாலுதித்தே
னந்தநான்முதலீன்றுகாத்திருந்தனமதனா
லெந்தையாரலாலெமக்குமோர்களைகண்வேறுண்டோ. ௨௧

அனந்தசாமியும்யானுமேத்தமலைனையரவம்
புனைந்தவேணியெம்புனிதனைப்பொருளெனப்போற்றீர்
மனங்கொண்மாமறையோதியுஞ்சுவர்க்கமேல்வதிந்துங்
கனங்கொண்மெய்ந்நெறிகடந்தனிர்நவையுறக்கடவீர். ௨௨

பாவமேதரும்பழிதரும்பகைவராற்படுக்குந்
தாவசோபமேயிலைத்திடுங்குலத்தையுந்தாழ்க்கு
மாவதாம்பொருளழித்திடுநரகிடையழுத்துந்
தேவராதியும்விடுத்திடுமோசிவத்துரோகம். ௨௩

கறையணிந்திடுங்கண்டனைப்பழித்திடுங்கயவோ
ரிறைச்சிவாகமஞ்சிவபுராணங்களையிகழ்வோர்
முறைமையன்பரையன்பர்வேடங்களைமுனிவோர்
மிறைசெய்கும்பிபாகக்கொடுநரகிடைவீழ்வார். ௨௪

எழுந்திடாநரகழுந்தியுமியமரண்டத்தின்
கழுந்திறலடியுண்டுமேகற்பங்கள்கழிவார்
செழும்புனற்சடையெம்பிரான்சிவநெறியகன்று
பழங்கணெய்திடப்பரமரம்புகுந்தபாதகரே. ௨௫

ஆகையாலுமைச்சிவத்துரோகம்பிடித்தலைப்ப
யாகைதனைவர்க்கியந்தமாசுணப்படங்கிழிக்குந்
தோகைகோம்பிபாற்சுழல்வதொத்திடுதலோரு
போகயாலமுதலெந்தையாலியற்றவும்போமோ. ௨௬

வேறு.

வேதநெறிக்கடங்காதபாவமியான்போக்குவனென்விதியிற்றீராப்
பேதமுறுபாவமெல்லாமாலொழிப்பனவனாலும்பிரியாப்பாவந்
தாதவிழ்கொன்றைச்சடையான்போக்குவிப்பனவனருளாற்றவிராப்பாவஞ்
சேதனர்தம்மாலுமெம்மாலுமெவனாலுந்தீர்க்கொணாதால். ௨௭

நாதகோகத்திபிரமகத்திதிரிகத்தியொன்றென்றேற்றஞ்
சாரதகுருத்துரோகஞ்சனத்துரோகஞ்சாமித்துரோக
மோரகவொன்றிலொன்றுநூறுமடங்கதிகமிவைக்குமேனூர்
தீதநீதசிவநெறியிற்பிழைத்தவர்தஞ்சிவத்துரோகம். ௨௮

என்றதிகைமுதலுரைத்துநின்றமுறையிடுவாரேனோர்க்கிரங்கிப்பின்றுந்
தோன்றுசோலிலாண்டத்துள்ளசிவாலயங்களெல்லாந்தொழுவிராமி
லன்றபோருமதவினையல்லதெனில்லைகானுண்டவைகளுண்டு
கொன்றசெபத்திருமெனத்தொகையுணர்த்திவனைவினவவுணர்த்துகின்றான். ௨௯

வேறு.

பூதலமேலோசனையோரிலக்கம்பாலுப்புதமதியோரிலக்கமுடுமேலொன்றுகு
ருமறைபுகர்செவ்வாய்பொன்சவுரிதானமேன்மேலவிவ்விரண்டாம்விளங்கித்தோ
ன்று,மாதிமுனிவோரெழுவர்தானமேலொன்றப்புறமோரிலக்கமென்பர்.துருவதா
ன,மேநிலியிருந்துபுவலோகக்காறம்விலக்கரியதொகைமூவைந்திலக்கமாமால்
சுவலோகமிலக்கமெண்பத்தைந்துமேலசொல்லரியமகலோகமிரண்டுகோடி
சனமேவுசனலோகமிருநாறுகோடிநண்ணுதவலோகமும்பன்னிரண்டுகோடி
நிலைமேற்சத்தியலோகமீரெண்கோடியெம்பதமுக்கோடியரியதமுக்கோடி
வெலோகநாற்கோடியீத்திகோடிசெப்புதொகையுளக்கிலம்பான்கோடிபார்மேல்

பூதலத்தின்கனமிலக்கமெண்பானுகும்புயங்கமேட்டுஞ்சேடனுமெண்களிறுங்கிழா
ய், மாதலத்தைத்தாங்கிநிற்குமதன்கீழ்க்கோடிமற்றிருபானிலக்கமாடகர்தங்கோ
யின், மேதகுப்பன்னகரரக்கரவுணர்சூழ்வோர்விடுத்ததலமுதலேழுமேழொன்பானு
ஞ்,சோதிபெறுகூர்மாண்டர்பதங்கீழொன்பான்றெண்ணூற்றொன்பானிலக்கமதன்
கீழ்க்கும்பி. ௩௨

இருளிலமுமெழுநான்குகோடியாகுமிலக்கமிருபத்தொன்பான்கீழதாக, வொருக
மடமிருக்குமிடமொருகோடிக்கீழுயங்குநெடும்புகைப்படலமைந்துகோடி, மருவு
றுமக்கினிச்சுவாலைபதின்கொடிக்கீழ்வயங்குகாலாக்கினியின்வரதர்கோயில், பெரு
குபித்திகோடியதன்கனமோர்கோடி பெரும்புவிக்கீழுலகமைம்பான்கோடியாமா
ல். ௩௩

வேறு.

ஏோவலையநடுமுதலாநாவலொடுதேக்குக்குசைகவுஞ்சமிலவிறலிபுட்கரமேயாகப்
பாவலவர்புகழ்தீவுமேழாகுமுப்புப்பாறயிர்நெய்கரும்புமதுநீர்க்கடலேழாகு
நாவலர்தீவோரிலக்கமிரட்டிமேன்மேலுநாலையுப்புமுதலேழுமன்னவேயாகு[யே
மேவுதிரைக்கடலேழுந் தீபமோரேழு மிருகோடியைம்பதிலுன் னிலக்கம்யோசனை

சூழ்கனகபூமிபதின்கோடியப்பாற்சுடர்த்திகிரிவரையதனைச்சூழாநிற்கும் [க்கம்
வாழ்வரையின்பெருங்கனமோரயுதமாகும்வளைந்தபுறக்கடல்கோடியிருபத்தேழில
பாழிருண்டபூமிமுப்பானைந்துகோடிபத்தொன்பானிலக்கமுடனயுதநான்கா [டி.
மாழ்க்கனபித்திகையோர்கோடியாகு மருவரைக்குநிலந்திசைதோறைம்பான்கோ

வாசனையைம்பதுகோடிதிசைதோறுன்மகிதலஞ்சூழ்ந்தாலயங்கள்வணங்குவீரோ
யோசனையைம்பதுகோடிவான்மேலேறியுயர்விடையார்பதம்பரவித்திர்க்கின்றீரோ
தேசனையைம்பதுகோடியிறங்கிக்கீழ்போய்ச் செறிந்தபாதலங்கடந்துகாண்கின்றீ
ரோ, வீசனையெங்ஙனந்தொருபாற்றவஞ்செய்வீரோவிவைநான்கிலுமதுகருத்தியம
பிரொன்றன். ௩௬

மேலானசிவபதத்தினுயர்ச்சிதானுமேதினியெண்டிசைபரந்தவிரிவுங்கீழமைப்
பாலானபாதலமூநாகின்வீறும்படர்புகையுங்கனற்சிகையும்பரிந்துதாவிக்
காலாங்கியுருத்திரரைக்காணுமாறுங்கருத்திலுன்னிநடுநடுங்கிக்கரங்கள்கூப்பி
நாலானதிசைமுகத்துக்கமலத்தேவைநனிதொழுதுபுத்தேளிர்நவில்வதானுர். ௩௭

முன்னமேவீரன்வலிக்குடைந்துபோனேமுழுதுமேசிவபதத்துமுயன்றுசென்று
லின்னமேசிவகணத்தார்பொறுப்பரோனுமிகலும்வயிரவர்சூலத்திடையமாட்டேம்
பின்னர்மேற்புவனிவலம்புரிதலாற்றேம்பிலத்திறங்கியுருத்திரரைக்காணமாட்டேந்
தன்னமேதனியிருந்தசிவபிரானைத்தவம்புரிந்துகாணும்வகைசாற்றுயென்றுர். ௩௮

வேறு.

வானவருரைப்பச்செந்தாமரைமலர்த்தவிசின்மேவு
ஞானநான்முகத்தோன்சொல்வானறவம்புரியுந்தானம்

பேணமாப்புணரிசூழ்ந்தபெரியபூதலமேயாகு
மானதோர்திகிரிவேர்பினசமலர்ப்புறமுமாகா. ௩௯

மற்றையேழ்தீவின்வேந்தர்மருமகன்விரதனென்பான்
பெற்றசீரக்கிநீரன்பெரியமேதாதிபுட்டு
வுற்றசீர்ச்சோதிட்டென்பானுயர்தருதுதிமான்மற்று
மற்றமில்சிறப்பின்மிக்கவார்வலிச்சவனன்மன்னே. ௪௰

அவிருஞ்சம்புத்தீவிலக்கிநீரனுக்குமைந்தர்
புவிபுகழ்பாரதன்கிம்புருடனேயரியேகேதுத்
தவறில்பத்திராச்சுவத்தன்றனியிளாவிரதன்மேலு
சவிரமியனேபொன்னன்குருவிவர்களவகண்டத்தோர். ௪௧

விறசேர்சம்புத்தீபாவேறவிளங்குமேருக்
கூறாற்றிசையுஞ்சூழக்குலவுநாற்குன்றமப்பான்
மாதிரைத்தென்பான்மூன்றுவடதிசைமூன்றுமேல்பா
லாதிலாவொன்றுகீழ்பாலொன்றசூழ்குன்றமெட்டாம். ௪௨

ஈரொன்றுபிரமேமேரும்பக்கமுமென்பாலுங்கு
மேருமேலுயரம்பாதிமிக்குளவவைகட்காகுஞ்
சேருமெண்கிரிச்சாரொட்டுஞ்செம்பொன்மால்வரையின்சுற்றுஞ்
சாருமேகண்டமொன்பானவ்வகைசாற்றக்கேண்மின். ௪௩

வடகடல்சிருங்காப்பன்வளர்குருவருடமிப்பா
லிடமியசுவேதங்காறுயிரமியவருடமேனைத்
தடவரைநீலங்காறற்றனியிரணியமாங்கண்டஞ்
சுடர்வரைமேருச்சூழ்ந்ததிளாவிரதப்பேர்சொல்லும். ௪௪

கந்தமாதனமேமேல்பாற்கடலிடைக்கேதுமாலம்
வந்தபத்திரியேழ்பால்வாரிமாலியவான்மட்டு
மந்தமாகிடத்தென்பாலரிகண்டமேமகூடத்
தந்தியதென்பாலருமுயர்கதகிம்புருடகண்டம். ௪௫

பனிவரைசேறாரப்பட்பாரதகண்டமாகு
நனிதருமிவையொன்பானினன்றுபத்திரியேகேது
வினியமுப்பதிற்றாலாயிரமென்பரேனையாறு
மினையயோசனைகளொன்பானுயிராப்பண்மற்றே. ௪௬

தருமமேதருமபாவந்தவிலாப்பாவமூன்றுங்
கருமபூமியிற்செய்வோர்கள்கதிதருசுவர்க்கம்பூமி
யிருணிலமூன்றும்போகமெய்தவரிவைகண்மூன்றிற்
பொருவருஞ்சுவர்க்கசேடம்பொசிப்பதுபோகபூமி. ௪௭

ஓதியபாரதகண்டமுழவுவாணிபங்கள்வித்தை
காதல்சேர்வரைவுசிற்பக்கருமத்தாற்கருமபூமி

பீறுறைபவர்க்குநெல்லூண்மேனியுமுழநாலெட்டுக
கோதறுபருவநானூறுகந்தொறுங்குறையாநிற்கும். ௪௮

கருமசேடங்களுண்பார்கதிகண்மேல்விழைவார்க்கெல்லாந்
தருமமுந்தவமுஞ்செய்யத்தக்கதுகருமபூமி
புரிதவமனேகக்காலம்போகபூமியிற்செய்வார்க்கு
வருபலன்கருமபூமிவளமொருதினத்தேநல்கும். ௪௯

வேறு.

ஒண்டொடியோர்பாகனிடமுரைப்பினண்டத்துச்சியுருத்திரர்கோயிலதன்மேற்கு
மண்டர்பிரான்சிவலோகமண்டமூலத்தமர்வதுகாலாக்கியுருத்திரர்தங்கோயின்
மண்டுமாடகர்கோயிலதன்மேலாகமகிதலத்தினிருசோடிகீழாமன்றும்
விண்டநடுக்குடதிசையின்கீழ்பாலாகுமேருமேகலைமூன்றில்விமலன்கோயில்- ௫௰
வேறு-
பொன்மலையுத்தரத்திலண்டச்சுவரணவும்வடகயிலைப்பொருப்புங்கோடும்
பன்மதிலுமளப்பரியவுருத்திரர்நாராயணரும்பதுமத்தோருங்
கொனமலிவேற்கந்தர்கணபதிகள்சாரதர்சாத்தர்குழுவினர்ப்பு
நின்மலசதாசிவமுந்தெய்வதக்குழாமுமெம்மானிசழ்த்தொணுதால்- ௫௧

பொன்னிமையமால்வரைக்குவடமேல்பான்மந்தரத்தின்புடைசேர்தென்பாற்
கன்னிநெடுங்கயிலைவரைகற்பகோடிகள்கடந்துககனந்தாவிச்
சென்னிமதியாறணிந்ததேவனையன்றிமற்றத்தேவரொல்லா
நன்னிலைவிட்டிறப்பதுவும்பிறப்பதுவுங்கண்டுகண்டுநகையாநிற்கும்- ௫௨
வேறு-
துங்கவடகயிலாயமுதலாவைந்து துளுவொன்றுதொண்டைவளநாட்டெண்ணான்
கு, தங்குநடுநாட்டிருபத்திரண்டுபொன்னித்தலநூற்றுத்தொண்ணூறுமலைநாட்
டொன்று, கொங்கேழுசிங்களத்திலிரண்டுவைகைக்காழிதமிழ்நாட்டீரேழுமுத
லாஞ்சூலச், செங்கையார்தலமிருநூற்றெழுபானுன்கிற்றெச்சணபாற்கயிலாயந்
திருக்குற்றாலம்- ௫௩

அம்புவியிலித்தகையாலுரைத்தவெல்லாமாதிதலம்பிறதலங்களனந்தமாகுஞ்
சம்புநிலப்பரதகண்டமடநல்லாட்குத்தாணீட்டுவடதிசைதென்றிசையேசென்னி
நம்புசீர்ப்பருப்பதஞ்சேதாரங்கொங்கைகளிணைவயற்றமிழ்நாடுவதனமாகக்
கொம்பலர்சூழ்செண்பகாரணியஞ்சூழ்ந்தகுற்றாலபீடகத்தானமாமால். ௫௪

புவனநெடும்பரப்பெல்லாந்திணையயர்ந்தாகப்பொன்னிமையகிரிவடபானுன்குபோ
கக், கவனவரையிமையமுதற்கன்னிகாறங்கண்டபெருநிலமுழுதுங்கழனியாகுஞ்
சிவனுறைசேதாரமுதற்கருப்பந்தோட்டஞ்செவ்விவளநீர்நாடுசென்னற்சாறு. ௫௰
ஊவயற்றமிழ்நாடுவிடித்தபாகுகுற்றாலஞ்சருக்கரைவட்டாகுமன்றே. ௫௫
வேறு.
தர்பரையெம்பெருமாட்டியகிலாண்டசிற்றிலெனத்தனிநின்றுடு
முற்பதியாயுயர்தானுமாலயப்பூந்தொட்டிலுக்கோர்மூலவீடாய்க்

கற்பமெனுங்கடல்கடத்துந்தோணியாய்க்குணங்குறிகள்கடந்தஞானச்
சிற்பரனவாழிடமானபரமரகசியத்தானந்திருக்குற்றாலம். ௫௬

சிறக்குமிடஞ்சிற்பரைக்கும்பரமனுக்குமூவருக்குந்தேவர்யார்க்கும்
பிறக்குமிடக்கவுரியறம்வளர்க்குமிடம்பிறந்தோர்கள்பிறவிபின்னை
மறக்குமிடம்வடவருவியெனுங்காமதேனுவளர்பால்சுரந்துகுவ்
சுறக்குமிடம்பரகதியேகாட்டுமிடந்திரிகூடக்கடவுட்டானம். ௫௭

ஆண்டுபெறினுயிரமோர்புண்ணியமாத்தலந்தருமபேறனைத்துங்காசி
கண்டுதவுமோராண்டிலயனமொவ்றிற்கேதாரங்கொடுக்குங்காஞ்சி
பூண்டுதவுமிருமதியிலொருமதியிற்பெரும்பற்றப்புலியூர்நல்குஞ்
சேண்டருமெய்ப்பயன்களெல்லாமொருநாளிற்கொடுத்தருளுந்திருக்குற்றாலம். )

வேறு.

தாய்பசிக்கத்தந்தைபசித்திருக்கக்காண்போர்தங்கள்சுற்றமனங்கொதிக்கத்தாங்க
ள்வாழ்வோர், செய்பசிக்கத்துடிக்கவிருந்துண்போர்தாரஞ்சிறையிருத்திப்பரதார
ம்விரும்பிச்செல்வோர், வாய்பதைத்துப்பிறர்குடிக்குத்தீங்குசொல்வோர்மன்றிரு
ந்தவழக்கோரஞ்சொல்வோர்பொல்லா, நாய்வளர்த்துக்கொலைபுரிவோர்பாவமெ
ல்லாநன்னகரேதவிர்க்குமெனுமிருக்குவேதம். ௫௯

அடுத்தார்க்குநன்குசெய்யாரிடுக்கண்செய்வா ந்தணனையுயிர்செகுத்தாராவைக்
கொன்றார், கொடுப்பாரையருகிருந்துதடுப்பார்கற்பின்குலமாதர்வரம்பழித்தார்கு
ருவைப்போற்றார், கெடுப்பார்க்குத்துணையாவாரறஞ்செய்வார்க்குக் கேடுசெய்வா
ர்பாவமெல்லாக்கிரிக்கோதண்ட, மெடுப்பார்க்குவளம்பதியாந்திருக்குற்றாலமிமை
ப்பொழுதிலொழிக்குமெனுமிரண்டாம்வேதம். ௬௰

அன்னமிட்டார்தமக்கிரண்டுநினைகின்றரு மடைக்கலத்தைவயிறெரியத்தொடுகின்
றாரும், பின்னமிட்டுக்கிளைக்கூட்டம்பிரிக்கின்றரும்பெரியாரைப்புறம்பழித்துப்பே
சுவாரும், என்னமிட்டுக்களவாடிக்கள்ளுண்பாருங்காமத்தாலழிவாருமெய்துபாவ
முன்னவர்க்குமுன்னவர்குற்றாலமென்றுமொழிந்தாலுந்திருமெனுமூன்றும்வேதம்

உலகிடத்துத்தொலையாதபாவமெல்லாமுயர்தருபுண்ணியதலத்துத்திரவேண்டும்
பலபலபுண்ணியதலத்துந்திராப்பாவம்பரமனுறைசிவதலங்கள்பரவத்திருந்
திலகமெனுஞ்சிவதலத்துச்சென்றூர்பாவந்திருமேதிராதுசிவத்துரோக
நலமலிசேர்த்திரிகூடத்திருக்குற்றாலன்னகரோதிர்க்குமெனுநான்காம்வேதம். ௬௨

வேறு.

இன்னபடிமறைநாலுந்துறைதோறுமுழங்குதலாலிமையோர்கீவிர்
மன்னகர்ச்செண்பகவனத்துச்சென்றுதவம்புரிந்துமதுரவைகடேர்ந்து
மின்னமதிபுனிவேணிச்சிவபிரானைதிருவருளாற்றெய்வக்காவும்
பொன்றுலகுமாம்பையர்பாற்புதுமலரும்பெறதமுற்றும்பொலிவீரென்றான். ௬௩

வினவிலுறைசதுர்முகத்தவேதியனிதுரைத்தருளவிடைகொண்டேகிக்
கனனியவாதவர்த்ததனுநகள்கூர்ந்துகளிச்சுரும்பின்கணம்போல்வாரேர்

மண்ணிமணியலைகொழிக்குங்கடல்வாவிக்குவலையமாமலர்ந்தபூமேற்
புண்ணியமாமதலூறியுவட்டெடுக்குந்திரிகூடப்பொருட்டிற்சேர்ந்தார். ௨௪

பிரமனைக்கண்டுறுதிபெறும்பேறுணர்த்தார்திரிகூடப்பிறங்கன்மேலாச்
சிரமமிசைத்தவம்புரிந்தசிவத்துரோகந்தவிர்ந்துதிங்கள்சூடும்
பரமனைச்செண்பகவனத்திற்பண்ணவனைக்கண்டுபதம்பரவிவானோர்
புரமனைத்துங்குடியேறக்களையேறுமகிமையினைப்புகறல்செய்வாம். ௨௫

௰௫-வது. தேவர்கள் சிவத்துரோகமடைந்தசருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—கூாகூ.

---

## ௰௬-வது. தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்தசருக்கம்.

வற்றுதசேனருவிவானருவிமான
நற்றலமேவுதுறையாடினிவானோர்
குற்றலமேயதிரிகூடமிசைவந்தார்
பொற்றலமேல்விளைவுபுந்தியிலொழிந்தார். ௧

விண்பகவுயுர்ந்தகிரிமேவுசிலையெல்லா
மெண்பகரிலிங்கவடியென்றகிசெயித்தார்
செண்பகவனத்ததிசெயத்தையெதிர்கண்டார்
வண்பசல்செய்கற்பகவனத்தையுமயர்த்தார். ௨

கானவர்சுளைனல்விளைகானிலெதிர்மேவித்
தானவரையீறுபுரிசாரதரையெய்தி
ஞானவரையோகியர்கணண்ணுதுகைநண்ணி
யேனவர்கண்மாதவமியற்றுமிடைசென்றார். ௩

வேறு.

சந்தகில்குரவவேலிச்சண்பகச்சோலைசார்ந்து
புந்தியின்மகிழ்ச்சிகூர்ந்துபொன்னகரமரர்முன்னு
ளந்தமார்தக்கன்வேள்வியழலினுற்காயந்தமேனி
மந்தமாருதத்தினாலேவரவரக்குளிர்ந்தார்மன்னோ. ௪

பாளையஞ்சடைகள்பின்னிப்பழுப்பிலைக்காவிதாங்கி
நீளவுமொருதாணினாறுமெய்யரிச்சீரைசாத்தித்
தாளினீர்சிரத்திலேற்றுத்தவதசர்யோகியர்கள்போலு
நாளிகேரங்கள்கண்டார்நலம்பெறமகிழ்ச்சிகொண்டார். ௫

கன்னியம்பசியபாளைகமழ்தருபருவத்தெங்கின்
மன்னியகுரும்பைகாய்த்துமழைமுகில்பொதிந்ததோற்ற
மன்னியவுலகிற்றெய்வவடவர்வந்தாரென்று
துன்னுபார்மடவார்கொங்கைதகிலினுன்மறைத்தன்மானும். ௬

பண்ணியதருக்களாகப்பொலிந்தபூஞ்சோலைவேலித்
திண்ணியகதலியின்றென்றலாலசையுந்தோற்றம்
விண்ணினிலரம்பைமாதாவேட்டவர்வந்தாரென்று
மண்ணினிலரம்பையாலவட்டங்கள்சுழற்றன்மானும். ௭

தருக்கமாமலரில்வீழ்ந்தசுரும்பினைநறவமாடி
மருக்கமழ்தாதிலுலேவடிவுவேறமைந்ததோற்றந்
திருக்கிளர்தழலின்மூழ்கித்திருநாளைப்போவார்மேனு
ருருக்கிளர்சைவத்தெய்வவுருவுபெற்றெழுந்ததாமால். ௮

பன்மலர்தளிக்குந்தேறல்பைம்பொனுடனித்தேமென்னுங்
கொன்மலிதாரையன்றிக்குளிர்மழைத்தாரைபோலுஞ்
சன்மலிச்சினைகவேஞ்சண்பகமலர்கள்வானம்
பொன்மழைபொழிவதன்றேற்பூமழைபொழிவதாமால். ௯

இலைதழ்விரியுந்தோற்றமிவர்கொலோதக்கன்வேள்வி
நலனழிதகர்ந்தாரென்னாநிலவாய்திறத்தல்போலும்
புலனுறவடைந்தார்தம்மைப்புறஞ்சொலத்தகுமோவென்ன
வலருமார்தளிர்கள்கையாலமைத்தவாய்புதைத்தன்மானும். ௰

தேவர்கள்வந்தாரென்னச்செண்பகவனமாங்கன்னி
மாவடுவிழியாநோக்கிமுருக்கின்வாய்மலர்ந்துமுல்லைப்
பாவனைமுறுவல்பூத்தப்பாடல்வண்டிசையாலேத்தி
யாவல்சேர்தளிர்க்கைப்பூந்தேனருக்கியமளித்ததன்றே, ௰௧

கண்டனமார்வேந்தன்கண்களாயிரத்தின்பேறு
கொண்டனனியாமாட்டங்கொண்டபேறமைந்தார்விண்ணோர்
தண்டலைக்கமுகவேலிச்சண்பகவனச்சீர்நோக்கி
கண்டார்தங்குரவன்வாய்மையாயிரத்தொன்றேயென்றார். ௰௨

பூவின்மேல்வண்டோடாப்புதியசண்பகக்காவெங்குந்
தேவரேபூவின்மேவிச்செழுந்தவத்தேன்வண்டானார்
மூவராய்ப்பரமமூர்த்திமுத்தொழில்புரியுந்தானம்
யாவரேவலஞ்செய்யாதார்யாவரேதவஞ்செய்யாதார். ௰௩

கந்தரவருடஞ்சேர்ந்தான்கமழ்புனற்கிறைவன்வாரி
யிந்திரநறுமைச்சார்ந்தானிந்திரனெழிற்பூஞ்சோலை
மாதமாருதத்தைச்சார்ந்தான்மருத்தமாமுனிவர்வேள்விச்
சோதமுலமலைச்சார்ந்தான்செழுங்கனற்கடவுண்மாதோ. ௰௪

அந்தகன்றருமவேடமாகினனிருதியாவான்
மூதுவேட்டுருவமானன்முதுதவம்புரியுமேனைத்
தந்திரர்யாழோர்சித்தர்தவத்தர்விஞ்சையர்புத்தேளிர்
வாதகிம்புருடர்மற்றோர்வண்மையைவகுத்துச்சொல்வாம். ௰௫

மனிதராய்வடிவுகொண்டுமாக்களாய்ப்புள்ளாய்வாசப்
புனிதமார்தருக்களாயும்புயல்கெழுதிரிகூடத்து
முனிவராய்ப்புதலாய்ப்புல்லாய்முற்றும்வேற்றுருவம்பூண்டு
தனிதராய்த்தவங்கள்செய்தார்தானவர்பயத்தான்மன்னோ. ௧௬

ஆலயச்சங்கவீதியண்ணலையுன்னிவானோர்
நால்வகைச்சங்கத்தோருநளினங்கோமுகஞ்சொத்திகஞ்
சால்புசேர்வீரஞ்சிங்காசனமுத்தஞ்சுகாசனங்கள்
பீலிபத்திரமாமொன்பான்பெரியவாசனத்திருந்தும். ௧௭

ஆறுடற்பகையையோட்டியைம்புலனடக்கியாண்டு
மேறுநாற்கரணங்கட்டியியலுமுக்குற்றமாற்றி
யூறுகால்வளியிரண்டுமொருக்கியோர்வழிகடாவி
மாறிலாயோகநீராற்றவப்பயிர்வளரச்செய்வார். ௧௮

இயமமாசனந்தியானந்தாரணைபிராணாயாம
நியமமங்கியதிநீண்டபிரத்தியாகாரநிட்டை
யுயருமட்டாங்கயோகமுஞற்றியுமாறுதாரத்
தியல்பெறுபாந்தண்மூலத்தெழுப்பிமேலாடல்கண்டும். ௧௯

காய்பலதின்றுங்கானிற்கனிபலநுகர்ந்தும்வாவிப்
பாய்புனல்பருகாநின்றும்பச்சிலைகறித்துங்கல்லிற்
சாய்பலகிழங்கசித்துஞ்சருகினைப்புசித்துந்தாங்கா
வாயுபக்கணங்கள்செய்தும்வசிவறப்பசியைத்தின்றும். ௨௰

சாந்திராயணமுடித்துந்தருதிங்களுபவாசித்து
மாந்தியுமயனத்தோர்நாள்வருடத்திலோர்நாளுண்டுங்
காந்தியின்வெயில்சேர்பஞ்சக்கனலின்மத்தியிலேநின்று
நீந்துதலரிதாம்வாரிநீரிலேநிலையாநின்றும். ௨௧

கல்லெனக்கிடந்துநீரிற்கயலெனவாழ்ந்தும்பாரிற்
புல்லெனப்பொருந்தாநின்றும்புற்றெனவளர்ந்துமேனி
வில்லெனவளைந்துமாலின்வீழெனச்சடைகள்வீழ்த்துஞ்
செல்லெனக்கலங்குறுதுந்தியெனப்பயமுறுதும். ௨௨

ஊசிமேலொருகால்வைத்துமொருவிரலூன்றிக்கண்க
ணாசிகாமூலம்வைத்துநன்னிலத்தொருகையூன்றி
யாசுவாய்முடிகீழாகவடியிணைமேலாய்நின்றும்
வீசுகைசிரமேற்கொண்டும்விடாதுமெய்த்தவங்கள்செய்தார். ௨௩

அப்பரிசமரர்யாண்டிலாயிரப்பதிற்றுண்டெல்லா
மெய்ப்பெருந்தவங்கள்செய்துமெய்யெலாம்வருந்தித்தேம்பிச்
செப்பருங்கவலைகூர்ந்தார்தேவரோயாகிலம்மா
விப்பெருஞ்சிவத்துரோகம்யாவரேதொலைக்கவல்லார். ௨௪

அந்நேரமெல்லாமருந்தவம்புரிந்தமாதி
சத்தினைவிடஞ்சேர்நிலைகண்டனைத்திரிகூடத்து
நித்தனைவரவுகாணார்நின்றனர்திகைத்துவாடிச்
சித்தநைந்துலைந்தவானோர்சிந்தையில்வருந்திச்சொல்வார். ௨௫

வேறு.

உருகினேமுடலெலாமுளமெலாமறுகினேம்
விரவினேமனலிலேவெயிலிலேகருகினேம்
வருகிலாரருள்கிலார்மழுவலாருலகெலா
மருளுமோர்பரமனாருளிலாதவர்கொலோ. ௨௬

வரமெலாமுதவுமோர்வரதனார்கருதலார்
புரமெலாமெரிசெய்தேபுவியெலாநிலைசெய்தார்
பரமனார்நமதுபால்பரிகிலார்வருகிலார்
பிரமனார்மொழியுமேபிசகுமோபிசகுமோ. ௨௭

வேகமேயிடையறுவேழமேயுரிசெய்தா
ராகமேயணிசெய்தேயாதிராளருள்செய்தார்
நாகமேயணிகுவார்நாமெலாமெலியவே
யேகநாயகர்வராரேழையேம்வினையிதோ. ௨௮

செங்கைமான்மழுவினார்செண்பகாடவியினா
ரெங்குமாம்வடிவுளாரெங்குமாம்விழியுளார்
கங்கைவார்சடையினார்கண்டுமேவருகிலா
ரங்கமேபுகழ்துநாமென்றவானவரெலாம். ௨௯

வேறு.

அவரவர்கண்மனந்தோறுமறிவென்றுஞ்சுடர்துண்டப்
பவரமர்செஞ்சடைக்காட்டுப்பசுங்கனகத்தனிக்குன்றைச்
சுவரமருந்திரிகூடக்கனவரைவாழ்கற்பகத்தைத்
துவரமருநறுங்கனியைத்தோத்திரஞ்செய்தேத்தெடுத்தார். ௩௰

தேவருக்கும்பெருந்தேவேதிரிகூடப்பரஞ்சுடரே
மூவருக்குமுதற்பொருளாய்முளைத்தருளுந்தனிமுதலே
மேவருட்கண்வாரிதியேமேலானகுணக்குன்றே
யேவருக்குமுனையல்லாற்புகலுண்டோவெம்பெருமான். ௩௧

ஆயார்க்குந்தோன்றாத்தனியாவாயனைத்துயிர்க்குஞ்
சேயாவாயணித்தாவாய்செண்பகப்பூங்காவுடையாய்
தாயாவாயெமதருமைத்தந்தையாவாய்பரவார்
நோயாவாய்பணிவார்க்குநோய்தீர்க்குமருந்தாவாய். ௩௨

மண்ணுடையாய்சீருடையாய்வலியுடையாய்மருத்த
விண்ணுடையாய்சக்கரவீதியுடையாய்பாகம்

பெண்ணுடையாய்சென்னிமிசைப்பிறையுடையாய்கண்களின்மேற்
கண்ணுடையாயெங்கடுயர்காணுவாறென்னேயோ. ௩௩

நரிகூடயேடனுக்குநந்தாதபதமளித்தாய்
பரிகூடநரிபடைத்தும்பரமகாருணமூர்த்தி
யரிகூடவயனறியாவண்ணலேயிரங்காயுன்
றிரிகூடங்கண்டவர்க்குத்தீராதவினையுண்டோ. ௩௪

புகழ்வார்க்குநல்குதியோபுட்பகந்தனூர்முதலா
யிகழ்வார்க்குங்கதிகொடுத்தாயல்லையோவெங்கோமான்
றிகழ்வார்க்குவினைதீர்க்குஞ்செண்பகாடவியுடையா
யகழ்வானைத்தாங்காதநிலமுண்டோவச்சோவே. ௩௫

ஈயறியாப்பூந்தேனேயெழுத்தறியாமறைப்பொருளே
காயறியாச்செழுங்கனியேகற்பகத்தின்பசுங்கொழுந்தே
தாயறியாக்கருவிலிருந்தமுதூட்டுந்தாய்த்துணையே
நீயறியாச்செயலுண்டோநிகிலபரம்பரமூர்த்தி. ௩௬

கங்கைதனைச்சென்னிமிசைக்காதலாற்றுங்கியதும்
பங்கயப்பொற்றாள்பரவும்பகீரதனுக்காவன்றோ
சங்கையறநொந்தேமைத்தாங்கடீயோமானையொரு
செங்கைமிசைத்தாங்குந்திரிகூடத்தம்மானே. ௩௭

அன்றுநரகாசுரனையர்தகலையீடழித்துத்
துன்றமுலகெல்லார்துயர்தவிர்த்தாயல்லையோ
வின்றுநீவாராயோவேழையேமெய்துதுயர்
குன்றுந்திரைக்கடலுங்கொள்ளாதுகொள்ளாதால். ௩௮

நஞ்சம்பொறுத்தாய்நகுபாரவெண்டலையின்
வஞ்சம்பொறுத்தாய்மமுவேந்துங்கையுடையாய்
தஞ்சந்திரிகூடத்தானுவேயெங்கள்பிழை
நெஞ்சம்பொறுத்தருளனின்மேற்கடனன்றோ. ௩௯

நாராயணனுமொருநான்முகனுங்காண்பரியா
யாராவமுதேவருக்கைநிழலம்மானே
வாராயிதுசமையம்வந்தருளிநின்கணருட்
பாராயென்றும்பர்பரதபிக்குமந்நேரம். ௪0

வேறு.

குளிர்புனற்கொழுந்தும்வில்வத்தழைகளுங்கொன்றைப்போது
மிளிர்மதிப்பிஞ்சுங்காயும்விரிசடைப்பவளக்காடு
நளிர்மறைபழுத்தவாயுநாட்டங்கண்மூன்றும்வானோர்
தெளிர்தரவிடைமேல்வந்தான்சிவதிரிகூடத்தம்மான். ௪௧

வாடியபயிர்கள்கண்டமழைமுகம்போலவாடித்
தேடியவறியோர்கண்டதிரவியம்போலக்கங்கை
சூடியசனகக்குன்றைச்சித்திரச்சுருதிமன்றி
லாடியபெருமான்றன்னைக்கண்டனரமரரெல்லாம். ௪௨

கண்டனர்விழிபுனெஞ்சக்களித்தனர்களியார்தேற
லுண்டனர்திருக்குற்றாலத்தொருவனைப்பரவிவாழ்த்தி
விண்டனர்பரமானந்தவெள்ளத்துட்டிளைத்தமேவித்
தெண்டனிட்டாடிப்பாடிச்சென்னிமேற்கரங்கள்கூப்பி. ௪௩

ஒன்றாகியிரண்டுமாவாயொன்றிரண்டாவாய்மற்று
மின்றாகியென்றுமாவாயிலதுளதாவாயெல்லா
மன்றாகியனைத்துமாவாயாதியாயந்தமாவாய்
குன்றாகியறுவுமாவாய்குறும்பலாவுடையாய்போற்றி. ௪௪

படைப்பவனீயேயாவும்புரப்பவனீயேமுற்றுந்
துடைப்பவனீயேமூன்றுதொழிலன்றித்திரோபவங்க
ளடைப்பவனீயேயாவுமநுக்கிரகிப்பாய்நீயே
யுடைப்பெருந்திரிகூடத்தாயுனையல்லாலுலகமுண்டோ. ௪௫

கருவியாய்ச்செயல்களாகிக்காலமாயிடமாய்ச்செய்யும்
பொருள்களாய்ப்புரிவானாகிப்புவனகோடிகளுஞ்செய்வாய்
மருவியேகலந்துநிற்பாய்மற்றுநீயவைகளெல்லா
மொருவியேபிரிந்துநிற்பாயுன்னையாருணர்தற்பாலார். ௪௬

காணவுந்தொழவுந்தொண்டர்கருதவுந்திரிகூடத்துப்
பூணவுமுரியாய்நின்னைப்புலப்படத்தேடிக்காணச்
சேணதோநிலமதேயோசிவப்பதோகறுப்பதேயோ
வாணதோபெண்ணதோவென்றறிகிலமறைகளின்னம். ௪௭

அரும்பியபொருள்களாயல்லையுமாவாயன்பர்
தரும்பெனிற்றரும்புமாவாய்அணுவிற்றணுமாவா
யிரும்பெருமனத்தார்காணவெளியையோதிரிகூடத்துத்
திருநிறைபாகாவேகாசித்திரக்கூத்தாவென்றார். ௪௮

வேறு.

நின்றபுகழ்வானவரைத்திரிகூடப்பரன்கருணைநிறைந்துநோக்கி
யொன்றபெருமாதவமுந்தோத்திரமுமினிதுவந்தோமுமக்குவேண்டும்
வென்றிவரங்கேண்மினெனவருளுதலுமெங்களுக்கும்வேறின்றுயை
யென்றுமெழுநாவேதமன்பருக்கேயளிப்பனெனவிசைப்பதென்றே. ௪௯

முன்னுளிருவினையிகழ்ந்தசிறுவிதிதிமகத்தடைந்தமுரணலன்றோ
பன்னாளுமகிழ்தபசியிழந்தவறுமையிலுற்பவர்க்கின்றேம்யா
மன்னாளிலைத்துடர்ந்தசிவத்துரோகந்தனையின்றகற்றல்வேண்டு
மெக்காலுமெங்கள்பதம்யாங்கள்பெறவேண்டுமெனவிறைஞ்சிப்பின்னும். ௫௰

சந்துகாரகில்வேலிச்சண்பகாடவியொருநாட்டங்கினோர்க்கு
மந்தமாருதக்கொழுந்துவந்தொருகான்மெய்தீண்டப்பவரப்பெற்றோர்க்கு
மூந்துநீர்த்திரிகூடவடவருவியொருபொழுதுமூழ்கினோர்க்கு
மந்தவான்பிரயாகைமாகமாயிரந்தருபேறளித்தல்வேண்டும். ருக

என்னபாதகம்புரிந்தாரொன்றுலுமித்தலத்திலெய்துவாரே
லன்னபாதகமவராயாதவன்முன்பனிப்போல்விட்டகறல்வேண்டும்
பொன்னகரமழிந்தாலுமழியாமைவேண்டுமிவ்வூர்புலியூராதிப்
பன்னகரம்பிரியினுநீயன்னகரநீங்காமற்பதிதல்வேண்டும். ருஉ

புல்லெனினுமரமெனினுங்காய்கனியெனினுந்திரிகூடபுரத்துநீர்பாய்
நெல்லெனினுமமுதெனினுமுண்டவர்க்குங்கண்டவர்க்குநிலத்தில்வாய்ந்த
கல்லெனினுநதியெனினும்பூண்டவர்க்கும்பரகதியேகாட்டல்வேண்டு
மெல்லெனினுமிரவெனினும்யாங்கள்பணிசெயவேண்டுமென்றூர்வானோர். ருங

அவ்வரங்களைகேட்டவுமையமுதரங்கவாய்முறுவலரும்பநோக்கி
யிவ்வரங்கள்குற்றாலத்தியற்கைநமதந்தரங்கமுமக்காயிந்தச்
செவ்வரங்கள்வெளியரங்கம்பெறத்தந்தோமினிப்புலவீர்சேணடைய்நி
மெய்வரங்கள்பெறுகவென்று ◌ னெழுதரங்கமிசைநடிக்கும்விமலமூர்த்தி. ருச

அந்திப்பான்மதியணிவாரவ்வரங்களருளிவிடையருளப்போந்து
சிந்திப்பாம்பொன்னாடுஞ்செல்வமும்பெற்றனர்வானோர்சிவபிரானை
நிந்திப்பார்படும்பாடுநினைதோறுந்தக்கன்மகநினைவார்நாளும்
வந்திப்பார்பெறும்பேறுவாழ்த்துதொறுந்திரிகூடம்வாழ்த்தவாரால். ருரு

வேறு.

சிலம்புரிதிருக்குற்றாலஞ்சேர்ந்துபாதகங்கடீர்ந்த
பொலம்புரிவானோர்செய்கைபுகன்றபின்றவர்க்குச்சூதன்
சலம்புரிசிலைக்கைவேடன்சம்புவைத்துடர்ந்துமேலுள்
வலம்புரிப்பணிலவீதிவலம்புரிமகிமைசொல்வாம். ருசா

௰சு வது-தேவர்கள்சிவத்துரோகந்தீர்ந்தசருக்கமுற்றிற்று

ஆகத் திருவிருத்தம்—௬௱௬௨.

## ௰எ-வது வேடன்வலம்வந்தசருக்கம்.

தரையினுலையம்வலமுதற்றிருப்பணிசரியை
கிரிசனெம்பிரானருச்சனைபுரிவதுகிரியை
யொருமையுள்ளுறத்தியானமுற்றிருப்பதுயோகம்
பொருவிலானுடனிரண்டறக்கலப்பதுபோதம். க

அன்னநால்வகைச்செய்கையுநாற்பதமளிக்கும்
பன்னுநான்கினும்பணியணிபரமர்பொற்கோயில்
முன்னியேவலம்வருவதுசரியைபன்முறையின
மன்னுமோர்வகையன்னதவிரிக்கிலேழ்வகையாம். உ

◌ எழுதரங்கம்-சித்திரசபை

மதிமிறுட்புறம்வலம்வரல்புறம்வலம்வருதல்
விதியிறுற்காக்குவித்தன்மெய்த்தோத்திரந்தியான
மெதிர்றைஞ்சசாட்டாங்கமெய்வலமெனவேழு
மதிகமொன்றிலொன்றுயிரமடங்கெனன்மால். ௩

நகராமொருதேயாற்கண்டகற்றிப
மகரவாரிகுழ்புவனமெண்டிக்குவாறுலகம்
பகருமன்னராய்ப்புரந்தமிவ்வெழுவகைப்பணியோர்
சிகரவில்லியாருறைசிவலோகமேசேர்வார். ௪

கானவேடுவன்கொலையுக்கோமாயுவின்களவு
மானவோடியவலமொருவலமெனும்பிழையு
மேனபாவமுநீக்கியெம்பரமர்குற்றால
மோனமாக்கதிகொடுத்தவாகேண்மெனமொழிவான். ௫

காலத்தாம்பிரக்கனிகள்பர்தாடுதெண்டிரைக்கைக்
கோலத்தாம்பிரவன்னியாங்கொழிதிரைநதிபாய்
ஞாலத்தாம்பிரக்குன்றம்வாரிசர்தமிழ்சுருதி
மூலத்தாம்பிரமன்பெருந்தவக்குறுமுனிவன். ௬

போதனுல்விதியாப்பெரும்புடார்ச்சனபுரத்த
வேதநாயகர்விண்டுவாயிருத்தலான்மேவ
நாதனுர்திரிகூடமால்வரையொடுநரம்பார்
மாதராண்முலையிரண்டெனத்திரண்டதமலயம். ௭

நடக்கும்யாவரும்வடதிசைக்குழுமலான்ஞால
முடக்குநீக்கிடத்தென்றிசைத்தோன்றியமுனிவன்
குடக்குநோக்கியமதியணிவார்திரிகூடம்
வடக்குநோக்கிமெய்த்தவம்புரிதமிழ்மலைமலையம். ௮

இர்தமால்வரைச்சாரலின்சிறுகுடியிருக்கும்
விர்தைவார்சிலைவீரனும்வேடுவன்றனக்கு
மைர்தனும்வலனென்பவன்கொலைத்தொழில்வலியாற்
சர்தருடலிச்சற்பமாமெனத்தலையெடுத்தான். ௯

வேறு.

செருப்புக்கானமுந்தேய்த்ததிண்காலினன்
பொருப்பினேங்கிவளர்ந்தபுயத்தினு
னெருப்பினிர்பெய்நிறத்தினன்செங்கட்டாய்
மருப்புமானமுறுக்கும்வன்மீசையான், ௰

வையமுங்கொடும்பாவமும்வஞ்சமும்
பொய்யுமோருருக்கொண்டனபுன்மையான்
வெய்யதுறணத்தர்தங்கண்மேவியுங்
கையுங்காலுமொப்பத்தன்னவடியான். ௰௧

முயலுமான்களுமுரிக்கலைகளுங்
கயலுஞ்சேல்களுங்கானமுஞ்சேனமுங்
குயிலும்வீட்டுங்கொலைத்தொழிலோடை
பயிலுங்காலத்தின்முன்பயில்பான்மையான் ௰௨

தோயும்வாடையெடுத்துச்சுவடுபோய்
நாயுநாணநடக்குந்தடத்தினன்
காயுஞ்சிந்தைக்குளிரிக்கள்ளத்தான்
பாயும்போர்க்குப்பதுங்கும்புலியனான். ௰௩

கோபமின்றிச்சி கக்குங்கொடுங்கணான்
தீபமென்னவெரிசிகைப்பங்கியான்
ரூபமாகியெழுமுயிர்த்துண்டத்தான்
பாவமன்றிப்பழிக்குப்பயப்படான். ௰௪

உடலையேவளர்த்தூணுண்டுபல்லுயிர்ச்
சுடலையேயெனத்தோன்றுமுதரத்தா
னடலையேயெனுநஞ்சுறைநெஞ்சினான்
முடலையெயறியாமுழுமுண்டத்தான். ௰௫

மாலுந்தென்றலுஞ்சேர்மலையாசலங்
கோலுநீள்வரைக்கொல்லிமயேந்திர
மேலும்போகிவிலங்கொடுபுள்ளெலாங்
காலந்தோறுங்கருவறுத்தானரோ. ௰௬

அங்கண்வேட்டமேய்தாதயல்சூழ்வரை
யெங்கும்வேட்டம்புகுவதற்கெண்ணியே
மங்குல்வேட்டமலையத்துளார்க்கெலாந்
தங்குவேட்டமெனப்பறைசாற்றினான். ௰௭

வெள்ளிவாரத்தில்வேலனைமுன்புகூஉய்த்
தெள்ளிதாம்வரைத்தெய்வதம்போற்றுபு
துள்ளியாடித்தொழுதுவணங்கெழுந்
தள்ளியீந்தனனையனமாதியர். ௰௮

முதுபுனத்தினையுமுளைத்தோரையு
மதுவுங்கந்தமுமற்றவுங்கொண்டவன்
கதுமெனச்சுனைமூழ்கிக்கடிகமழ்
புதுமலர்ப்பெய்துபொங்கவிதூவியே. ௰௯

பரவியேத்திப்பலிவைத்தசேடமும்
வரவிசேடமுஞ்சொல்லிவழங்கலும்
விரவுநல்லநிமித்தெனவேடர்கோன்
சுரவுதாங்கியொடுதொடுதோலிட்டான். ௨௰

அம்மலைக்குரியானவனுதலால்
வெம்மலைப்புறவேடுவர்யாவருஞ்
செம்மலைப்புடைசூழ்ந்தசெருமினர்
கைம்மலைக்குலங்கார்மலைசூழ்தல்போல். ௨௧

ஆங்குநின்றவர்க்காதிமுநியவன்
வீங்குபல்குரலானதைவிளித்தலுந்
நீங்குகாட்டியசேதமென்றான்மறுத்
தோங்குமாக்கமென்றான்மற்றொருவனே. ௨௨

வேறு.

பரிசையுடைவரியதழாற்பரிபுலிப்போத்தானு
வாவுரிகண்முதலசக்கியடற்கூளியெனநின்றான்
சரிகையெறும்படைஅளக்கியிடுமெனத்தோன்றினான்
கரடிபுரிக்கஞ்சுகத்தாற்கார்மேகமெனப்பொலிந்தான். ௨௩

வளைதடியர்வளைகோட்டுப்பகடுபோன்மருங்கேற
முளைதடியர்முரிமருப்பிரலைபோன்முன்னடப்ப
கொளையுடுத்தகொடுமரத்தர்வரையாட்டின்குலமேயப்பத்
நிலைநிலைத்தாமேருமோர்சிங்கமெனத்தோன்றினான். ௨௪

ஆளெழுந்தநிரண்முழக்கமலைசுருட்டுக்கடலேர்ப்ப
வாளெழுந்தவயப்படைகண்மகரமச்சநிரைமானத்
தாளெழுந்தபடலம்போய்ச்சுடர்மறைப்பப்படரிருளால்
வேளெழுந்தன்கரியாமெனத்திகைப்பவெளிக்கொண்டான். ௨௫

வேறு.

தனிநிலையுமோலைகளும்பாளைகளுந்தாளையராய்க்
கிளைகிளைவல்லயர்தரித்தத்தருக்குலம்போற்கிட்டின
ரிளையர்காளையராயவிறவுளரும்வனசரரும்
பளியர்களுங்குனர்களும்பறம்பருங்கிராதருமே. ௨௬

வேறு.

சொடிபிடிப்பக்குழல்கொம்புதொண்டகத்
துடிமுழக்காதலைத்தெழுஞாளிகள்
செடிகள்சுற்றுபுவாடைதெரித்தெழத்
தடமெடுத்தவிலைஞர்பின்சாரவே. ௨௭

சென்றுகாளுஞ்சிலம்பும்பதக்கையுந்
துன்றுசாரதுஞ்சூலங்கானமுங்
குன்றம்பாதக்குவடும்வாரமு
நின்றமேடியுநீடினர்தேடினர். ௨௮

காடுமுற்றக்கலைத்தெழுவார்சிலர்
மாடுசுற்றிவலையெறிவார்சில
ருடுபற்றியொடியெறிவார்சிலர்
கோடுபற்றிக்குமுறிநிற்பார்சிலர். ௨௯

வேடுபாய்வருமுவையைவேழத்தின்.
கோடுசாய்தரக்குத்துவர்மேல்வரா
யாடுபாய்வரறைபாய்வர்சூகர
மோடுபாய்வர்முயன்மறித்தோடுவார். ௩௰

அழுங்குகிரியணில்சவுதாரிபுள்
ளொழுங்குகாடையுடும்புபுல்வாய்கலை
யெழும்புநாய்கலைத்தேறியதிச்செல்லாங்
கழுந்துபோல்பவர்கைசெயுஞ்சூழல்வாய். ௩௧

நீலமொன்றியகுன்றினைநீள்சரற்
காலமேகம்வளைந்தெனக்கானராத்
தூலமொன்றியமெய்யெங்குஞ்சுற்றலா
லோலமென்றதோர்மும்மதவேழ்கலே. ௩௨

தந்திகூப்பிடச்சக்கரத்தானென
வந்தெதிர்ந்தனன்வென்றிவலனென்பான்
முந்துதாவிமுன்னேகினர்யானையு
மந்தமாசுணமள்ளிவிழுங்குமால். ௩௩

கட்டுநாகங்கராமெனநேமியாத்
தொட்டவாளியினாற்றொலைத்தானையை
விட்டமாலின்விடுத்தனன்மீனவ
னிட்டகார்தனைவிட்டதுமெனனவே. ௩௪

வல்லைபாய்ந்தளின்விட்டபின்வாரணஞ்
செல்லும்வேடனைச்சிறித்துரந்ததால்
வெல்லும்வல்விடமீட்டசகாயனைக்
கொல்லவேகுங்கொலைவரிவேங்கைபோல். ௩௫

ஆனைதாக்கலுமாங்கெதிர்ந்தான்வல
னேனைவேடரிரிந்தனரோகினர்
தானைவேந்தைச்சமரில்விட்டோடிடுஞ்
சேனையயன்றித்தெவ்வரும்வேண்டுமோ. ௩௬

சோனையொத்தசுடுசரமாரியால்
வேனில்விட்டெனவேழம்விட்டேகலும்
வானிறைத்தவெறித்ததுமானவே
தானெருத்தனுஞ்சாபமுமாய்நின்றான். ௩௭

சேணில்வேடனாத்தேடலுங்காண்கிலா
னாணிலாமலொருபகல்வெம்பினன்
வீணிலோரும்விலங்குபட்டாண்டலும்
பாணமொன்றிலன்பற்கறித்தேகினான். ௩௮

கானமெங்குமுழன்றொருகார்முயல்
கூனவிற்றுணிவாகக்கொலைசெய்தான்
வானவேவென்வன்பசிக்குண்ணவே
பூனைவாட்டவுறகனற்காண்கிலான். ௩௯

கொம்புதேடிக்கடைந்தகொடுங்கனல்
வெம்பகிழ்த்தலும்வெண்ணைபடர்முனம்
பம்புதாளிபுடைந்தெனப்பாய்ந்தொரு
சம்புவூனைக்கவர்ந்ததுதாயதே. ௪௰

சம்புவோடித்தசைதனைக்கவ்விய
சம்புவேன்மரக்காவுந்தனிவரைச்
சம்புவோடையுஞ்சாரலுந்தாவிப்போய்ச்
சம்புவாழ்திரிகூடத்தைச்சார்ந்ததால். ௪௧

ஓடவோடிப்பவக்கடனீந்தவோ
ரோடமேறுதல்போலுயர்மேற்கதி
கூடவோர்வழிக்கூடுதலாய்த்திரி
கூடமால்வரைச்சாரலிற்கூடினான். ௪௨

வேறு.

அனையதூனைவேறமைத்தபின்வினைபிரித்தகன்று
தனையும்வேறறப்பிரித்தவனுமெனத்தனித்தான்
வினைபிரித்தபின்சம்புவைத்தடருமெய்யனைப்போற்
றனைவிறுன்கவர்ந்தேகியசம்புவைத்தடர்ந்தான். ௪௩

ஊனைநோக்கலுறுபசிநோக்கலுமுடலின்
சோர்வுநோக்கலுமடித்தமுட்கடித்தகுழாவம்
பார்வைநோக்கலிலன்மேற்பார்த்தகண்பதியான்
பூர்வகாடிபுண்ணோர்ந்துமோர்யோகியேபோன்றான். ௪௪

கரிபுடற்பொறிமாசுணம்வாய்ப்படமேதம்பாய்
சரியைமீட்டவனைகைப்படைதொலைந்தகாலத்து
நரியின்வாய்த்தசைமீட்கவும்வலியின்றிலவான்
பரியகூகையைவெல்லுமோகாகமும்பகலில். ௪௫

கிவர்தகானெல்லாநேடியுமோடியுந்தவித்தன்
கவர்ந்தவூனைவாய்விடக்கிலநேரியுங்காக்கால்
சிவந்தமெய்யெல்லாக்கருகியும்வேடனுந்திரும்பா
துவர்தலும்பொருட்டியிலாயுமதித்திடாருலகோர். ௪௬

துடர்வனெட்டுவன்வாடுவனோடுவன்றுடிப்பன்
படபடத்துடல்சோருவன்பொறியெழப்பார்ப்பன்
குடர்கொதிப்பதும்பார்க்கலனிகலன்மேற்கொதிப்பான்
மிடல்குறித்தபின்றமதிடர்பார்ப்பரோவீரர். ௪௭

முன்புதெவ்வர்தந்துறையின்மேற்றிறைகொளுமுனைவன்
பின்புதானைவிட்டூனைவிட்டோரிபின்பெயர்வா
னின்பமெய்துநாளின்பமேலின்பமாமெவர்க்குந்
துன்பமெய்துநாட்டுன்பமேற்றுன்பமேதுடரும். ௪௮

விரைவிற்சம்புவைத்தொடர்தலால்வியன்றிரிகூட
வரையைக்கண்டனன்வரைபொருகடல்வடவருவித்
திரையைக்கண்டனன்சித்திரநதிப்பெருந்தீர்த்தக்
கரையைக்கண்டனன்பிறவியங்கடற்கரைகாண்பான். ௪௯

இருவலம்புரிந்தனவனம்புகுந்திமையோர்
தருவலம்புரிசண்பகத்தண்டலைதாவித்
திருவலம்புரித்திரளொடுசித்திரநதிசூழ்
வருவலம்புரிமறுகுசூழ்ந்தனன்வினைமறுக. ௫௰

கிளருமுத்தலையருவிபாய்முத்தலைக்கிரியின்
வளருமுக்கணாமுதுறைகோயில்சூழ்வரலா
லுளரும்வெம்பசியொழிந்ததுபகைமையுமொழிந்தான்
றளரும்வெவ்வினைதணந்தபோலிகலனைத்தணந்தான். ௫௧

தணந்ததத்தமதிடங்குலாய்முடிவின்மாதவரும்
வணங்கமானமேற்கயிலையிலேகிவல்வேட
னணங்குபாகர்மெய்யருளினாற்சிவகணமானா
னிணங்குசம்புவுங்கிங்கரனெனப்பொலிந்ததுவே. ௫௨

தலைவர்சங்கமாமறுகினைவலம்வருதவத்தாற்
சிலைவல்வேடனுஞ்சம்புவுஞ்சிவகதிசேர்ந்த
நிலைமைகூறினன்சூதன்மாதவர்க்குமேனிகழ்த்து
முலைவில்யானைசெய்பூசையையாசையாலுரைப்பாம். ௫௩

௰௭-வது வேடன் வலம்வந்த சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௯௰௫.

---

## ௰அ வது-யானைபூசித்தசருக்கம்.

மூர்த்த ○ மெண்வகைப்பத்திசித்தியமுதன்மூன்று
னந்தசத்தியாலாகமவிதியினலானே
மந்திரத்தினல்வருபுனல்போதமற்றவையாற்
பந்தவைத்தமுக்குறியினிற்புரிவதுபூசை. க

அந்தமெய்ந்நெறியறிகலாவடுகொலேவெழ
மிந்தவார்சடைநன்னகரிறைவனையோர்நாள்
வந்துபூசனைபுரிந்தார்க்கதிபெறுமகிமை
சிந்தையன்பினுற்கேட்பவருயர்கதிசேர்வார். உ

அருமைப்பேடைகண்களிப்புறக்களிமயிலகவும்
பெருமைக்காரொறும்பருவமுங்குருகிளம்பெடைக
ளொருமைச்சேவலினூடலுக்கூடல்கூர்குளிரும்
பருமைக்காலினிடைவிடாதன்றில்சேர்பனியும். ௩

பாங்குதண்கயப்பங்கயத்தலர்முகம்வாட்டு
தாங்குபின்பனிக்காலமும்வண்டுதாலாட்டத்
தேங்குசிறிளவேனிலுந்தலைநடச்சுடரோன்
வீங்குவெய்யில்வாள்விதிர்த்தெழுந்தமுதுவேனில். ௪

பாருமண்டமும்படர்கதிர்தேறுதலாற்பரவை
நீரும்வேறொருநீரினைவேட்டுநின்றேங்கு
மூருலாவுதண்மதியுமோர்மதியைவேட்டுருகுங்
காருங்காரினைவேட்டுடல்விளர்க்குமோர்காலம். ௫

தன்றுதெண்டிரைப்புலவுநீர்சுலவியுநிலமேல்
வென்னிவீழெனக்கார்தனியாமையால்வெதும்பிக்
கன்னிபாலறப்பொரிக்கதகரித்தாவரையும்
வன்னியோர்கொடைமறாதிடிற்கயவரோவளர்ப்பார். ௬

வருந்துகானிடைவானிடைச்சுழல்வனபருந்து
பருந்தினிழலிலொதுங்குவவிரிபணப்பாந்தள்
கரிந்தபாதனிற்படநிழலொளிப்பனகருப்பை
பொரிந்தகானெனுந்தனிரெனப்புகுவனபுனமான். எ

மத்தியானமொத்திரவிறும்வெதுப்பும்வன்கோடை
மத்தியானபல்லுயிர்களைவிடுக்குமோமதம்பா

---

○ எண்வகைப்பத்தியாவன சிவபூசையின்மகிழ்தல்,சிவபத்தர்பூசைசெய்தல்,சிவார்ச்சனையியற்றல், சிவபணிவிடைபுரிதல், சிவசரிதைகேட்டானந்தபாஷ்பம் பொழிதல், அதனுற்புளகாங்கிதமுறுதல், அதனைப்பல்காற்சிந்தித்தல், திருப்பணிப்பொருளையபகரியாமையென்பனவையாம்.

மத்தியாயருந்தோலதாய்த்தூங்கலாமசல
மத்தியாயருகதோலதாய்த்தூங்கலானதுவே. ௮

இன்னகாலையிற்பன்னமுமினைபெருதிரங்கிப்
பன்னகாதிகள்போற்பவனுசனம்பழகித்
துன்னுநீரெனவானலைகானலைத்தொடர்ந்து
தன்னமாமெனச்சுழன்றதோர்மும்மதச்சயிலம். ௯

கடவுதிக்கெலாங்கனல்வதுபுனலெனக்காட்டித்
தொடர்தரத்தரவகன்றுபோயதத்தொலைத்தருங்கானல்
வடவரைச்சிலைவரதனைப்பொருளெனமதியா
துடலும்பொய்யினைமெய்யெனுஞ்சமையமொத்ததுவே. ௰

பருகுநீரின்றியுணவின்றிக்குஞ்சரம்பசியா
லுருகுதாகத்தாலுலக்குமுன்னூழிநாட்புரந்த
தருமம்போலவந்தடுத்ததுசண்பகத்தடங்காக்
கருதுமெய்யின்முன்பொய்யெனமறைந்ததுகானல். ௰௧

பற்பவாவியுநதிகளும்வறந்துபாருலகிற்
பற்பல்காவெலாமுலர்ந்தகாலமுங்குளிர்பயிராய்க்
கற்பகாடவிநிகர்த்ததுசெண்பகாட்வியே
கற்பகாலமுந்தானழியாதமைகாட்டி. ௰௨

கானவாரணம்பேடைசேர்பதுக்கையுங்கமஞ்சூற்
கூனவாரணவாவியுங்குளிர்மரக்காவு
மானவாரணங்கார்பயின்முத்தலைப்பொருப்புந்
தானவாரணங்கண்டதோரதிசயந்தழைப்ப. ௰௩

அடுத்திடச்சுடுங்கடுவெயிற்கானம்விட்டகன்று
மடுத்தடக்குளிர்செண்பகப்பொதும்பரில்வரலுந்
தொடுத்தசூக்குமமெய்துபுதூலமாஞ்சுமையை
விடுத்தவாவிபோலயர்வுயிர்த்ததுமதவேழம். ௰௪

முன்னெலாம்பசிக்குலைந்ததோர்மும்மதவோங்கல்
பன்னெடுங்கவிப்பாணனூர்பாணியைப்பரிவாற்
சென்னிவைத்தவர்திருமுகங்கொடுத்தொருசேரன்
பொன்னின்மாளிகைபுகுந்தெனப்பொழில்புகுந்ததுவே. ௰௫

வாழையிற்குலைமறுகரித்தலையெனத்திருகிக்
கூழைமுக்கிமாங்கனியுண்டுகொழுநிதிக்குவைசேர்
பேழையைத்திறந்தெனப்பலவினிற்சுளைபிதிர்த்துத்
தாழைமுப்புடைநறுங்கனிச்சாறெருடுந்தாக்கி. ௰௬

ஆகமான்மதமுவட்டுறநுகர்ந்ததாளசலந்
தாகமானதுகொடுபரதபித்தலுந்தயத்தோர்

போகமேதரும்யோகமேநிகர்த்ததபொருப்பின்
மாகமாநிவருதல்போல்வரும்வடவருவி- ௰௭

தூபம்போன்முகில்படர்வரைச்சுடர்மணிகொழித்துத்
தீபம்போலொளிருவிகாண்டலுந்தழைசெவிமாத்
தாபம்போய்த்துயர்தவிர்ந்ததபடிந்தமெய்த்தவத்தோர்
பாவம்போய்விடப்பவத்துயர்பதிபடும்படிபோல். ௰௮

அப்பெரானுகராவலாற்கரத்தமொண்டருந்தி
வெப்பெலாமறக்குளித்துமெய்ப்புறமெலாம்வீசி
வைப்பெலாம்புகவலையமிட்டிறைத்ததமதமா
வொப்பில்கோளாமதியையுண்டுமிழ்வதுகடுப்ப. ௰௯

இருமைமாகமேலிந்திரன்வயிரவாளெடுப்ப
வொருமைமாகமேயெனப்புனல்படிந்தயர்வுயிர்த்துப்
பருமைமாகநீள்பனைக்கைமேலெடுத்ததபடர்கோட்
கருமைமாகமென்திருமதியொருமதிகலங்க. ௨௰

நத்தமோர்மருப்பிருபிறைமும்மதநால்வாய்ச்
சித்தமைந்துடைச்சிந்தூரமெடுத்தெடுத்தேந்தி
முத்தவாரிமொண்டெறியுநீர்நிகர்த்ததான்முழக்குஞ்
சத்தமாமுகிலெண்டிசைப்பொழியுநீர்த்தாரை. ௨௧

சந்தாந்தெழிற்கறையடிக்கவுண்மதக்கலுழிச்
சிந்தூரப்பெருஞ்சிந்தூரமெடுத்தெடுத்தெறியச்
சந்தாத்தனதடல்வழிச்சொரியுநீர்த்தாரை
மந்தாத்தடவரையில்வீழருவியையமாறும். ௨௨

மூரிவாரணமுதபனைக்கரத்தமொண்டெறியும்
வாரிநீர்தோறும்வரையின்மாமணிகிடந்திமைப்பி
னாரிபாகர்மெய்யன்பராமிர்நியடிக
ணீரின்மேல்விடுநிலாசுடர்விளக்கினைநிகர்க்கும். ௨௩

அங்கலாமெனத்துறையில்வீழ்வாரணந்துயர்நீத்
தேங்கலாமெனமதர்த்தெழுந்ததமிழவுருவாயத்
தேங்கலாநீர்த்தடம்படிநில்லேவேட்கோவர்
நீங்காதபேரிளமைபெற்றெழுந்ததுநிகர்க்கும். ௨௪

குளிர்தடம்பனலருவிதோய்ந்தகன்றகைக்குன்ற
மளியதண்டலைவண்டலைத்தருத்ததாதாடித்
தளிர்பசிதலைபம்போதுதுசுய்த்தழைபலசிதறி
களிர்தடஞ்சினைக்கனிகளுாகவியுகுத்ததவே. ௨௫

குரும்பலாபலமதிகலாமதக்கயெஞ்சொரிநீர்
கரும்பலாநிழுத்தனிரேலாகன்னறித்துறைவா

யுறும்பலாயிரவண்டகோடிகளுயிர்க்குயிராய்க்
குறும்பலாவுறைகுழகர்பானிறைந்தனகுழுமி. உசு

திமிலவாரணமுமிழுநீர்திண்ணனம்பரனுர்க்
குமிழுநீரதாய்த்தழையெலாமவன்சிகையுதுக்குங்
கமழும்பூவதாய்ச்சிதறிடுங்கனியவன் சனிவா
யமிழ்தமாகமென்றளித்திடுமவிகள்போன்றனவே. உஎ

கருதுமுற்பவச்சுகிர்தமோசெண்பகாடவிசேர்
தருமமோவடவருவிநீர்படிந்தமெய்த்தவமோ
பருமைவேழமுய்த்தனவெலாம்பழமறைப்பலவி
னருமைநாயகர்க்கற்புதமாயினவம்மா. உஅ

பருகிவிட்டெறிபுனலபிடேகமாம்பனைக்கை
சருகுகிர்த்ததுர்தழையுதிர்த்ததுமருச்சனையா
மருகிலுக்ககாய்கனிநிவேதனங்களாமயன்மா
லிருவர்புத்திசெய்யொருவர்தம்பூசையாமிதுவே. உகூ

இருகைமஞ்சனமாகிலுமொருகையாலெடுத்தூப்
பருகுதண்புனலாகிலும்பச்சிலைபசும்புற்
சருகையாகிலுநன்னகர்ப்பரமர்தாட்சாத்தி
யொருமையெய்திலார்பேதைமையாதெனவுரைக்கேன். ௩0

வேறு.

கவளக்கார்மதவேழங்காவினிடைவைகியநாட்
பவளக்கான்முத்தளப்பார்பாண்டிவளநாடனைத்துந்
திவளக்காய்கோடையெலாந்திரிகூடஞ்சேர்ந்தார்க்குத்
துவளக்காய்கொடியவினைதுலைந்ததெனத்துலைந்ததால். ௩க

அந்நெறிக்கட்சிவபெருமானருள்போலமுகில்சுரந்து
செந்நெறித்தண்டமிழ்நாடுதிங்கண்மும்மாரியும்பொழிந்து
பொன்னுமுத்துந்துறைகொழிப்பவெங்கும்வளம்பொருந்தியதான்
மென்னெறித்தந்தாவளமும்மெயதுதந்தாவளமே. ௩உ

திரிகூடப்பெரியபிரான்சிவபணிசெய்மெய்யடியார்
தரிகூடப்பெரும்புவனந்தனில்வாழ்வுதழைத்தோங்கி
யரிகூடவயனறியாவரன்பதமேசேர்வரென
விரிகூடவிரித்துரைக்கும்வேதவாக்கியந்தழைப்ப. ௩௩

நன்புலத்தமதவேழநனிபோகம்பொசித்தவைமே
லன்புலப்பப்பூதலத்திலறுபவம்விட்டொழிந்தநாட்
டென்புலத்தான்றூதர்வரச்சிவகணத்தாரொதிரோற்றார்
புன்புலத்தின்கொலைவிலங்குபுரிதருமம்யாதெனவே. ௩௪

நடுவன்றாதவர்வினவம்பர்கணத்தவர்நோக்கிக்
கடுவன்பாறுவைச்சிவந்தகனியாகத்தனிதாவு
நெடுவன்சேர்ந்துறம்பலவினேசனைப்பூசனைபுரிந்து
கொடுவன்பாதகந்தவிர்ந்தகுஞ்சரக்காணிதுவென்றார். ௩௫

அற்பெறும்பூசனைக்கோவிலையாடலருச்சனைக்கோ
நற்பெறுபெறவதெனுமென்படர்க்குச்சிவகணத்தார்
கற்பெறுங்கொடிபாகன்கழல்கண்டோதமைசொரிந்து
முற்பேறுபெற்றுயர்ந்தான்முசுகுந்தனென்னமொழிந்தார். ௩௬

எக்குளாரதிர்ந்தறியாதியற்றுகின்றபூசனைக்கும்
கங்கைவேணியாருளேகதிகாட்டுமென்பார்மு
னக்கசாதனமாகவரும்பாவக்கடல்கடத்தும்
வங்கமாய்த்தோன்றியதால்வானிலொருபுட்பகத்தேர். ௩௭

கூற்றினார்விடுத்தகலக்குஞ்சரத்தைப்புட்பகத்தே
ரேற்றினாரேறுதலும்வேதிசேரிரும்பதுபோன்
மாற்றினுங்கரியுருவமாதங்கவுருவானுன்
போற்றினன்கயிலையிற்போய்ப்போதநாயகனடிக்கீழ். ௩௮

சென்றடியிற்பணிதலுமேதிருவருட்கண்பார்த்தருளி
யன்றானைத்திரிகூடத்தருச்சனைநீபுரிந்தமையா
லன்றுகேசகருணனெனநாதிகணத்திறமுயர்ந்து
முன்றிலிடைக்கிங்கரர்க்குமுதல்வனெனவாழ்கென்றார். ௩௯

மைகொடுக்கும்பழவினைபோய்வளர்பூசைப்பலன்கிடைத்துப்
பொய்கொடுக்கும்விலங்குருவம்புத்தேளாயெவ்வுயிர்க்குங்
கைகொடுக்கும்விடையார்க்குக்கைகொடுக்கும்பணிபூண்டான்
மெய்கொடுக்குந்திரிகூடமகிமையார்விளம்புவார். ௪௰

சிந்தைசெய்யாநரிவேடன்சென்றதேவலமாகத்
தந்திசெய்யும்விளையாட்டேதருபூசைமுறையானு
விந்திரனுமேத்தரியதிரிகூடத்தெம்மானைப்
புந்தியுடன்வலம்வருவார்பூசிப்பார்பேறெனிதோ. ௪௧

இன்னகரிசெய்யும்பூசையியம்புதலுநயந்தேத்திப்
பொன்னகமாயிலையவனாபோந்தருளெம்பெருமாட்டி
தன்னருமைப்பெருந்தவமுந்திருமணமுஞ்சாற்றனெனப்
பின்னருமாதவர்வேண்டப்பேசுவாறுயர்சூதன். ௪௨

௰௮. வது—யானைபூசித்தசருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௱௰௭.

முதலாவதுதானவைபவகாண்டமுற்றப்பெற்றது.

உ

சிவமயம்

# இரண்டாவது சிவரகசியகாண்டம்

விநாயகர் துதி

பெருமதத்தினொருகரத்துமாருதமெவ்வுயிர்க்குமுயிர்ப்பிறக்கங்காட்ட
விருகரத்தங்குசபாசம்பரமதத்தினிடைவீழாதெடுப்பவீரந்
தருகரத்துமருப்புவினைத்துரிசறுப்பமோதகக்கைசைவத்தெய்வ
வொருமதத்தின்சுவைநிறைக்குமும்மதச்செண்பகக்களிற்றையுளத்துள்வைப்பாம்

## க வது-உமைதிருவவதாரச்சருக்கம்.

தேகமாமன்னுயிர்கள்சுவர்க்காதிபோகமுண்டுசேடமுண்ணும்
போகபூமியின்வரம்புதருமமெனும்பயிர்வளர்க்கும்பொழிற்கோர்வேலி
யோகமாதவர்தவத்தின்விளைவுபனிக்காலையமூவுலகுக்காணி
மாகமார்கடவுளரும்வரநதியுநல்லறமும்வளரத்தாணி. க

தாருதித்துமணியுதித்தும்பொன்பூத்தும்புவிமடந்தைதரிக்குமோலி
காருதிக்குந்தொறுமவட்குவாருதிக்குங்களபமுலைகலையாய்ச்சூழ்ந்த
வாரிதிக்குநீருதிக்குநாலுதிக்கும்வரைகடயாமானவேலி
தேருதிக்குமழற்கதிரைச்சீதமதியாக்குபனிச்சிகரக்குன்றம். உ

பொன்னிறலயன்கமலப்பொகுட்டாகும்பசுந்தழையாற்பொதுளுஞ்சோலை
துன்னிநாற்றிசைநிரம்பிமால்வளர்பச்சால்போலுந்துகிலத்தோய
மன்னலாற்பரமனுறைவடகயிலைவரைநிகர்க்கும்வடிவமூன்று
முன்னினுற்பனிச்சிமையவுயர்வரைமுத்தேவியருமுறழுமாதோ. ௩

வேறு.

அறைகுதிக்கும்வெள்ளருவியையானைமத்தகமேன்
மிறைவருத்தும்வாளரியெனக்கரியினம்வெருவும்
பிறைவளைப்பெருந்துண்டத்துப்பெரும்புயல்வரையைச்
சிறைவிரித்தசிம்புள்ளெனமுழைபுகுஞ்சீயம். ௪

யாவரம்பையர்கண்ணினர்நண்ணினரிவரைத்
தேவரம்பையர்பணிவதுசிறுகுடிச்சிறூர்பாற்
காவரம்பையில்கனியளித்திமையவர்கனந்
தாவரம்பையின்கனிகொளுநனிகொண்மாச்சயிலம். ௫

சமையமந்தரமத்திமதாரம்வண்டிசைக்கு
மமையமந்தரத்தசுணமாவலமருமடவிச்
சிமையமந்தரத்தவருறைகுலவரைதெரிப்போ
ரிமையமந்தரமென்னலான்முதல்வரையிதுவே. ௬




வேறு.

மேருவார்மந்தரமிடதவெற்புளார்
பாருளார்திசையுளார்பாதலத்துளார்
சூருளார்கற்பகச்சோலையார்முதல்
யாருளாரவர்தவத்தெய்துமால்வரை. எ

கடும்புலிமுழைமிடைக்கலைகள்காதிமீர்த்
தொடுங்குமேயரிகளுங்கரியுமோருழைப்
படும்பணமயிற்சிறையடையும்பாலுவு
நடுங்குறப்பொழிபனிச்சிசிரஞாட்பினல். அ

அகலிடம்விசும்புதொட்டழன்றுகாய்கதிர்ப்
பகலவனேர்ப்பரிபச்சையாயது
முகில்கர்மதிக்கலைமுடங்குபான்மையுஞ்
சிகரவெம்பனிவரைச்சீதத்தாலன்றே. ௯

தடவரைத்தென்றிசைச்சார்ந்தவெய்யவன்
வடபெருந்திசையினும்வருந்திச்செல்வது
குடமுறுபனிவரைக்குளிர்பொறுதபோய்
மிடல்வடவனலின்மெய்வெதுப்பவேகொலாம். ௰

கற்பகமிசைப்படர்காமவல்லிகள்
வெற்பகமெறிபனித்திவலைவேய்ந்தன
கற்பகக்கொடிச்சியர்காணிற்கோத்திடும்
பொற்பகநிலத்திலக்கோவைபோலுமால். ௰௧

தமையாமடந்தையர்தணப்பவானவ
ரமையனதோள்பிரிந்தலக்கணெய்தவர்
சிமையமார்தவத்தினுற்சேர்வராதலா
லிமையவர்துதிசெயுமிமையமால்வரை. ௰௨

வேறு.

அந்தமிலக்கரசாளுலானசிற்றுதரக்
கந்தமலிமலர்க்குழலாண்மேனைகாவலன்வானோர்
வந்தமலிபுரிகோட்டுமைந்தாகன்றனைமகவாய்த்
தந்தமலிதனைப்பெறவானெடுங்காலந்தவம்புரிந்தான். ௰௩

அக்கண்ணனொருகண்ணையடிசாத்தவருள்புரியு
முக்கண்ணன்முடிசாத்துமறகண்ணன்முளரியத்தான்
மெய்க்கண்ணன்புறநோக்கிவிரதமுயல்வெற்பனுக்கே
யெக்கண்ணுமெய்தாததவப்பயன்வந்தெய்தியதால். ௰௪

வேறு.

மன்னவன்றவமதோமண்ணும்வானமு
முன்னர்செய்சுகிர்தமோமுதறெவ்வப்போர்களைப்

பொன்னவாங்கமலமென்பொகுட்டிலின்றதா
லின்னபேருலகெலாமீன்றசெல்வியை. யரு

சேயிழைக்கவுரியைத்தெய்வப்பங்கயக்
கோயிலிற்காட்சிகண்குளிரக்காண்குற
வாயிரநயனமோவனந்தநாட்டமோ
மேயினனற்றைநாளிமையவேந்தனே. யசு

அடுத்தனனுவாமதிகண்டவாழிபோ
லெடுத்தனன்பொன்னையீன்றெடுத்தவாரிதி
கடுத்தனன்கயிலையார்வாழ்க்கைக்கண்ணுறீஇக்
கொடுத்தனன்மேனையாங்கொம்பனாள்கையில். யஎ

வாங்கினள்செல்வியைவாங்கிவாழ்வுபெற்
றோங்கினள்பால்சுரந்துகளவார்முலை
வீங்கினள்களித்தனண்மேனைவானெலா
மேங்கினகுரவைகளெழுந்தபல்லியம். யஅ

வேறு.

இச்சைகூரவெடுத்தணண்மார்பணைத்
துச்சிமோப்பப்பசுநரம்போடியே
கச்சைமீறுகனகவள்ளத்தின்பால்
பச்சைவல்லிபவளத்திற்பார்ந்ததே. யகூ

புவனகோடியைப்போக்குவரவெனுங்
கவனவூசலிட்டாட்டுங்கவுரியைப்
பவனவானவர்தச்சன்பலித்ததோர்
சுவனமாமணித்தொட்டிலிட்டாட்டினாள். உய

சிலம்புதண்டைகள்சில்லரிக்கிண்கிணி
யலம்புகின்றதையன்றடிநோமெனக்
கலம்புலம்புறவோகடந்தானவர்
தலம்புலம்புறவோதவழ்ந்தாளரோ. உக

இறையளந்தபடியிரண்டாற்சக
முறையளந்துவளர்ப்பவண்முந்துசெய்
யறம்வளர்ந்ததுபோலருண்மாமனப்
பொறைவளர்ந்ததுபோல்வளர்ந்தாளரோ. உஉ

வேறு.

வானநாட்டன்னமுமருளமால்வரைக்
கானமாப்பிடிகளுங்கண்டுநாணுறத்

தானமுந்தருமமுந்தவமுஞ்சைவமு
ஞானமுநடைபெறநடைகற்றுளரோ. ௨௩

நற்றியபுவனங்கடுதையும்பேரண்ட
முற்றிலுஞ்சிற்றிலாமுறையிலாடுவா
ளெற்றிலுமமைவதோரிசையபுகாட்டவோ
சிற்றிலுமாடினள்சிமையமுன்றில்வாய். ௨௪

பாவையுங்கழங்குபொற்பந்துங்கிள்ளையும்
பூவையும்பயிற்றுதல்புந்திசெய்கலாள்
யாவையும்படைத்தளித்தழிக்குஞ்செய்கைதன்
றேவையும்பயிற்றுதல்சிந்தையுன்னியே. ௨௫

வேறு.

பேதையார்பருவந்தன்னிற்பேருலகுடையார்கொன்றைக்
கோதையார்சடிலஞானக்கொழுந்தையார்வத்தான்மேவ
மேதையார்விரதம்பூண்டுமேனியார்க்குணர்த்தமேனி
தாதையாரலங்கன்மோலித்தந்தையார்க்குணர்த்தினளே. ௨௬

அழகினதுறையுள்போல்வாயருந்தவங்கூடுமோநின்
மழலையம்பருவத்தென்றுவழங்கினனிமவான்முக்கட்
குழகனைநினைவார்க்கென்றுநினைந்தவைகூடுமென்றுள்
பழமறைக்கிழவிநோற்பப்பசும்பொன்னூற்சாலைசெய்தான். ௨௭

நிலைமாமலைக்குவேந்தன்றிருமகளொருபெண்வாலை
மலர்கொய்யாள்சுனைபர்தாடாள்வல்லியர்குழுவிற்கூடாள்
குலமெலாமிறும்பூதெய்தக்கொழுந்தவத்தனிமைபூண்டா
ளுலகெலாம்பரவுமுக்கணொருவனைத்தனிமைநீக்க. ௨௮

சங்கரிப்படியுந்தோறுந்தவளமெய்வாணிபோல்வாள்
பங்கயாசனத்தின்மேவிப்பதுமையைநிகர்வாள்குலச்
செங்கையார்தம்மைநீக்காச்சிந்தையாற்கௌரியாவாண்
மங்கைமெய்த்தவஞ்சேர்சிந்தைவயிரத்தால்வகாப்பெண்ணுவாள். ௨௯

அலைபுனற்றடஞ்சேர்ந்தன்னமாகுவாள்கூலமேவி
மலைமிசைப்பிடியைநேர்வாள்வனத்திடைநிற்குங்காலை
நிலைமலர்க்கொம்புபோல்வாணிட்டையிலிருந்தாலம்பொற்
சிலையினைநிகர்வாளன்றிச்சித்திரம்போல்வாளன்றே. ௩௰

வேறு.

புலன்களைந்தையும்பொருத்திநாற்கரணமேற்புகட்டி
யலங்குநாற்கரணங்களையுள்ளமுடமைத்துப்
பலன்செய்புள்ளத்துஞானமாம்விழியினைப்பதித்தாங்
கிலங்குசோதியைநோக்கிமேற்கண்முகிழ்த்திருந்தாள். ௩௧

மேனையாரும்வெற்பரசனும்வியப்பவிண்ணவரோ
டேனையார்தொழுவெம்பிரான்றிருவுளமேற்ப
மோனையார்வமேகொளுகொம்பாமுதுதவப்பயிரை
வானையோங்குறவளர்த்தனள்பனிமலைவல்லி. ௩௨

வேறு.

உண்ணிலாவியபேரன்பாலுளமெலாநிரம்பிஞானக்
கண்ணிலானந்தவெள்ளக்கடல்பரந்திமையமீன்ற
பெண்ணிலாரமுதார்செய்யும்பெருந்தவப்பெருக்கமேறித்
தெண்ணிலாமதியம்வேய்ந்தார்திருவுளநிறைந்ததன்றே. ௩௩

உடையநாயகியார்செய்யுமுயர்தவப்பரிவுகாண்பான்
சடையினின்மதியஞ்சூடித்தடங்கையின்மழுமானேந்தும்
விடைனூர்கயிலையாதிவெற்பினூர்பொற்பினூழிப்
படையினூர்முதலோர்சூழப்பனிவரைச்சாரல்சார்ந்தார். ௩௪

வந்தவானவரையெல்லாம்வரைப்புறநிறுவித்தாமோ
ரந்தணமுதியோராகியணிந்தமாமகிபோற்கூனுஞ்
சந்தமாநரையுந்தோன்றத்தவப்பொறைசுமந்தமேனிப்
பைந்தளிர்வாடநின்றாள்பணிதவச்சாலைசார்ந்தார். ௩௫

சென்றபினெழுந்துதாழ்ந்துசிவமறையவரைப்போற்றி
யன்றவர்க்கியையநன்கிருசனத்திருத்திக்கீழ்போய்
நின்றனளிமையப்பாவைநேரிழைவதனநோக்கி
மன்றலங்கோதாய்மேனிவருந்தியதென்னேயென்றார். ௩௬

தோழியர்பரவித்தூயவுணவொடுதுயிலுநீக்கி
வாழியங்கயிலைமேயவரதனைமழுவலானை
யூழியுமுலகுநீத்தவொருவனைக்கருத்திலுன்னி
யாழியினமுதமன்னாளருந்தவமுயன்றாளென்றார். ௩௭

பிடியனநடையும்வாலப்பிறையனநுதலும்வாய்ந்த
கொடியனவிடையாய்மேனிகுழைந்தபூங்கொம்புபோல்வாய்
வடிவமுமழகுந்தேம்பவண்ணமும்வருந்தநோற்றல்
கடிஞையிலையஃமேற்றுக்கடுநுகர்ந்தார்க்கோவென்றார். ௩௮

வியன்மறைத்தலைவர்கூறமெல்லியன்மொழிதலாற்றாள்
சயிலமானருளான்மற்றோர்தலைமையாம்பாங்கிநோக்கி
யயன்முதலமரர்வீறலடற்பலிகொண்டாரண்ட
ருயிர்நிலைநிறுத்தவன்றேவுண்டனர்விடத்தையென்றாள். ௩௯

அலைபொருதடங்கட்பேதாயருமணம்புரிந்தாலம்பொன்
மலைதருநகர்நாடின்றிவெற்பிலோபுகுவாளென்றார்
கலைதெரிமறைநூல்வல்லீர்கல்வியின்பெருமையீதோ
மலைமகளாகத்தோன்றியிகழ்வதோமலையையென்றாள். ௪௰

இப்படியனேககாலமிமையவர்தவங்கள்செய்தார்
மைப்படிவிழியாபிசன்வந்திலன்வருமோவென்று
ரப்படியிரங்காரல்லரடியவர்க்கெளியார்சித்த
மொப்பிலாதொழிந்தாரேறுமொழிகலமுயிரோடென்றாள். ௪௧

மறைவலீர்போந்தவாறுவழக்கிரீர்போமினென்ன
வறைதலுமமலர்நோக்கியணங்கியாம்போந்தவாறு
பிறைநுதற்கருங்கட்செவ்வாய்ப்பெய்வளைத்தையலாளை
நறைமலர்மாலைசூட்டிநன்மணம்புரிதற்கென்றார் ௪௨

கறையணிகண்டத்தண்ணல்கன்னிதன்பொருட்டாற்கொண்ட
மறைவடிவுணராள்சொல்லுமறைமொழியென்பதோரா
ளிறைமகளிதையமாழ்கியிருசெவிபுதைத்துவெட்கி
நறைமலர்வதனங்கோட்டிநாணமுற்றகன்றுபோனாள். ௪௩

மடவரலகன்றகாலைமற்றுமோர்விளையாட்டாக
விடமணிமிடறுங்கங்கைவேணியுங்கரந்துபோந்த
கடவுள்வேதியனார்தாமுங்கரந்தனர்திகைத்தாள்வல்லி
யிடம்வலந்தேடிக்காணாளிறைவனென்றிரங்கலுற்றாள். ௪௪

வேறு.

ஒன்றேபலவேயுலகெல்லாமோங்குணக்
குன்றேகடலேகொழுங்கருணைப்பேராறே
நன்றேயரிதேடுஞானமலர்த்தாள்சிவப்ப
வின்றேதமியேற்கெழுந்தருளவேண்டிற்றே. ௪௫

பொன்னேமணியேபொருளேபொருண்மறையின்
முன்னேநடுவேமுடியாமுழுமுதலே
மின்னேயெனத்தோன்றிவிண்ணிலேபோய்மறைந்தா
யென்னேதமியேனியற்றும்பிழையேயோ. ௪௬

காராயழகொழுகுநந்தரத்தாயந்தரத்தா
யாராவமுதேயென்னுணர்ந்தமாகடலே
நீராய்வெளியாய்நெடுங்காலாய்வெங்கனலாய்ப்
பாராயொளியாய்ப்பரந்தாய்பரமேட்டி. ௪௭

என்றாள்புகழ்ந்தாளிமையவரைப்பூம்பாவை
நின்றாளயர்ந்தாணெடுநீலமுத்துகுத்தாள்
சென்றாள்பலதிசையுந்தேடியலமருங்கான்
மன்றுளெம்பாதர்மழவிடைமேற்றோன்றினார். ௪௮

பணமணிதிருமார்பும்பவளம்போற்படர்சடையுந்
தினகரோதயவடிவுந்திருநுதலின்மேல்விழியு
மனவரதநடம்புரிவாரபையவரதமுங்காட்டிக்
கனவரையின்றிருமகளார்கண்களிப்பமுன்னின்றார். ௪௯

பூணார்நகிலவரைப்பூம்பாவைநோன்பிருந்து
நாணுளுமேனிநலிந்தாண்மெலிவகலச்
சேணார்கயிலைச்செழுந்தேனைமாலயனுங்
காணாதெள்ளமுதைக்கண்ணான்முகந்தண்டாள். ௫௰

தாராற்றுங்கொன்றைச்சடையாயெனையுடையா
யாராற்றுவார்நின்னடியாருனைப்பிரிந்து
காராற்றுங்கண்டாகளையேற்றாய்நின்காதற்
பேராற்றில்வீழ்ந்தேன்பிரிவாற்றேன்யானென்றாள். ௫௧

வேறு.

கொந்துதாரிமையச்செல்வக்கோதையாள்பயந்தகோதாய்
முந்துநீதவங்கள்செய்தமுறையெலாமுவந்தோநின்னை
வந்துநாம்வதுவைசெய்வோம்வருந்தலென்றயன்மால்சூழ
விந்துநாதாந்தமானார்வெள்ளியங்கிரியிற்போனார். ௫௨

௧-வது உமைதிருவவதாரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௩

## ௨-வது திருமணச்சருக்கம்

தனிவரைச்சாபத்தார்சொற்சாபத்தாரெழுவராய
முனிவரைவரித்துநோக்கிமுகிழ்முலையிமையமாதை
நனிவரைவதுவைசூட்டநயந்தனம்விரைவினீவிர்
பனிவரைவேந்தன்முன்போய்ப்பகருதிர்வருதியென்றார். ௧

ஆங்கவரிமவான்பக்கலணைதலுமெழுந்துபோற்றித்
தேங்கமழ்மலர்கடூவிச்சிறந்தவாசனத்திருத்திப்
பாங்கெழுவரையைச்சூழும்பரிதிபோல்வலம்வந்தேத்தி
யீங்குமெய்த்தவத்திரெய்தவெத்தவம்புரிந்தேனென்றான். ௨

பின்னருமவரைநோக்கிப்பிரமனேமுருக்கொண்டன்னீர்
பொன்னகர்கழிப்பியீண்டுப்போந்தவாறென்னேயென்னக்
கன்னலங்கனியைநின்பாற்கற்பகக்கொழுந்தன்னாளை
நன்னர்பூங்கயிலையார்க்குநல்குதிநயப்பாலென்றார். ௩

நந்தையாமிமவானிற்பத்தனையன்மைந்நாகன்போந்து
முந்தையார்குலமேதென்னமொழிதலுமுனிவர்நோக்கி
யெந்தையாருலகமெல்லாமீன்றுகாத்தழிப்பர்யார்க்குங்
கொந்தையார்கொன்றைவேய்ந்தார்கொடுத்ததுகுலங்காணென்றார். ௪

மேனையாரதனைக்கேளாவியன்மகட்கொடுத்தார்தம்மைத்
தானையாலரிந்துளார்க்கோசம்பந்தமெனலுமோனர்
தேனையார்மொழியாய்தத்தந்திகழ்மனைத்தீபமேறு
மோனையாய்முதற்கோடற்கிசையுமோமொழியாயென்றார். ௫

தன்பெருமனைக்குஞ்செய்க்குந்தவுரைத்திளமைவேந்த
னென்பெருங்குலத்தில்யாதவெழினமலர்க்கொம்பனுள
னன்பெருங்கயிலையாதிராதனேவேட்பதாளுன்
முன்பெருந்தவமேயென்றுன்முனிவரர்மகிழ்ந்துநோக்கி. ௬

பூனையார்கரந்தைவேணிப்புனிதர்க்கும்பொருப்பனின்ற
வானோர்விழியிருட்குமங்கலத்திதிநாள்வாரம்
வேளையேயோரையாவும்விதிமுறை யுரைத்தமேலோர்
காளையேமுகூர்த்தமென்னநயந்தனர்நவின்றுபோனுர். ௭

போந்தனர்முனிவர்வெண்பொற்பொருப்புறைசெம்பொற்கோயில்
சேர்ந்தனர்நந்தியுய்ப்பச்சிவபிரான்சன்னிதானஞ்
சார்ந்தனர்திகழ்ந்தவாறுசாற்றின ரிமவான்செலவி
மார்ந்தளிர்ச்செங்கைபற்றிமணக்குநாளுனையென்றுர். ௮

பண்ணவருவாப்பாதர்பசுந்துழாய்முகுந்தன்வேதா
விண்ணவர்தலைவன்மேலையுருத்திரர்முனிவர்சித்த
ரெண்ணருமுலகத்தாருமேந்திழைகுழாத்தொடங்கு
நன்றுதற்கருளநந்திம்பிரான்மனனஞ்செய்தான்- ௯

அங்கவரிமையமீன்றவமுதனையாளைநாளைத்
திங்களங்கண்ணிவேய்ந்ததெய்வங்கண்மனுளர்வேட்கு
மங்கலமென்றுதோன்றவகைபெறும்புவனந்தோறும்
பொங்கொலிமுரசமார்ப்பப்பொருக்கெனவெழுந்தார்மன்னே- ௰

வேறு-

பங்கயாசனத்திருவுறைமார்பினன்பங்கயாசனச்செல்வ
னங்கைவாரணத்திந்திரன்பாவகனந்தகனிருதேசன்
பொங்குவார்கடற்கிறைபவனுநிபன்பொருவிடையீசானன்
றிங்கண்மாதங்கள்வருடங்கள்வாரங்கடிதிகளுட்கரண ங்கள்- ௰௧

அண்டமூலகாலாக்கினியுருத்திரர்பதின்மர்மற்றவர்போல்வார்
கொண்டபூதராற்கணத்திரளாடகர்குறட்படைக்கூர்மாண்டர்
மண்மொலெழுகோடியாமிருணிலம்வளர்க்குமட்டகாவார்
கண்டபாதலம்புரக்குமாமணிமுடிக்கணபணத்தூரகேசர். ௰௨

அண்டகோளகையுச்சியருருத்திரரைந்துநூற்றவராவார்
கொண்டல்வண்ணனைவிரிஞ்சனைப்பணிகொள்வார்குரகதமாசாத்தர்
சண்டமால்விடைப்பசுபதியுருத்திரர்தரிக்குமீனாஞ்ஞாறுங்
கண்டபோனிகத்திரருருத்திரகணப்பெரும்படைவீரர். ௰௩

நூறுகோடியர்பதிணொருகோடியர்நூற்றுவர்நுதற்கண்ண
ராறுகோடியினிரட்டியர்கடத்ததோராதவரவர்மேலும்
வீறுகோடியினிரட்டியாமருத்துவர்வசுக்களாம்விழுச்செல்வர்
கூறுநாலிருகோடியர்மூன்றரைக்கோடியபெருந்தீர்த்தம். ௰௪

மூலநான்முகனடங்குறவவன்முரிபுருவத்தினிடைத்தோன்று
நீலலோகிதர்முதலினோர்மூவிலைநெடியச்சுவற்சங்காளர்
சூலபாணியர்கேத்திரபாலர்மெய்ச்சுவாவினர்திருவாணக்
கோலமேயவர்பச்சிளங்கஞ்சுகக்கொற்றவரிருநால்வர். ௰௫

கருதுபாற்கடலுண்டுதன்னருட்கடல்கண்ணனுக்கருள்செய்தோ
னரியமாமறைவியாதமாமுனிசுகன்றதீசியத்திரியென்பான்
பிருகுரோமசன்கண்ணுவன்பராசரன்பெருந்தவத்துருவாசன்
சரதநாரதன்கபிலன்மாசத்தியன்சதாநந்தன்பரத்வாசன். ௰௬

சித்தர்மாதவர்தந்திரர்கருடர்கிம்புருடர்கின்னரர்போகர்
வித்தியாதரர்சாலகடங்கடர்நிசிசார்வேதாளர்
சித்தர்விண்ணவர்மாகசாரியர்தயித்தியர்கடவுளர்யோகர்
சத்தநாரியரட்டமாசித்திகள்சத்தமாமுகில்வேந்தர். ௰௭

அனகநீள்சடையகத்தியன்புலத்தியனங்கிராமார்க்கண்டன்
மனநிலைப்பெருங்காசிபன்கவுதமன்வசிட்டனுமெழுவோர்கள்
சனகனேசனற்குமாரனேசனுதரன்சனந்தனென்பவர்நால்வர்
பனகநீண்முடிப்பதஞ்சலிகால்கையிற்கண்பெறுபுலிப்பாதன. ௰௮

ஒருதினம்பொழுதிரண்டுமுக்காலநான்குயர்மறையைம்பூத
மிருதுவாறுடனெழுபெருநதிக்குலமெண்கிரிநவகண்ட
மருமையெண்டிசையெழுதடம்புவனமாறங்கமைம்புலநான்கு
கரணமுக்குணமிரண்டறமொருபெருங்கதிமதிவிதிமாதோ. ௰௯

சரிதையாதியசதுட்டையமந்திரந்தத்துவம்புவனங்கள்
வருணபேதங்கள்கலைகள்வன்பதங்களாமத்துவாவகையாறுந்
திருமடந்தைபாரதிபுலோமிசைமுதற்றெய்வமங்கையர்யாரு
மிரதமூர்த்திகளுநைத்தனர்கயிலையிலெய்தினர்விசும்பாரு. ௨௰

புவனம்வானமும்புதைபடமீமிசைபுடைபரந்தாகாய
கவனரோமுதல்யாவருந்தாழ்ந்தெழீஇக்கயிலைமால்வரைசூழ்ந்தார்
குவலயந்தொடுத்தண்டகோளகையெலாங்கோத்தெழுமுகவாரி
சிவபிரான்பெருந்திருமலைபணிந்துபோய்வலஞ்செயுஞ்செயன்மான. ௨௧

ஒத்தெழும்பதினான்குபேருலகமுமொருமுகங்கொடுபோந்து
மத்துணைக்கெலாமவரவர்க்கிடங்கொடுத்தண்ணலார்கயிலாயம்
பத்திமுத்தமிழ்ப்புலவருக்கருள்சங்கப்பலகையொத்ததுமேலுந்
தத்தியண்டமும்பூண்டதோர்பாரிடத்தலைவனொத்ததுமாதோ. ௨௨

எயில்சிதைத்தவில்லாதலாலெம்பிரான்றிருக்கடையினின்மேருச்
சயிலநிற்றல்போனின்றபொற்கோபுரந்தனைத்தொழுதெழுந்தேகிப்
பயின்மணப்பெருங்குழுவெலாநிறைதலாற்பரம்பரனுடன்மேவிக்
கயிலைநற்கிரியுலகெலாமீன்றருள்கவுரியுநிகராமால். ௨௩

உவரிமாலைபெறுருத்திரகணமுதலுயர்ந்தவர்குழுவெல்லாஞ்
சிவபிரான்றிருவாய்தலின்மொய்த்தனர்சேனகுடத்திரளிப்போ
லவர்கள்பூசர்பாலவர்கணைாதர்பாலறிவிப்பவவரோகி
மவுனாநந்பாலுணர்த்தலுமாங்கவன்வள்ளலார்க்கறிவித்தான். ௨௪

தருகவீண்டெனவருளலும்வேத்திரத்தனிப்பெரும்படையோச்சி
வருகவென்றவன்மரபினுலுய்த்திடவாந்திறைஞ்சலும்வாக்கா
லருமைநோக்கினலருட்குறமுறவலாலவரவர்க்கருள்செய்தா
னொருவனுகிமற்றுலகெலாமாகிநின்றுயிர்க்கெலாமுயிராவான். ௨௫

எம்பிரானிடத்திவ்வணநிகழ்தலுமிமையமால்வரைவேந்தன்
கொம்பனுண்மணவோலையுய்த்தலுங்குலவரைக்கிறையவர்யாரு
மம்புராசிகட்கதிபர்தங்கணங்களுமருண்முனிக்கணம்யாவும்
பம்புமால்வரைத்தெய்வதக்குழாங்களும்பரவைபோற்பரந்தன்றே. ௨௬

கமலைபூமகள்பாரதிவயிணவிகௌமாரிபிரமாணி
குமரிவீரிமந்தாகினியோகினிகொற்றவையபிராணி
யமலைமேனகையுருப்பசிதிலோத்தமையரம்பையர்குழுவெல்லா
முமையைவந்தடிதொழுதெழீஇத்திங்கள்குழுடுக்குலமெனச்சூழ்ந்தார். ௨௭

நகரமாடங்கள்கூடங்கள்கோயில்கண்ஞாயில்கள்செய்குன்றஞ்
சிகரகோபுரமாளிகைகளிகைதெற்றிசித்திரகூட
மகரதோரணங்காவணம்பூவணமன்றநாடகசாலை
யகாமாயிரகோடிகள்வகுத்தனனமரர்கம்மியன்மேலும் ௨௮

மேடைமேனிலைபுரிசைவேதிகைவிரவுசாளரங்கோடி
மாடைமாமதிமணிநிலைரமியமலரினுன்மணப்பந்த
ராடைநீள்கொடிபடங்குசாமரைகுடையணிகொள்பூரணகும்ப
மோடைமாகரியாளிகண்மீளிகளுருக்கள்பற்பலகோடி. ௨௯

இரசதத்தபூகதம்வயிரேரியத்தெழிலரம்பைகளூட்டி
மரகதத்தினுற்பாசடைகாய்க்குலைவகுத்தநற்பசும்பொன்னல்
விரவுமென்பழுக்காய்பழுத்தாறவெண்ணித்திலவிரிபாளை
புருடராகத்தாற்பவளமாமணியினுற்பூங்கொத்தமமைவித்தான். ௩௰

மண்டபங்களுமாளிகைப்புறங்களுமாடகூடமும்வான்மேற்
கொண்டகோபுரகிரைகளும்வரைகள்போற்குழுமலைாற்பனிக்குன்றம்
பண்டையாதியம்பரனைவேட்டவனுறைபவதிருவிளையாட்டா
லண்டம்பாவைபுமெடுத்தெடுத்தடுக்கியசிற்றில்போன்றதுமாதோ- ௩௧

தெருக்கள்பற்பலவமைத்தனபுவனமாத்திரள்வகுத்தனபோது
முருக்கள்பற்பலவகுத்தனவுயிரெலாமொருங்குதித்தனமாறும்
பொருப்பிலிங்கிலைவகுத்தவன்கம்மியன்பூவின்மேலயன்போன்று
னருத்தவீதியிலணியிறுக்கண்செய்வாரயனகொடித்திரள்போன்றார்- ௩௨

வல்லிதோரணந்தழைதொடுத்தியற்றுவார்மாத்தழைவனமாக
முல்லைமல்லிகைசண்பகநாற்றுவார்மொய்ம்மலர்ப்பொழிலெய்ப்ப
வெல்லைமொய்த்தெழுகொடிபலநிரப்புவாரொங்கும்வானதிமானத்
தொல்லைமீமொளிர்தூயவானகமெனச்சுடர்விளக்கணிசெய்வார். ௩௩

அரியநாண்மலர்த்தேன்களாற்குறிஞ்சிமேற்குறிஞ்சியானதுசாந்தான்
மருதமான .தமுல்லையேநிகர்த்ததுமாதர்மெய்விளையாட்டாற்
பரவுமாமணித்திரள்களாற்பரல்படுபாலையொத்ததுபன்னீர்
நிரவிவீசலானீர்வளர்நெய்தலேநிகர்த்ததுபனிக்குன்றம். ௩௪

மலரினூற்கரும்பாற்சுரும்பான்மடமாதரானடைக்காவாற்
குலவுதென்றலாற்கொடிநிரைத்திருண்டதாற்கோமதனுயிர்மீட்பான்
சிலையுநாணும்வெங்கணைகளும்வேழமுஞ்சேனைதேர்படைவீடு
முலகநாயகிதிருமணச்செவ்விபார்த்தொருங்குநிற்பனமானும். ௩௫

இறைத்தசுண்ணமுஞ்சிதறும்வெம்பொறிகளுமெடுத்தெறிவிடுபூவு
நிறைத்தமாலையினுகுத்ததண்மலர்களுநிரைத்துவீழ்பூந்தாது
நறுக்கியொப்பிடுசரங்களிற்சிதறியநவமணிகளும்பொன்னுங்
குறித்தகுப்பையாற்பனிவரையனந்தமாக்கொடுமுடியுடைத்தம்மா. ௩௬

இமநெடுங்கிரிகாவலனின்னணமெழில்வரையணிசெய்யக்
கமழ்பசுந்துணர்க்கொன்றையந்தொடைபுனைகயிலையம்பெருமானைத்
தமனியப்பணிகொடுமணவணிசெயச்சதுமுகனெதிர்வேண்ட
வமரர்தம்பிரானணிந்தமைகாண்கெனமுறுவல்பூத்தருள்செய்தார். ௩௭

புலவுநாறுகோட்டாம்பல்வெம்புலிதருபோர்வையுமுட்சாத்துங்
கலிகொள்பாரொலாமொருபணத்தேநதியகணபணுடைவிக்கச்சு
மொலியலாகிமேலொளிறுபீதாம்பரவுத்தரிகமுமாகி
வலியகாஞ்சனப்பட்டிகையாகவுமலிர்துதோன்றியவன்றே. ௩௮

காதிற்குண்டலமார்பணிசரப்பணிகண்டிகைதிருத்தோளின்
மோதுபொன்வளைகங்கணம்பவித்திரமோதிரங்கணையாழி
போதிற்பொங்கியவாசிகைகரோடிகைபுனைதிருவரைநாண்கன்
பாதநூபுரப்பொற்பணியாயினபணுமுடிபபணியெல்லாம். ௩௯

தூமருப்பொடுமீனலோசனம்புடைதொடுத்தவெண்டலைமாலை
காமர்பொன்னணிசன்னவீரம்பலகாசணிப்பணியாக
மீமயானத்தவெண்டிருநீறுவெண்கருப்புரநறுஞ்சாந்தா
யாமையோடுபொற்பதக்கமாயென்பெலாமாரமாயினமாதோ. ௪௰

கண்ணின்மேற்றிகழ்கண்ணெளிர்தருங்குறிகவினுதற்குறியாக
வண்ணன்மேற்குழைமகரகுண்டலத்தொடுமணிவளைத்திருத்தோடும்

மின்னின்மேற்பொலிகதிரோனகிலவெனவிளங்குபேரொளிவீச
வண்ணமாமணித்திருமுடியானதவளர்சடைமுடியம்மா. ௪௧

வேறு.

மணிப்பணியங்கதப்புயமும்வாய்ந்தபொன்
னணிப்பணியகலமுமகலங்காண்குறத்
தணிப்பணிதகைமையாற்சலித்திட்டான்சகம்
பணிப்பணியகிலமும்பார்த்தபார்வையான். ௪௨

பூதநாயகன்முடிதொடுத்தப்பூணெலாம்
வேதநான்முகன்விழிகுளிர்ப்பக்கண்ணுறீஇப்
பாதமேற்பணிந்தெழீஇப்பண்டுநாளுநதன்
முதையும்பெறவொணுத்தவம்பெற்றேகினுன். ௪௩

வேறு.

கொம்பனுள்பெருமணநிறைவேறவானிமையவர்குறைதீர
வெம்பிரானெழூர்தருளுகதருணமென்றிமையவெர்பிறையேகித்
தம்பிரான்றனக்குணர்த்தலுங்கயிலையஞ்சயிலநின்றடலேற்று
நம்பிரான்புறத்நிவர்நதனருயர்கணநாதர்போற்றியநாதர். ௪௪

நீலலோகிதராடகரட்டகர்நிமலர்நூற்றுவரண்ட
மேலையுச்சியரண்டமூலத்துறைவிமலருத்திரர்யாரு
மாறும்வேதருஞ்சயசயசயவெனவரதனைப்புடைசூழ்ந்தார்
கோலமேருமால்வரையினைச்சூழ்தருகுலவரைத்திரண்மான. ௪௫

பிந்துபல்கணநாதரும்பூதரும்பெருந்திரைக்கடலேய்ப்ப
வைந்துபல்வகைவாத்தியமுழக்கொலியந்தரவெளிபோர்ப்ப
விந்துவைத்தவர்திருமணத்பெருங்குழாமெண்டிசைக்சடங்காதே
நந்தமைத்தெளிந்தவர்பிரானருளெனச்சகமெலாங்கடந்தேக. ௪௬

மோதகம்பனைக்கோடுபாசாங்குசந்தரித்தமுடிகமேறித்
தாதைதன்மணத்தங்குரமெனமுனர்த்தநமாமுகனேக
வேதபாரகர்வாழ்த்தொலிமுழங்கிடவிஞ்சையர்புகழ்பாடக்
கேதமின்றார்தும்புருநாரதர்கினரிசையமுதூற்ற ௪௭

இந்திரன்குடைபிழற்றிடப்பாவகனெடுத்திடநறந்துப
மந்தகன்படைதாங்கவீசானன்வந்தடைப்பைகைக்கொளலுதை
முந்தமாலவட்டங்கொடுசுழற்றமுந்நீர்க்கிறைதனிதுவச்
சிந்துபல்கொடைத்திரவியமெடுத்தெடுத்தேந்திடவளகேசன். ௪௮

கிருதிபாதுகைசம்பமாராகங்கணிவாமணிவிளக்கேந்தப்
பரிதிசோமர்நிவாத்திகைபிடித்திடப்படிவர்பல்லாண்டோதச்
சுருதியாயிரகாமமேத்தெடுப்பவான்சுரர்கள்பூமழைதூவ
விருதாளங்களுங்கோள்களுமிமித்தமுமேவியபணிகேட்ப. ௪௯

பனிவரைக்கிரிபொழிதல்போலிமசலம்பண்ணவர்புடைதூற்றக்
கனிமொழித்திரளரம்பையர்தமனியக்கவரிகாலசைத்தேக
வினியமாலயனிருபுடைகாப்பமற்றிமையவர்புறங்காப்பப்
புனிதநந்திதன்கணத்தொடும்வேத்திரப்படையொடுமுன்போத. ௫0

அருமைநாயகன்வருகின்றனடிமுடியரியயனறியாத
பெருமைநாயகன்வருகின்றனுலகெலாம்பெற்றருள்பெருமாட்டி
திருமணஞ்செயவருகின்றனுதல்விழித்தெய்வக்கண்மணவாளன்
வருகின்றன்வளநிறைவொடுகுறைவிலாவாழ்விஞன்வருகின்றன். ௫௧

அமரர்நாயகன் வருகின்றனுலமுண்டமரர்தேவியர்க்கெல்லாந்
தமதுமங்கலந்தத்தமக்கருளியதனிமுதல்வருகின்ற
னிமலநிட்களநிராமயன்வருகின்றனினைப்பவர்மலமாயைத்
திமிரபாற்கரன்வருகின்றனெனப்பலசின்னங்கள்பணிமாற. ௫௨

புடவிசூழ்தருபெருந்திரைக்கடலெலாம்புறக்கடலொடுந்தாவிப்
படருகாநதநாள்வெள்ளியங்கிரியின்மேற்பானுவாயிரகோடி
சுடர்தழைத்திடத்தோன்றியதெனமணத்தொகுதியாம்பெருவெள்ளத்
திடைதிளைத்துமால்விடையின்மேலெம்பிரானெழுந்தருளியவேலை. ௫௩

வடபெருங்கிரிக்காவலன்மந்தரமன்னவன்வடவிந்தத்
தடவரைக்கிறைகந்தமாதனத்திறைசக்கரக்கிரிவேந்த
னிடதவெற்பினனேமகூடத்திறைநீலவெற்பினனாதி
யடல்வரைக்குலவேந்தருமெழுகடற்கரசரும்புடைசூழ. ௫௪

அம்மலைச்சிலைவளைத்தவர்புயமலையதிசயந்தனைக்காண்பா
னெம்மலைக்குலங்களுமெதிர்போந்தெனவிமையமாமலைவேந்தன்
மைம்மலைப் புரவலரொடுமருகனுக்கெதிர்கொடுமலர்தூவிச்
செம்மலைப்பணிந்தினியனமொழிந்துதன்செழுமலைப்பதிசேர்ந்தான். ௫௫

ஈசனைத்திருமருமகனாகவந்தெய்துறத்தவஞ்செய்தான்
பாசனத்தொடுமெதிர்பணிந்தேகலும்படர்விடைக்கொடியாட
நாசமில்லவரிமவரைவீதிவாய்நகர்வலஞ்செயப்போந்தால்
வாசநற்பதினால்வகைப்புவனமுந்தமைவலஞ்செயமாதோ. ௫௬

வேறு.

பண்களித்தபனிமொழிச்செய்யவாய்
வண்கிளிக்குலம்போல்பவர்வள்ளலார்
விண்களிக்குமிடற்றெதிர்நோக்கினர்
கண்களித்தனர்கார்கண்டதோகைபோல். ௫௭

கார்த்தபூங்குழல்கட்டழகுக்கெலா
மேர்த்தபேரெழிலாளரிவரென்பார்
தீர்த்தன்மேனியுஞ்சேயிழைமேனியும்
பார்த்தகண்கள்பறிப்பரிதாமென்பார். ௫௮

ஒண்டர்காதாழுமிறுக்கோர்குறை
கண்டமீதுகரப்புளதாலென்பார்
வண்டுவார்குழன்மாதெழில்பார்க்கிறு
முண்டுசெற்றிடையாற்குறையொன்றென்பார். ௯

மண்ணின்மேற்புனன்மேல்வன்னிமாருதம்
விண்ணின்மேலடக்காவுருமேவினர்
பெண்ணிமேலவள்பேரெழில்காணவோ
கண்ணின்மேலொருகண்படைத்தாரென்பார். ௰

சங்குசோர்வதுந்தாழ்குழல்சோர்வதுந்
தொங்கன்மேகலைசோர்வதுநோக்கலா
ரங்கனுனெழிலாரவமுதினை
நங்குவாரெனநோக்குவர்நோக்கினுல். ௧௧

காய்தரும்பிறைமாமுடிகாட்டியே
மோய்தரும்பெருமோகத்தைநல்கினர்
சாய்தருந்தொடிகொண்டனர்தக்கவோ
வாய்திறந்தொருவார்த்தைசொல்லாரென்பார். ௧௨

சுழிகுளாமுந்தித்தோகையன்னீர்நமைக்
கழிவிலாதுயிர்காத்தலுமோனமோ
விழியினனமதவேளையும்வென்றுளார்
மொழியினுற்சகமூன்றும்வெல்வாரென்பார். ௧௩

தூயசோதிவருள்சுரக்கின்றகண்
காயுமோவிவர்கட்டெழில்காணவே
போயமாரன்பொருமையின்மாய்ந்தனன்
வேபுக்கண்ணழல்வெந்தழல்போலென்பார். ௧௪

ஆரமாதவஞ்செய்வயர்கின்றேம்
கீரமாதவர்வெம்புயத்தண்ணலைச்
சாரமாதவன்றங்கைசாற்கலைபோற்
சேரமாதவஞ்செய்திலம்யாமென்பார். ௧௫

நுதலைக்கண்டுநடுங்கியகூன்மதி
மலைத்தார்முடிவர்தெமைக்காயுமான்
முதலைச்சேர்ந்தகலுழுனைமோடனம்.
விதலைப்பார்தன்விளைத்தமைபோலென்பார். ௧௬

வஞ்சிலைவினைபோம்வழிமற்றமோ
ரஞ்சொனாளினிலவவனுந்தன்
னெஞ்சபோம்வழிதேடவரேடிப்போய்த்
தஞ்சல்போக்கினின்றனொடுசொல்லுவார். ௧௭

போதுசார்தழும்பூரணகும்பமு
மாதர்தாங்குபொன்மாடம்புகாமலே
மீதுநாதனையுங்கொடுவீதிபோ
மீதுமால்விடையென்பதுமெய்யென்பார். ௬௮

அஞ்சலென்றகமலமெய்யாரருட்
கஞ்சமாம்பொதுக்காட்சியைத்தம்மன
முஞ்சலாடவுமக்கெமக்கென்னவே
விஞ்சுபூசல்விளைத்துநிற்பார்சிலர். ௬௯

அகிலுங்கோதையராயிரகோடியர்
துகிலுமாரமுஞ்சோர்வதுகண்டுநீர்
முகிலுங்கூந்தலொருத்திமுன்னேகுவார்
நிகிலநாதர்க்குநீதியிதோவென்பார். ௭௰

பரதமால்வரைவீதியிற்பாவைமார்
சுரதவாள்விழிவண்டினஞ்சூழ்வர
விரதயோகர்விழித்தும்பியார்தலால்
வரதர்மேனிமதத்திரண்மானுமே. ௭௧

வேறு.

உரகர்தானமுங்கீழ்ப்படவெண்மர்வாழுலகமுந்திகைத்தேங்க
விரவிமாமதிபுகர்குருவாதியரிடங்கள்கோளிடமாக
விரவுகின்னரர்தந்திரர்வாழிடம்வீணையெய்திடவோங்கிப்
பரமர்மாமணப்பெருக்கொடும்பொலிந்ததாற்பனிவரைவளமூதூர். ௭௨

விந்தைவானவர்வருதலாற்பவனமும்வெறுக்கையெய்திடவாணி
யந்தணாளனுங்கணத்தொடுவருதலாலவனுலகலொய்தப்
பைந்துழாயனுங்சமலையுமேவலாற்பாற்கடல்சலமேவ
நந்திநாயகன்வருதலாற்கயிலையுநனிவிளர்த்ததுமாதோ. ௭௩

மேவுவிஞ்சையருலகமென்பார்சிலர்விரிஞ்சன்வாழுலகென்பார்
தேவலோகமாலுலகமென்பார்சிலர்சிவபுரமிதுவென்பார்
தாவிலேழுடனேழுபேருலகமுந்தந்ததிங்கென்பார்
யாவுமீன்றவடன்னையீன்றருள்பதிக்கிதுகொலோவரிதென்பார். ௭௪

வேறு.

பூதர்சங்கமும்வானவர்சங்கமும்புவன
நாதர்சங்கமுமுருத்திரர்சங்கமுமனேகம்
வேதர்சங்கமுமாமுனிக்குலத்தொடுமிடைந்து
மாதர்சங்கமாமினனெடும்பொலிவனமறுகு. ௭௫

கொடிகளும்பெருங்குடைகளுநிலாத்தகோவேந்தர்
தொடிகளுந்திரண்முடிகளுமுகுத்தபொற்சுண்ணப்

பொடிகள்சிந்திடமிமசலச்சேறுகால்புதைந்து
பிடிகளுந்தடியடிகளுங்களிறும்பிளிறும். ௭௬

தெருவடக்கலாப்பெருந்திரளாகினுஞ்செகத்தோர்
பொருவினைப்பயன்பொருத்திடுநியதியேபோல
மருவுஞாயின்றிருக்கடைநெருக்குறவருவோர்
பெருமைகிழ்மையினமைத்திடுநந்திகைப்பிரம்பு. ௭௭

குன்றளார்திசைவேந்தருசாரியர்குழாமும்
வென்றிமாலயனுருத்திரகணத்துமேலவரு
மன்றளார்மழவிடையுமாமுனிவருமல்லா
வின்றளார்பதம்பெயர்த்திலர்மறுகெலாநிரம்பி. ௭௮

தவமுனிக்கணமரசிலைதருப்பைநீர்தெளிப்ப
வவர்திருக்குலமாதர்நீராஞ்சனமமைப்பத்
துவசாற்குடமணிகொடிமுரசுபூநதோட்டி
கவரிதீபமாமெண்வகைமங்கலக்கலங்கள். ௭௯

எண்குலக்கிரிமடந்தையரிவைமுறையெடுப்ப
வண்கருப்புரதீபமோர்மேருமால்வரையிற்
பெண்கையிற்கொடுவலஞ்செயத்தெய்வதப்பிணாக்கள்
கண்களிப்புறவேந்துமாலத்திகள்கருல. ௮௰

வேறு.

முருகையார்தழையாளிரான்முதுவரைத்திரிகூடத்தி
லொருகையாற்பதம்பூசித்தவுயர்கயகருணனென்பா
னிருகையாக்கமலம்பற்றிவிடையினின்றிழிந்தருந்தி
தருகையாலமரர்மோலிசாத்துபாதுகைதொள்சாத்த. ௮௧

இடம்வலமயன்மால்செக்கைபற்றிமுத்தொழிலுக்கென்று
முடைமைதோன்றிடவசுக்கள்சுவத்திகமுரைப்பமாதர்
நடைபடம்விரிப்பவானோர்நாண்மலரிறைப்பச்சென்றார்
வடவரைவளைத்தவள்ளல்பணிவரைக்கோயில்வாயில். ௮௨

ஈசனேமருகாவெய்தவேமுலகின்றுடன்னை
வாசமாமலரைப்பெற்றுமரபெலாம்புனிதம்பெற்று
ளாசறுபுனலாலன்னவடியிணைவிளக்கிச்செய்யுஞ்
பூசனைநீராலுன்றும்புறத்திநும்புனிதஞ்செய்தாள். ௮௩

அக்கிலைகடந்தபோகியாயிரம்பவளச்செங்காற்
பொன்னின்மண்டபத்தராப்பட்புருடராகத்தின்வேதி
மன்றுபொற்பதுமராகமேடக்லாசனத்தின்மேவிப்
பன்னெறியமரர்போற்றப்பாஞ்சுடரிருந்தார்மன்றே. ௮௪

இருந்தபின்பிரமன்மாமாலிந்திரனெழிற்கூர்மாண்ட
னொருங்கமராடகேசனுருத்திரர்முதலோர்யார்க்கு
நெருங்குபொற்றவிசுந்தூசுநிரைத்தகம்பலமுநாதர்
தரந்தரமிருக்கைகாட்டித்தடங்கண்ணலருளிச்செய்தார். ௮௫

பாருளார்விசும்பினுள்ளார்பாதலத்துள்ளார்பார
மேருவாரிமையமாதிவெற்புளார்புவனவேந்த
ராருளாரவர்கட்கெல்லாமண்டபமமைந்ததம்மா
சேருவார்க்கெல்லாநாதர்திருவடிக்கமலம்போல. ௮௬

மன்றலின்குழுநிறைதலாற்றாழ்ந்ததுவடபெருந்திசையாவு
நின்றதெக்கணம்வானுறவுயர்ந்ததுநெளித்தனனுரகேசன்
றென்றிசைக்கடல்வடதிசைக்கெழுந்ததுதிகைத்ததுவடமேரு
மென்றளிர்க்கரம்விதிர்த்தனள்பார்மகள்வெருவினவுலகெல்லாம். ௮௭

மனிதர்மாதவமுனிவர்பாலுரைத்திடமாமுனிவராகிப்
புனிதவானவர்க்கியம்பவானவர்வெரீஇப்போந்துபொன்னுலகாளு
நனிகொள்வாசவற்குணர்த்திடவாசவனான்முகற்குரைசெய்ய
வினியநான்முகன்மாதவற்குணர்த்தினனெழுந்தனரிருவோரும். ௮௮

உவணவூர்தியுந்திசைமுகக்கடவுளுமும்பருந்திரண்டேகிப்
புவனமூன்றுமோர்பொருப்பின்மேற்படர்தலாற்புவிபொறையாற்றாமற்
கவனமேகொடுவடதிசைதாழ்ந்துதெக்கணதிசைமேலாகிப்
பவனநோக்கியதெனவுயர்கயிலையம்பரமர்பாலறிவித்தார். ௮௯

உம்பர்யாவருமுறையிடுதலுந்திருவுளத்திடையருள்கூர்ந்து
கும்பசம்பவமுனிவனைத்திருமணக்குழாத்திடைக்குறிப்பாக
வெம்பிரான்றிருக்கடைக்கணோக்கலுமிறைஞ்சினனெழுந்தேகிச்
சம்புநாயகசரணெனநின்றுவாய்புதைத்தனன்செவிதாழ்த்து. ௯௰

தாழநின்றெதுபணியெனப்பரவுவான்றனிமனங்களிதூங்க
வாழ்பெருங்கடலமுதுகுத்தெனத்திருவாய்மலர்ந்தருள்செய்வார்
சூழ்பெரும்பதினால்வகைப்புவனமுந்தொக்கபேரவைகாட்டி
யேழ்பெருங்கடலெழுபெருந்தீபமுமெடுத்துமேலிசைக்கின்றார். ௯௧

மகரவாரிதிநடுவுறைமரக்கலம்வளைந்தநாவலந்தீபம்
பகருமாடகக்கிரியொருபாய்மரந்துருவசக்கரம்பாயல்
சிகரவெண்குலக்கிரிகளுநங்கூரத்தீவிசைகல்லாகு
நிகரில்பல்லுயிர்த்தொகைகளேவகைபெறநிறைத்திடும்பலபண்டம். ௯௨

மன்றல்சேர்பெருமங்கலக்குழுவினான்மகிதலமெனுநாவாய்
தென்றிசைப்புறமுயர்ந்திடவடதிசைசென்றுதாழ்ந்ததுபாராய்
நின்றுநீள்கடலமிழ்ந்திடாதினிநிலைநிறுத்துதற்கியாம்வேண்டு
மின்றியெம்மையேயிடைவிடாதுளத்தினிலிருத்தியநீவேண்டும். ௯௩

சந்திராதித்தர்வலம்வருமுலகெலாந்தழைத்திடமனைவாழ்வு
மிந்திராதியர்சுவர்க்கமுநிலைபெறவிமையமின்றருண்மாதை
மாதிரகமெய்ப்படிமணஞ்செயமனம்வைத்தநம்பொருட்டாக
சுந்திரவடமுனியநீதென்றிசையப்போடுஞ்செலவேண்டும். ௧௪

வேறு.

சென்றநீதெக்கணபான்மெலிவகற்றித்தென்மலைக்கேசெறிந்துவாழ்தி
நின்றகதிர்முதல்வானோர்நெறிசெலுத்திமேருவில்வாழ்தருவன்போல
வென்றபரம்பரனருளவேகுவிண்ணப்பமெனவிறைஞ்சியேத்தி
யொன்றதமிழ்க்குறுமுனிவனிரண்டுவரம்வேட்டருளாலுணர்த்துகின்றான். ௧௫

முன்னதநீயிமையவரைச்செல்விதனைமணம்புரியுமுறைமைகாணப்
பின்னதின்றிருநடனக்காணவெனுமாசையினுற்பெரிதுகாலம்
பொன்னசலத்திருந்தவமியற்றியொருகாட்சிபெறப்போந்தேனிப்பா
லின்னமுமொன்றளதாகவிரண்டுமெனக்கெய்திடுநாளெந்நாளென்றான். ௧௬

பனகவரையாளுடையார்குறுமுனிபாலருள்கூர்ந்துபரிவானோக்கிக்
கனகவரையாயிரயாண்டுதவபலனுறுண்டிற்காமகோட்டி
சனகவரைகொடுக்குமதத்தவப்பயனையோராண்டுதனிலேயல்கு
மனகவரைத்தெக்கணபாற்கேதாரமுதலுளவென்றருளிப்பின்னும். ௧௭

தென்பாலிலொருதலத்துக்கோடிநாளுதவுபலன்சிறிதுநாளின
முன்பாகக்கொடுப்பதொருதலமுளதங்கதுபிறர்க்குமொழியோநம்பா
லன்பாகவினவுமவர்க்கருள்செய்வோமெனவுரைப்பவருளாயென்று
மின்பாவுஞ்சடைமுனிவன்பாதமலர்குடிதலும்விளம்பாநின்றார். ௧௮

பொன்மலைக்குங்கயிலையெனும்வடமலைக்குந்தென்மலைநின்பொதிகைவாசத்
தென்மலைக்குவடமலைநந்திரிகூடத்திருமலைமேற்செம்பொன்னூட்டு
மின்மலைக்குமணிகொழிக்கும்வடவருவிக்குற்றாலம்விபுலமீன்ற
நின்மலைக்குமெமக்குமொருபொதுத்தானமுவருக்குநியமத்தானம். ௧௯

புண்டரிகத்தயனுமைப்பவத்தலத்துப்புரந்தராதியர்கள்போந்து
மண்டுபெருந்தவம்புரிந்துமாறுதபாதகக்கண்மாற்றுநதானம்
விண்டலத்தோர்மதிதலத்தோர்வினைதீர்க்குங்கைவினைதீர்க்குந்தானந்
தண்டமிழ்சொன்மாமுனியேதருமமொன்றுகோடியெனத்தழைக்குந்தானம். ௨௰

செல்வம்வேண்டினர்க்கருளத்திருநமைக்காத்திருப்பதனுற்செங்கண்மாலுங்
கல்விவேண்டினர்க்கருளக்கலைவாணியுறைதலினுற்கமலத்தோனும்
வெல்விசையங்கொடுப்பதற்குக்கொற்றவையுமகப்பொலிவால்வேள்விவேந்து
நல்வடுகச்செம்மலுங்காத்துறைதானந்தமிழ்ச்சுருதிநாடிக்குந்தானம். ௨௰௧

முந்நான்குகோமகளிர்முலைத்தடத்துவானவர்கண்முயங்குந்தோறு
முத்தரிகந்தயல்வருவானவர்ப்புயத்திலவர்முலைக்கோடுழக்குந்தோறு
மித்தலத்தின்மகிமையெனக்களிகூர்ந்துதிசைநோக்கியிறைஞ்சுந்தானஞ்
சித்தர்சாரதரியக்கர்கின்னரர்கிம்புருடர்தவஞ்செய்யுந்தானம். ௨௰௨

பந்தாடல்ழங்காடல்கற்பகப்பூம்பநதரிடைப்பசும்பொன்னூசல்
வநதாடல்கங்கைநதிவிளையாடல்பூங்காவின்மலர்கொய்தாட
லிந்தாடன்முகமலரவிந்திரனோடாடுதோறுமிந்திராணி
சந்தாடனமுலைதடிப்பவிதழ்துடிப்பப்பாடியசீர்தழைக்குந்தானம். ஙங

வேறு,

கலைப்பெருங்கடல்களெல்லாங்கருத்தினிலடக்கிக்கையி
லலைக்கடலடக்கிம்பாலருட்பெருங்கடலிலாடு
நிலைக்கடமுனிவகேண்மோநின்மலப்பரையும்யாமுங்
கொலைக்கடகரிசெய்பூசைகொண்டினிதிருக்குந்தானம். ஙச

அந்நகர்க்கணியாமூழியாழிதாங்கெயிலாயோங்கு
முன்னதத்திரிகூடத்திலுத்தரபாகமாக
ஈன்னர்சித்திரப்பூங்கங்கைநமதருளாகத்தோன்றி
முன்னினரெவர்க்கும்பாவமோசனஞ்செய்யாநிற்கும். ஙரு

தேனமர்திரிகூடத்திற்சித்திரநதிதோய்வார்க்குத்
தானமுந்தவமும்வேறுதருமமுஞ்செய்யவேண்டா
ஞானமும்புகழுங்கல்விகலங்களும்பொருளுமெய்தும்
வானவர்பதமும்வேண்டும்வரங்களுங்கொடுக்குமாதோ. ஙசு

உத்தராமுகமதாகவுயர்திரிகூடந்தோன்றுஞ்
சித்திரகங்கைதம்பாற்றிருமணங்காணவேண்டி
யித்தலைபோந்ததங்கனெய்துதற்கருளுகின்றோ
மத்தலையர்ச்சிராடியருந்தவம்புரிதியென்று. ஙஎ

வேறு.

வேடனொருபன்றிதுடர்ந்தொருதுறையில்வீழ்ந்துபெற்றவீடுபேறுந்
தேடருமெய்த்தலமூர்த்திதிரிகூடவடவருவித்தீர்த்தஞ்சத்தி
பீடமகிமையும்வேதக்குறும்பலாமான்மியமும்பிலையாளு
மாடல்பெறுஞ்சிற்பொதுவினதிசயமுந்திருவாக்காலருளிச்செய்து. ஙஅ

ஓதியபேருலகனைத்துமொடுக்குமுறையொடுங்கியநாளொடுங்காதாகி
நீதிபெறநமதருளானின்றபுடார்ச்சுனபுரத்துநின்றியாமே
சோதிபெறுதிருமுகமாயிரம்படைத்துத்தரும்புவனத்தொகைகளெல்லாம்
போதிலுறையயனுகிவகுத்தருளித்திருமாலாய்ப்புரக்கின்றோமால். ஙகூ

மாலாகியிருக்குநமைப்பணிந்துசிவவடிவாக்கிமகுடமென்னு
நூலாதியாகமத்தாற்பூசைசெய்துநுவலுமணக்கோலங்காண்டி
மேலானதிரிகூடச்சாரலிடையைஞ்ஞூறுவேள்விசெய்து
நாலானமறைபரவுநம்பெருஞ்சித்திரசபைக்கேநடனங்காண்டி. ஙய

முற்றமலையொரோமுமினி துறையுங்குற்றாலமுறையிற்போற்றிச்
சாரமலைத்தடக்கோட்டி துறைநியெனவருளுதலுந்தம்பிரானை
வாரமலைக்கடடைக்குமலர்க்கையாற்பரவிநின்றவரம்வேறொன்று
வீற்றமலைவாதாவிக்கிடர்துடிப்பவலம்புரிந்தவேண்டிப்பின்னும். ௱௧௧

தொழுதபுனல்வேண்டுதலும்பொன்னிநதிசென்னிமதித்தொடையார்நல்க
வொழுகுநிறைப்பெண்டகைமாராண்டகைபின்றவீத்தேகனுரித்தோவென்றுள்
ளெழுதகைம்மன்பனிவனிருவினைவென்றவனெனவேகிளப்பமீளும்
பொழுதகுறித்தருளுமெனப்புலியிலவன்கைகாட்டும்பொழுதேயென்றார். ௱௧௨

நம்பாருள்கொண்டுவிடைகொண்டேகித்தென்புலியினவைகண்மாற்றிக்
கும்பமுனிதன்பொதியர்தென்பொதியமாமலைமேற்குறுகுங்காலை
யும்பர்வடநிசைபோலத்தென்றிசையுமொத்ததகோவனத்தாலோர்நா
ளெம்பெருமானமர்ந்தியுவர்தேறமொருதலையினிருதட்டேபோல். ௱௧௩

வேறு.

ஒருநிண்புலிகோணறநிற்றலினும்பரெல்லாம்
வருமம்பனைமாலிகைமயத்துவணங்கியார்த்தா
ரிருமக்குலிரேருநியையோதியரின்றபொன்னைத்
திருமக்கையர்பொற்பினையொப்பனைசெய்வதானார். ௱௧௪

அகிலாண்டமுமீன்றழகுக்கழகாகினுளைத்
திகழ்பேரொழிலுக்கெழில்செய்வனசெய்யநேர்ந்தா
ளிகமேறுதபேதைமைமாதரியற்கையாலோ
சகமேலளவுக்களவாமவடன்மைதேர்ந்தோ. ௱௧௫

ஞாத்தையவர்க்கமுதாக்கியகண்டமெல்லாஞ்
சாலப்பெருமங்கலமாக்கியதையலாட்குக்
கோலத்திருமேனியைமங்கலக்கோலஞ்செய்யக்
காலத்தின்முன்னெண்ணியபூசைக்கடல்சமைந்தாள். ௱௧௬

கங்கைப்புனலாட்டிமணிக்கலைநீறுசாத்தி
யங்கைத்திருமாமலர்செய்தவருந்தவத்தாள்
மங்கைக்கணிசெய்வதபோன்மலர்மாமடந்தை
செங்கைப்பலசெம்பொனணிக்கணிசெய்வதானாள். ௱௧௭

காராகெருக்குழலாகியகங்குன்மீதே
தாராகணமொய்த்தெனப்பலதார்கள்சூட்டி
யோரடியகொண்டலின்மின்றனையிட்டதேபோற்
சேரடுதலைப்பணியுத்திதிருத்தினளே. ௱௧௮

கருமைக்குழல்விண்டுனிதண்டுளிகாட்டுமோபோற்
பருமுத்தணிதொங்கலைசத்தொருபட்டம்வீக்கி
யொருமைபபிறைமேலிருபாறுவுநித்தன்மான
விருமைத்திலதந்திருநெற்றியிலிட்டமோதோ. ௱௧௯

குமிழ்முத்தமணிந்தனள்கொவ்வைமுகிழ்க்குமுத்தி
னமாத்தவமூசியினிற்குமோராரமேபோற்
கமழ்பொற்குழையிற்குழைசாத்தினள்காலநீல
முமிழ்கட்கடலிற்புடைபாய்சுறவொத்தலாவ. ௩௨௰

வயிரப்பணிதங்கியகொப்புவயக்குகின்றாள்
பயில்பொற்குழையூடுருவிக்குழல்பாய்கண்வாளி
கயிலைத்தனிநாயகர்சிந்தைகவற்றுமென்றோ
வெயிலைப்பொருவாளிதனைப்பொருமென்றதாலோ- ௩௨௧

வருமங்கலநாணணிமல்குவலம்புரிக்கே
திருமங்கலநாணணிதாங்கமதாணிசேர்த்தித்
தருமங்கலமானநடங்கைதனைத்தினஞ்சூழ்
பெருமங்கலமார்கடகஞ்சரிசங்குபெய்தாள்- ௩௨௨

மதர்வைத்தவிழிப்பொருகாரைவலஞ்செய்கார்போ
லுதிக்கெழுநஞ்செனவஞ்சனமொன்றுதீட்டி
விதுவைத்தனவெள்ளிவளைக்குமுகிழ்த்தகஞ்சங்
கதிர்வைத்துவிரித்தனபோற்கணையாழியிட்டாள்- ௩௨௩

எழுமுத்தலமீன்றவைமுற்றுவதின்றிமுற்றுச்
செழுமுத்தமுலைத்துணைமுக்கணர்செவ்வியெய்தக்
கெழுமுத்தவமெய்தினையென்றுகிளத்துபைம்பூண்
முழுமுத்தமிடற்கிணைமுத்தணியாரமிட்டாள்- ௩௨௪

பொருகுன்றின்முளைத்தகரும்பொடுவல்லிபோலு
முருகுந்தொயில்குங்குமமான்மதமொன்றுதீட்டிப்
பருமம்பெருமேகலைதந்துபனிக்கலாப
மருமென்கலைசுற்றிமருங்குலைவாட்டிநின்றாள்- ௩௨௫

போதுங்கலனுந்திருமேனிபொதிந்துநின்றீ
றோதின்றுசெயுங்கொன்மருங்கெனவேங்குமாபோற்
பாதங்கள்புலம்புசிலம்பொடுபாதசால
தேம்பொலிகிண்கிணிதண்டைகிளர்த்தியிட்டாள்- ௩௨௬

வேறு.

பொருப்பினுக்கரசனீன்றபுனைமலர்க்கொம்பனாளை
யருத்தியால்வலங்கொண்டேகியவரிமணிக்காப்புச்சாத்திக்
கருப்புரதீபஞ்சுற்றிக்கண்ணெச்சில்கழித்துநின்று
டிருப்பதம்பரவிமுன்னேதிருப்பதம்பெற்றசெல்வி. ௩௨௭

முனிவரொழுவர்போந்துமுகூர்த்தம்வந்துற்றவாற்றாற்
பனிவரையரசைநோக்கிப்பாவையைக்கொணர்வாயென்ன
னனியவனருளாற்போந்தளிர்வளைக்குலத்துமாதர்
புனிதநாயகிமுன்கூறப்பொருக்கெனவெழுந்தாண்மன்னோ. ௩௨௮

செல்வியுமதரவாணிதேவியுமெழுந்தபோற்றி
மெல்விரற்றளிர்க்கையேந்தவியன்வலமிடப்பால்பற்றி
வெல்விரிகாலைமாலையேத்துவார்தமக்கேசெல்வங்
கல்வியுந்தியுநல்குங்கரதலத்தியற்கைகாட்டி. ௨௨௧

அலத்தகமுழுத்துதாளிலயிராணிமலர்கவே
பலப்பலசிலம்புதண்டைபயப்பயப்பயவென்றார்ப்பத்
நிலத்தமைதூசுதாங்கச்செயமகண்மருங்குகாப்ப
கலைத்தருங்கங்கையாதிநங்கையர்கவரிகாட்ட. ௨௯௰

உருப்பசிளாஞ்சிதாங்கயோகினியடைப்பையேந்த
விரிப்புறுகடைப்பாவாடைமேனகைவிரிப்பயாண்டும்
பருப்பதக்குலத்துமாதர்பனித்துளிதெறிப்பவேதந்
திருப்பல்லாண்டிசைப்பத்தெய்வச்சிலதியர்சுண்ணந்தூவ. ௨௯௧

மின்னரமகளிர்பாடக்கிரியரமகளிர்வாழ்த்தப்
பன்னகர்குலத்துமாதர்பன்மணிவிளக்கமேந்த
வன்னமென்பெடையுநாணவணிமலர்க்கொம்பர்நாப்பட்
பொன்விளங்கொடிபோலொல்கிப்பொருப்பிளம்பிடிபோற்சென்றாள். ௨௯௨

குலத்திரள்கொங்கைகாட்டக்குணத்திரள்வடிவுகாட்ட
நலத்திரள்சுமந்ததொய்யுநாண்மலர்க்கொம்புபோல
நிலத்திடையிறைஞ்சியேகிநீளரித்தவிசிலெம்மான்
வலப்புறத்திருந்தாள்வல்லிமதியுடன்விதிசேர்ந்தென்ன. ௨௯௩

மண்பெற்றார்சுவர்க்கம்பெற்றார்வரைபெற்றார்திரைகள்பெற்றார்
விண்பெற்றார்புவனமூன்றுமிகப்பெற்றார்மகப்பெற்றாரிற்
பெண்பெற்றார்க்கெய்தாப்பேறுபெற்றனனிமையவேந்தன்
கண்பெற்றான்றபெற்றார்காட்சியாற்பெறும்பேறெல்லாம் ௨௯௪

இன்னணநிகழுமெல்லையிமையவெற்பரசிமேனை
மின்னனார்தசும்பிலேந்தும்விசும்புதோய்கங்கைநீராற்
சின்னவெண்பிறைசேர்மோலித்தேவனெம்பெருமான்கஞ்சப்
பொன்னடிவிளக்கிச்சாந்தாற்பூவினாற்பூசைசெய்தாள். ௨௯௫

அந்நிலையிமையவேந்தனருந்தவக்கொழுந்தின்செங்கைக்
கன்னியம்புயத்தைமுக்கட்கருணையங்கடலின்பாணி
மன்னுறவமைத்துப்போற்றிமங்கலச்சொல்லால்வாழ்த்திப்
பன்னெடும்புவனவாழ்க்கைப்பயிர்தழைத்திடநீர்வார்த்தான். ௨௯௬

முழங்கினமுரசபேரிமுழங்கினதடிதடாரி
முழங்கினசுருதிவேதமுழங்கினபணிலநாத
முழங்கினமுனிவராசிமுழங்கினாடனதே
முழங்கினகுரவையோசைமுழங்கினதிசைகடோறும். ௨௯௭

ஆடினர்பவுரிமென்மேலார்த்தனர்சிரமேற்செங்கை
சூடினரனந்தானந்தத்துறைபடிந்தாடியாடிப்
பாடினர்பரமகீதம்பரவினரழியாவின்பந்
தேடினரகிலநாதன்றிருமணங்கண்டோரெல்லாம். ௱௩௮

தாமரையுழவன்வேதச்சடங்கெனுந்திரளேர்ப்பூட்டி
யோமமன்னிலஞ்செய்யாகவுயர்திரவியங்கள்வித்திக்
காமருதேனுநெய்யாங்கமழ்புனல்வார்ப்பவார்ப்ப
மாமகப்பயிராஞ்செந்தீவலஞ்சுழித்தெழுந்ததன்றே. ௱௩௧

குணின்முரசியம்பவொற்றைவலம்புரிகுளிறவாணி
துணைவனேசடங்குசெய்யச்சுருதிமங்கலநாண்சாத்தி
யிணையிலிமுக்கணெம்மானிமையமான்மலர்க்கைபற்றி
மணநிறைகோலங்காட்டிவானவர்வாழ்த்தநின்றார். ௱௪௰

பிலத்துறைவேந்தனோராயிரப்பெருந்தீபமேந்த
மலர்த்திருமகள்கொண்டாடவாணிமங்களங்கள்பாடக்
குலக்கிரிமகள்பின்னேகக்கொழுந்தழல்வலங்கொண்டேகி
நலத்தகுபொரிகடுவிநயம்பெறுவேள்வியாற்றி. ௱௪௧

செப்பொடுபணைத்தகொங்கைத்திருப்புயங்காணுந்தோறுங்
கொப்பொடும்பொருவாட்கண்ணாள்குலத்தொடுபணைப்புக்காட்டக்
கைப்பிடித்தருளுங்கையாற்கால்பிடித்தம்மிசேர்த்தி
மெய்ப்புகழ்வசிட்டன்றேவிவிண்ணிடைப்பரவக்காட்டி. ௱௪௨

மருமலர்விதானவேள்விமண்டபங்கடந்துள்போகித்
திருமணவறையின்மேவித்தேவியுந்தாமுமாக
வருங்மணக்கோலக்காட்சியருளிவீற்றிருந்தார்மன்னோ
கருதுவார்கருதும்வண்ணங்காட்சிதந்தருளும்வள்ளல். ௱௪௩

வருக்கையின்சுளையும்பாலும்வாழைமென்கனியும்பாகு
மருத்திமாம்பழமுந்தேனுமமிழ்தெனத்திருத்தியன்பாற்
பருப்பதத்திறைவன்செம்பொற்பாசனத்தமைப்பநாதர்
திருக்கைதொட்டுவந்தோமென்றார்செகமெலாநிறைந்ததம்மா. ௱௪௪

வாசனைச்சுகந்தம்பன்னீர்மணங்கெழுதெய்வச்சாந்த
மீசனெம்பெருமான்முன்னரியற்றினுவப்பப்பின்னர்ப்
பாசனநிமலச்சேடம்பரிசனத்தவர்களேந்தத்
தேசனதருளாலுய்த்தான்றிருமணக்குழுவுக்கெல்லாம். ௱௪௫

நிமலர்பாற்கழித்தசேடநின்மலவுணவைத்தேவ
ரமரர்கோன்முனிவர்பூதருருத்திரரயன்மாலாதி
யிமவானக்கிறைவன்மனையேனையசுற்றத்தாருந்
திமிலமுற்றருந்திச்சென்னிதெளித்தனர்களித்தார்மன்னோ. ௱௪௬

சொல்லறைநின்றார்சிரந்தரவறத்திருந்தார்பேறா
மில்லறம்புரிவார்தம்மாலையவதாலித்தவெயாக்கு
நல்லறமெனவேவாறருளாலமுந்தெளியக்காட்டி
மெல்லறலனையகூந்தன்மணந்தவிர்த்திருந்தாரெக்கோன் ௱௪௭

மாமனூர்பாவத்தெய்வமலையாட்டிமகிழவைகிச்
சேமனூர்புனைந்தவேணித்தங்களுமாமார்வேண்டக்
காமனூராவிமீட்டுக்கவுரியுந்தாமுமாகப்
பூமனூரணனும்போற்றக்கயிலையம்பொருப்பிற்போந்தார். ௱௪௮

திருப்பொலிமழுவாளங்கைச்சிவபிரான்கயிலைமேவி
மருப்பொலிகுழலுந்தாமுமடங்கலாசனத்தவைகி
யுருத்திராயன்மாலாதியும்பர்மாமுனிவர்க்கெல்லாம்
விருப்பொடுசிறப்புநல்கிவிடைகொடுத்தருளப்போந்தார். ௱௪௯

மயிலையாலவாயின்மேயகண்ணுதற்கருணைமேகஞ்
சயிலமின்னொருபான்மேவித்தண்ணளிபொழிதலாலே
பயில்வனவூர்வநிற்பபறப்பனநடப்பவாதி
யுயிரெலாம்பயிராயீறாமுலகெலாந்தழைத்தமாதோ. ௱௫௰

மவுனநான்மவுனமுற்றார்மடந்தையைமணந்தஞான்றே
பவனமேல்விண்மேனமண்மேற்பரந்தபாதலமேன்மற்றைப்
புவனமேலுள்ளோரெல்லாம்புவனபோகங்கள்பெற்றார்
சிவனதுசெயலேயல்லாற்செயலுண்டோவுலகுக்கெல்லாம். ௱௫௧

சூரினாலலக்கணெய்தித்துயர்பெரிதாற்றாராகி
மேருவின்மறைந்துறையும்விரிஞ்சன்மான்முதலாம்விண்ணோர்
காரியல்கண்டத்தண்ணல்கயிலையின்முறையிட்டார்க்கு
சேரிழையொருபால்வைகுநின்மலன்கருணைகூர்ந்து. ௱௫௨

முந்திராசியமுமாகமூவிருமுகமாய்த்தோன்றிச்
செந்தழற்பொறிகளாறுதந்தனர்தேவருய்ய
வந்தமாப்பொறியைக்காலுமக்கியுங்கங்கைசேர்ப்ப
வுந்தவானதிகொண்டேகிச்சரவணத்துய்த்ததன்றே. ௱௫௩

இமையமேற்சரவணப்பூந்தடத்தினிலெய்திவாசக்
கமலமேற்பொறிகளாறுங்கண்ணுதலருளினாலே
யமர்தருகுழவியாறாயாறுமீன்முலைப்பாலுண்டு
தமரீருலகும்வாழத்தழைத்திடவளருங்காலை. ௱௫௪

எந்தையாருடன்பூவாவியெய்தினளிமையச்செல்வி
மைந்தரொன்றெப்பவாறுவடிவமும்படிவமொவ்வொரு
யந்தமார்முகங்களாறுமம்பிகைமுலைப்பாலுண்டு
கந்தவேளெனப்பேர்கொண்டுகயிலையின்வளர்ந்தான்மன்னோ. ௱௫௫

அன்னவனண்டகூடமலைத்தெழுதகர்மேற்றாவி
நன்னவவீரர்சூழமேட்மேலைஞாயிற்றன்னைப்
பொன்னமர்பொருப்பும்பொன்னாட்டிறைவனும்புத்தேள்யாரும்
வென்னிடக்கதிருடாத்திவிதிசிறையமைத்துமாற்றி. ௱௫௬

மிறைபுரிகொடுஞ்சூரிட்டவிண்ணவர்சிறையைமீட்பான்
முறையிடுமகவானாதிமுதல்வர்பாலிரங்கிமுக்கட்
கறைமிடற்றண்ணலேவக்கண்களாயிரத்தோனை
சிறைமயிலூர்ந்துசெர்தீச்செல்வனுஞ்சேவலேந்தி. ௱௫௭

உருத்திரர்கொடுத்ததானைபதினொருகரத்துமோங்க
வருத்தியாலகிலநாதனருளும்வேலொருகைதாங்கிக்
கிருத்திமத்தானைவெள்ளங்கிளர்தரத்துணைவர்சூழ
மருத்துவர்முதலோர்நோய்க்குமருத்துவனெனவேபோந்து. ௱௫௮

வண்கடல்சுவற்றிக்குன்றமெறிந்துவல்லசுரர்சேனைத்
தெண்கடலனைத்துஞ்செவ்வேல்வடவனற்கீந்துகுத
நன்கடல்புரிந்துவீழ்த்துநனிகடவுளரைமீட்டுப்
பின்கடன்மிசையோர்பானுப்பிறையுடனுதித்தாலென்ன. ௱௫௯

மரகதக்கலாபதுங்கமணியணிவிழிமயூரக்
குரகதமுகைத்துவெண்பாற்குக்குடத்துவசமோதிச்
சுரர்குழாத்தேகிச்செந்தூர்த்துறையெழீஇத்திரிகூடத்துத்
தரணிபீடத்துநீங்காத்தந்தையார்பாதம்போற்றி. ௱௬௰

புரந்தரன்மகளைவெற்பின்புள்ளிமான்மகளைவேட்டுப்
பரங்கிரிதணியன்மேவிப்பரவுகுன்றிடந்தோறாடி
வரங்கெழுகயிலைநண்ணிக்கந்தவெற்புறைதன்மான
வரன்றிரிகூடம்போற்றியிலஞ்சியிலமர்ந்தானையன் ௱௬௧

தேவர்தன்றேவர்தேவன்றிருமணப்பொலிவீதென்று
தாபதர்க்குணர்த்தப்பின்னுந்தமிழ்முனிதென்பாற்சென்று
மேவரும்புதுமையாவுந்தொகையுறவிளம்பாநின்று
யாவலின்விரிவாயெங்கட்கருளெனவறைவான்சூதன். ௱௬௨

உ-வது—திருமணச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௨௱௰௫.

---

## ௩ வது-திருமால்சிவபிரானானசருக்கம்.

ஐந்நூற்றிரட்டியுடனிருநாலண்டமரசுசெயுஞ்சூர்மாய்ப்பவடல்வேலேந்திச்
செந்தின்மாநகரில்வருகுமரவேட்குச்செங்கண்மாலயன்றேவர்சபையினூடே
விந்தைவான்சுரர்குருவாய்புதைத்துப்போற்றிவிண்ணப்பஞ்செய்ததெனத்திருக்கு
றருலத், தெய்வதமால்வடிவுசிவவடிவமாகவிருந்தருளுமகிமையெடுத்திசைப்பதா
ன்.

கற்றரும்பலகலைநூற்கவிவல்லோர்க்குங்கதிபுகன் முத்தமிழுடையீர்கயிலைச்சாரன்
முற்றுறினுயர்ந்தகுறும்பலவின்மேன்முதலைப்போலுயர்கருணைமுதலுமாதிக்
குற்றாலம்போலுயர்ந்ததலமுஞ்சைவக்குறுமுனிபோன்மாதவனுந்திரிகூடத்து
வற்றாதவடவருவிகளுக்குநதெய்வவாநதியுந்திரிபுவனவரையிலுண்டோ. ௨

மூவுலகும்பனிவரைமேன்மொய்த்ததாலே முந்தியதிசைதெற்குயர்ந்துவடபாற்றாழ்ந்த, பூவுலகின்பெருங்கோட்டந்தவிர்க்கவேண்டிப்புராதரன்மாலயன்முதலாம்வானோர்சங்கம், யாவுமெதிர்நிற்கவுநீபோதாயென்னவெம்பிரான்பிறைமவுலித்தம்பிரானும், தேவர்பிரான்றிருவாக்காலருளிச்செய்தான்சிறியதொருகுறுமுனிவன்பெருமையம்மா. ௩

திரிகூடவிரித்ததமிழ்முனிக்குநாதன்மிக்கபுடார்ச்சுனபுரத்துமாலாமெம்மைப்
புரிகூடமுடித்தசடைப்பரமனுக்கிப்பூசைசெய்துவதுவைநடங்காண்பாயென்ன
வரிகூடவயன்றேடிக்காணுறாத வள்ளலார்திருவாக்காலருளிச்செய்த
திரிகூடவரைநோக்கிச்சிந்தைகூடச்செய்தவமுங்கைகூடச்செல்லுகின்றான்- ௪

வேறு.

வாதனருளாலிமையமலைகடந்தகலைகடந்தமலையயோகி
பாதநுறைகருமகண்டமொன்ப துபாசத்திலெண்மர்பாகநீக்கி
விரதரொதிக்குமரிகண்டமாயிரம்யோசனைக்குள்வந்துவிசையத்தண்டங்
காதலைத்துமணிவிளக்காக்கவுஞ்சவரையிருட்படலங்கடந்தபோகி. ௫

ஈசைகுமரப்பெருமானேநெடும்படைவேலாலிமைப்பினீறுச்
சிந்திடுதியெனச்சாபவாக்கமைத்தக்குடிமிதொறுந்தெய்வச்சாபக்
கந்தாஞ்சேர்கேதாரவரையணுகிச்சிவபெருமான்கழல்கள்போற்றி
மைந்தனுந்தன்றேவியும்வாழ்விதர்ப்பநாடணைந்தவளர்காசிமன்னி. ௬

மேருவுடன்பனிப்பாகியாழ்முனிவன்புணர்ப்பதனுல்விந்தஞ்சோம
சூரியரைமடுத்தலகினெறிதடுத்தக்குறுமுனியுந்தன்னுதோங்கி
சேசியர்க்கும்பூரியர்க்குமுன்றிரண்டொன்றெனத்தேருநெறியுந்தீர்ந்து
சிரியரல்லார்க்குவாதசெல்வம்போலிறுமாந்துதிமிர்த்ததன்றே. ௭

காவிந்தவரைவளர்ந்தெவ்வளவோவவ்வளவுங்கையைநீட்டி
யரவிந்தமசலமிசைக்கவித்ததெனக்குடிமிபற்றியவனிதாழ்ப்பத்
தரவிந்தருறைமனத்தாயுய்வதருளெனறுசெலனிதாழ்த்ததம்மா
வரவிந்தமுறையெனமேல்வாமுன்னேயறிவர்வந்தாலறிவர்நீமோர்- ௮

செம்புவரைதனிலேநிவெள்ளிவரைக்கிவ்வழிநான்செல்லுங்காறும்
வெம்புவரைக்குடுமிபடிந்நிவ்வாறுகிடத்தியெனவிளம்பியாதிச்
சம்புவரைகாண்குலாஞ்சாநிமிருசாநிகள்சஞ்சரித்தான்போய்
நம்புவரைச்சலம்வருந்தம்வில்வலனவாதாவியனாண்ணிருளுள்- ௯

உருத்திராவனந்தனக்குவருவதனைரான்வருவதணர்ந்தமேறுள்
விருத்திராசுரனெனுநாம்மேலோனைமுடிப்பதற்காவேலையுண்ட

குருத்திராவடமுனியைவெல்லவிதுதருணமெனக்குறிப்பினேர்ந்து
கருத்திராவணமிருண்டவில்வலன்மெய்த்தவவேடங்கரவிற்பூண்டான். ௰

குறுமுனிமுன்போய்விருந்துவிளம்பியொருசருத்தையுய்த்துக்குறைதீரன்ன
மறுமுனிதண்டுலத்தமைத்துக்கருணைவாதாவிதனைமறிசெய்தாக்கி
யுறுமுனிவுவிருப்பகன்றுறுண்டதற்பினயன்வரத்தாலொருகாற்கூவக்
கறுமுனிமுன்கறியானுன்மறியாகிமுனியுதரங்கலக்கநின்றான். ௧௧

அன்னவன்வஞ்சனைபோர்த்துபரமன்வரத்தான்முனிவனகங்கையாலே
தன்னகடுதைவரலுந்தலைவனுண்டகாளமெனச்சமித்தான்பின்னோன்
முன்னவன்வெஞ்செருப்பயிலமுன்னுதலுந்தருப்பையினுன்முடித்துவீட்டித்
துன்னுபுனற்கோதமியிற்படிந்தாடிமல்லிகார்ச்சுனமும்போற்றி. ௧௨

ஆனதுங்கபத்திரிநன்னதிபடிந்துகாஞ்சிநகாருணைபோற்றி
ஞானதுங்கர்முத்தாறுவதிருமுதுகுன்றமும்பரவியப்பாலேகும்
பீனகும்பசம்பவனைவில்வலன்வாதாவிகொடும்பிரமச்சாயை
கானமெங்குந்தொடர்ந்துதொடர்ந்தலைத்ததாலாறலைக்குங்கள்வர்போல. ௧௩

அங்கிநந்துமறைச்சிறுவரிருவர்போலுருவெடுக்குமடுக்குநீங்கு
மெங்கிருந்துமிகல்விளைக்கும்பழிகுறிக்கும்வழிமறிக்குமிவைகடேர்ப்பான்
கொங்கிருந்துசிவபரனைக்குறுமுனிபூசனைபுரிந்தான்குலிசவேந்தன்
பொங்கிருந்தண்காவிரிக்காப்புகலிதனிற்கயமுகனைப்பூசைசெய்வான். ௧௪

வேறு.

ஆவினிலைந்துபலோதகமைந்தோடைவகைத்திரவியமைவகையமிர்த
நாவிமதங்கமழ்சாந்தமுமாட்டிநற்கலைபூண்மலர்மாலையணிந்து
ஆவியபாளிதபாயசமன்னஞ்சுவைதருமோதகம்வடையவல்கன்னன்
மேவியபண்ணியமுப்பழமபமிக்குநிவேதனமொக்கவமைத்து ௧௫

தூபமுடன்பலதீபமியற்றிச்சோதிதரும்படிமங்கலமேற்றி
மாபலசத்திரசாமரமேந்திமறைபயிலாயிரநாமமுமோதித்
தாபனமந்திரவோமமியற்றிச்சயசயசயவெனவானவர்வாழ்த்தத்
தீபமெனுங்கயமாமுகவாழ்வைச்செஞ்சரணிற்சரணென்றுபணிந்தான். ௧௬

படலையின்மலரறுகணிபவசரணம்பனிவரைமகள்பெறுதனிமுதல்சரண
நடமிடுபரிபுரபதயுகசரணநிதிபதிநிதிபதியதிபதிசரணங்
கடன்மடையெனவருமதமலைசரணங்கயமுகநிசிசரன்வயவரிசரணங்
குடநிகர்தடவயிறுடையவசரணங்குணதரசிவசுதகணபதிசரணம். ௧௭

முடிபடிதெரிவருமுதியவசரணமுறைதெரிமறையவரிறையவசரணம்
வடிவினிலுயரியபெரியவசரணம்வலவையைமருவியபுயதரசரண
நெடியவன்விழிதருநெடியவசரணநினைபவர்பவமறநினைபவசரண
மடியவர்வினைகெடவருள்பவசரணமரகரசிவசுதகணபதிசரணம். ௧௮

வேறு.

னைவருச்சனைசெய்வான்முன்னெழிற்கரமைந்தானங்கு
கனவரைப்புயமுந்தோன்றக்கடகரிமுகத்தெங்கோமான்
றினகரோதயம்போல்வந்தான்றேவர்கோன்விழிகளெல்லாம்
வனருகக்காடுபோலமலர்ந்தனன்வணங்கிவீழ்ந்தான். ௧௯

பாகசாதனனையன்பாலங்குசபாசச்செங்கை
யாகுவாகனத்தமுக்கணைங்கரத்தானைநோக்கி
யோகையாலுனதுபூசைதோத்திரமுவந்தோம்வேண்டும்
வாகைசேர்வரங்கள்கேண்மோவென்னலும்வணங்கிவாழ்த்தி. ௨௰

பாதனமுலையாள்பாகப்பரன்றிருப்பள்ளித்தாம
நந்தனவனங்கள்வாடிநலிந்தனதழைக்கும்வண்ணம்
சந்தனவனங்கள்சூழ்ந்தனிவரைமுனிவன்கைமேல்
வந்தனள்பொன்னியீண்டுவரப்பணித்தருள்வாயென்றான். ௨௧

காண்டகுமண்டங்காக்கையெனக்கயமுகத்தோன்செல்லச்
சேண்டகையண்டங்காக்கைத்தேவனென்றுணரான்கும்பன்
கண்டகைநீட்டியோச்சக்கும்பநீர்தண்டத்தாலே
பாண்டகைகவிழ்ப்பப்பொன்னியருள்வழிப்பார்மேற்புக்காள். ௨௨

புக்கபாரிடந்துபாரப்பொருப்பினையெடுத்தவாரிச்
சக்கரஞ்சங்கமேந்தித்தடம்பணைமருதமுந்தி
செக்கநீர்ப்புள்வாய்போழ்ந்துநெடியபேரம்பிநாலே
மைக்கடல்கிழித்துநேமிவளருமால்பொருவும்பொன்னி. ௨௩

பொன்னியைப்பிரித்தபின்னைபூசுரப்பிள்ளையாகச்
சென்னியிற்செங்கைதாக்கச்சேறலுமஞ்சினன்போ
லன்னியனணியனாகியாசைகடோறுமோடிப்
பன்னிசைமுனியோடாடல்பலபலபயின்றனையன். ௨௪

பாரின்மேற்படர்ந்துமேழுப்ரவலஃமற்கடந்தம்பார
மேருமேன்மிதித்தத்தாவிவிண்ணின்மேற்குதித்தம்வேண்டுஞ்
சாரிமேல்விளைத்தானையன்றமிழ்முனியினைத்தானம்மா
வாரியன்மகிமைபார்க்கிலாதியம்பரனேயென்றான். ௨௫

குறுமுனிமெலிவுநோக்கிக்குஞ்சரமுகத்தெங்கோமா
னுறுதனிப்பிறைவெண்கோடுமுடையபாதமுமுக்கண்ணுஞ்
செறிதிருப்புயங்களுன தஞ்செழுமலர்க்கரமோராறு
மறுகணிமுடியுந்தோன்றவருளொடுந்தோன்றினின்றான். ௨௬

நம்பியோவிதற்காவந்தானுனிதோகொடுமைசெய்தே
னெம்பிரான்சென்னிதாக்கவெடுத்தகையிதுவோவென்று
வம்புநன்சென்னிசெந்நீர்பதிபடநின்றுதாக்குங்
கும்பமாமுனியைநோக்கிக்கும்பமாமுகத்தெங்கோமான். ௨௭

மாதவஞ்சேல்சென்னிவருந்தநின்சென்னிதாக்கு
மீதுவந்தனையாக்கொண்டோமிவ்வணம்புரிவார்க்கெல்லாங்
கோதிலாக்கதிகள்செல்வங்கொடுக்கின்றோநினக்குவேண்டுங்
காதல்சேர்வரங்கள்கேண்மோகருதினதருதுமென்றான். ௨௮

நீகமண்டலத்துநன்னீர்நிறைத்தருளெனலுநாதன்
மேகமண்டலத்துமுந்நீர்மிசைந்தெனத்துதிக்கைநீட்டி
மாகமண்டலத்துவாரிமானுகாவிரிநீர்வாரிக்
காகமண்டலத்திற்சாய்த்தகரகமண்டலத்திற்பெய்தான். ௨௯

கரகநீர்ப்பெருக்கும்பார்மேற்காவிரிப்பெருக்குநோக்கிப்
புரகரனருளின்மிக்காம்புதல்வன்மெய்யருளென்றேத்திச்
சிரகரகம்பஞ்செய்துதெண்டனிட்டிறைவனுக்
குரகதம்வடபாற்செல்லக்குறுமுனிதென்பாற்சென்றான். ௩௰

சுழியெறிதரங்கப்பொன்னித்துறைகெழுகுடந்தையாரூர்
வழிபுனற்றிருவையாறுவலஞ்சுழிமருதூர்மாயன்
விழிதுயிலரங்கங்காவைவெண்காடுமறைக்காடேத்திச்
செழுமறைப்பொருளார்தொல்லைத்தில்லைமாநடனம்போற்றி. ௩௧

தருபுனற்செழுங்காவேரிச்சங்கமத்துறைநீராடிக்
குரைகடற்சேதுமேவிக்கொடுங்குன்றங்கானைபுத்தூர்
பரமோடகமாடானைபரங்கிரிமதுரைநெல்லைத்
திருநகர்பரவிப்போந்தான்றென்றிசைதழைக்கவந்தான். ௩௨

இருஞ்சிவலிங்கமாக்கியிடந்தொறுமருச்சித்தேத்தி
வருந்தமிழ்ப்பொதியமேவிவடதிசைக்கனமுந்தென்பாற்
பெருந்திசைமெலிவுந்தீர்த்தான்பிறவியாம்பிணியைத்தீர்க்கு
மருந்திருமருந்தைக்காண்பானணிதிரிகூடஞ்சார்ந்தான். ௩௩

கவனவெங்கானநீங்கிக்கடவுளர்திருக்குற்றாலம்
புவனமார்குரோசமைந்திற்புகுதலும்புனிதத்தென்றல்
சிவமணம்வீசக்கண்டுதெய்வமாமுனிமுன்செய்யுந்
தவமினிப்பலித்ததென்றுதடம்புயந்தடிப்பச்சென்றான். ௩௪

நூற்கடல்கடந்தமேலோனுவலருந்திரிகூடத்து
மேற்கடுவிடமுண்டாரோவிண்டுவாயிருந்தாரொன்று
✠ நாற்கடவுளரும்போற்றும்நன்னகர்த்திசைகள்சூழ்ந்து
பாற்கடல்கிடந்தாலென்னப்பங்கயத்தடங்கள்கண்டான். ௩௫

---

✠ நாற்கடவுளர்-மனுக்கள்பதினால்வருள் ஏழாவதுவைச்சுதமனுவின்ஆட்சியாகிய இக்காலத்து ஆதித்தியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவர் எனநான்குவகுப்பினராயிருப்பவர். இவர்முறையே பன்னிருகோடியர் பதினொருகோடியர் எண்கோடியர் இருகோடியர் எனமுப்பத்துமுக்கோடிதேவராவார். இவ்வாறுமற்றை மனுவந்தரங்களிலேயும் பற்பலநாமவகுப்பினராயும் பற்பலதொகையினராயும் வகுத்தெண்ணப்படுவார்கள்.

அறத்துறைமுனிவன்வாவியருகுதுறையணுகுங்காலை
நிறைப்புனற்கரைமேற்குவிநெடுந்திரைசுருட்டுந்தோற்றம்
புறத்துறுசமயத்தோரைப்போகெனப்புறங்கையோச்சி
விறற்சிவசமயத்தோரைவிரைவுடனழைத்தன்மானும். ௩௬

செறிதடங்கரையின்மீதேசெழுந்திரைகொழிக்குமுத்த
நறியபூந்திருவெண்ணீற்றுநாயன்மார்வருதல்போலும்
மெறிபுனற்றிரையினூடேயெழுகயன்மறையுந்தோற்ற
மறுபுலச்சமயத்தோர்கள்வயின்வயினொளித்தனமானும். ௩௭

உரவுநீர்த்துறைமண்கேமொலிப்பதுமுனியைக்கண்டே
யரவொலிபரப்புந்தொண்டரார்ப்பொலிநிறைத்தல்போலும்
விரவுநீர்முகதாரைவிண்மிசைப்பொழிதன்முக்கட்
புரகரன்கருணைமாரிபொழிவதுபோலுமாதோ. ௩௮

காஞ்சிருங்கழனிதோறுங்கழைகள்கண்வெடித்தமுத்தந்
தாஞ்சிலர்வருவார்போவார்தாத்திசைகணிகைமார்போற்
பாஞ்சராத்திரிகடம்மைப்பழித்திடுங்கையைப்போலும்
வாஞ்சைசேர்சைவர்க்கண்டுமகிழ்தருமுறுவலபோலும். ௩௯

ஆத்தநெட்டிலையாங்காவியணிந்துநித்திலகிருடிச்
சிரத்தினிற்கதிர்களாயசெஞ்சடைபின்னிச்சென்னி
நரத்துறவளர்ந்தசென்னல்சைவமாமுனியையீண்டு
வரத்தவம்புரிகதோமெனவணங்குமாமுனிவர்போலும். ௪௰

வருபுனற்புகலிவேந்தர்வழுதிநோயொழித்தகாலை
யிருமனத்தருகர்போலுமிடைபழம்பழுத்தவாழை
விரிகனற்புனலிலேடுவென்றருள்விருப்பாஞ்சைவத்
தொருமனத்தவரேபோலுமொளிறுசெம்பழுக்காய்ப்பூகம். ௪௧

வாதிமலர்த்தேனுடியுவந்துதாதாடுந்தும்பி
யாதிதேடத்திலீசனன்பராய்முழுகித்தெய்வ
நீறிவோரைப்போலுந்தேனிதொண்டர்க்கெல்லாஞ்
சோறிவோரைப்போலுமகரந்தஞ்சொரியுங்கைதை. ௪௨

புண்டரீகத்தின்வாவிப்புடார்ச்சுனபுரத்தினெல்லை
யொண்டவமுனிவன்செல்லவுதையவன்மறைந்ததோற்றம்
பண்டுசேர்தக்கன்வேள்விப்பயத்தினுற்சமயபேதங்
கொண்டவர்குழாத்தினின்றுங்குன்றுபுக்கொளித்தல்போலும். ௪௩

ஒழுகுநீர்த்தடங்கடோறுமோங்குசேர்ப்பழனந்தோறுஞ்
செழுமுகையுடைந்துநீலந்திசைதொறுமலர்ந்ததோற்ற
மெழுபெரும்புணரியுண்டான்குறுமுனிவனேயென்னப்
பழுதிலாவிறும்பூதெய்திப்புனன்மகள்பார்த்தல்போலும். ௪௪

தேம்பியதுயிலைநீக்கிச்செங்கமுநீர்க்கண்ணேறக்கி
யாம்பல்வாய்மலர்ந்தலண்டால்வருகெனவழைத்துநீலப்
பூம்பொடிச்சுண்ணந்தூவிப்புனிதமாமுனியைக்கண்டு
கூம்பல்சேர்கமலச்செங்கைகுவித்ததுசிறுபுன்மாலை. ௪௫

எண்பலவுடுக்கள்வானிலெங்கணுமிமைக்குந்தோற்றந்
தண்புவிமடந்தைவாட்டந்தவிர்த்திடவந்தான்றன்னை
விண்புலமடந்தைகாண்பான்விழியிரண்டமையாதென்று
கண்பலகோடிபெற்றுக்களிப்புறக்காண்டல்போலும். ௪௬

மிக்கசெஞ்சடைகள்சூடிமேனியில்வெண்ணீறுடித்
தக்கமாமுனிக்குழாத்துத்தமிழ்முனிவருதல்போல
மைக்கடல்வரைப்புக்கெல்லாமாலையினிருள்விட்டோடச்
செக்கர்வானுடுக்கள்சூழத்திங்கள்வந்தெழுந்ததன்றே. ௪௭

ஆங்கனமமர்ந்துவைகியந்திவந்தனைகளாற்றி
யோங்குசிர்கீறுசாத்தியுண்மையஞ்செழுத்தையுன்னிக்
கோங்கரும்பனையகொங்கைக்கோதையோர்பாகன்றன்னைப்
பூங்கழல்வணங்கியேத்திப்பூசனைபுரியவெண்ணி. ௪௮

சேல்விழித்தடமாம்பாவைதிரைக்கையாற்கொழித்துவீசும்
பால்வளைவாலுகத்தாற்பரிவுடனிலிங்கமாக்கி
நால்வளமலருந்தூவிநம்பனையருச்சித்தேத்தி
வால்வளைமுழங்கியார்ப்பவைகறையெழுந்துபோந்தான். ௪௯

கூனவாரணஞ்சூழ்வாவிகுறுமுனியகலுங்காலைக்
கானவாரணங்கண்முல்லைக்கானிடைப்பறந்துகூவன்
மோனவாரணத்தான்சைவமுனிவருகின்றனென்று
தானவாரணத்தைக்காத்தான்சமையத்தார்க்குணர்த்தன்மானும். ௫௰

தேந்துணர்பூத்தகொன்றைதிருப்பள்ளித்தாமநல்கக்
காந்தள்செங்கரத்தாலீசனருச்சனைபுரியக்காதன்
மாநதளிர்கரங்கள்கூப்பவரிக்குயில்பல்லாண்டோதப்
போந்தளிபயில்புராணப்பொழில்பலகடந்துபோனன். ௫௧

பம்பியபுளினமெல்லாம்பாவபுண்ணியங்களோதுங்
கும்பியுங்கொலைசெய்யாதுகுழகனைப்பூசைசெய்யுஞ்
சம்புவும்வலஞ்செய்தேகுஞ்சைவநன்னெறிபால்வண்டுந்
தும்பியுங்கள்ளுண்ணுதசோலையிற்காலைசேர்ந்தான். ௫௨

திங்களாறிரண்டுஞ்சூழ்ந்துதிங்கள்செங்கதிருடாடாப்
பொங்கரினிருள்களெல்லாம்புரையறவிழுங்கவேண்டி
யங்கியுமதியுமாங்கோருருவுகொண்டணைந்தாலென்னத்
தங்குசெஞ்சடிலமேனித்தவளநீறிலங்கப்புக்கான். ௫௩

